# நன்னூல் உரைத்தெளிவு

(எழுத்து)















கு. மா. திருநாவுக்கரசு.

# நன்னூல் உரைத்தெளிவு

(எழுத்ததிகாரம்)




வித்துவான் கு. மா. திருநாவுக்கரசு,

தமிழ்விரிவுரையாளர்.

செந்தமிழ்க்கல்லூரி, மதுரை-1.

# முகவுரை.

முன்னூல் ஒழியப் பின்னூல் பலவினுள்
நன்னூலார் தமக்கு எந்நூலாரும்
இணையோ என்னும் துணிவே மன்னுக.

—இலக்கணக்கொத்து நூலார்.

தமிழ்மொழியில் பிற்காலத்துத் தோன்றிய இலக்கண நூல்களுள் சிறந்து விளங்குவது பவணந்தியார் எழுதிய நன்னூலாகும். இந்நூல் எழுத்து சொல் என்னும் இருபிரிவுகளைக்கொண்டு இலங்குகின்றது. இதற்கு அமைந்த உரைகளுள் சங்கரநமச்சிவாயப்புலவர் செய்த விருத்தியுரையினைத் திருத்திப் புதுப்பித்த தவத்திரு. சிவஞானமுனிவரதுரையே அகலத்தாலும் ஆழத்தாலும் சாலச் சிறந்து விளங்குகின்றது. இதுவே இன்று இளம்புலவர் (Preliminary) தேர்வெழுதுவோர்க்குப் பாடமாக அமைந்துள்ளது. இவ்வுரை திட்பமும் நுட்பமுங்கொண்டு செறிந்து விளங்குவதால் மாணவர்களும், மற்றவர்களும் தாமே படித்துப் புரிந்துகொள்ளும் முறையில் தெளிவுபடுத்த விரும்பினேன். இந்நூலை இரண்டு பகுதிகளாக வெளியிட விரும்பி முதற்கண் முதற்பகுதியாகிய எழுத்ததிகாரத்தை வெளியிடுகின்றேன். இரண்டாவது பகுதியாகிய சொல்லதிகாரம் இன்னும் ஒருதிங்களில் வெளிவந்துவிடும் எனத் தெரிவித்துக் கொள்கின்றேன். இந்நூலின் பிற்பகுதியில் சென்னைப் பல்கலைக் கழகத் தேர்வு (10 ஆண்டு) வினாத்தாள்களையும் சேர்த்துள்ளேன். இது மாணவர்கட்கு நன்கு பயன்படும் என்பது உறுதி. இந்நூலில் இரண்டோரிடங்களைத்தவிர, ஏனையவிடங்களில் வருவனவெல்லாம் சிவஞானமுனிவரது உரைக்கு அமைந்த விளக்கம் என்பதை மனத்திற்கொண்டே படிக்கவேண்டும்.

எனது கையேட்டுப்படிகளை ஒரேநாளில் படித்து நன்முறையில் திருத்திக்கொடுத்த என் தமையனார் வித்துவான் கு. மா.நாராயண சாமிப்பிள்ளை அவர்கட்கு என் வணக்கங்கலந்த நன்றியுரியது.

நன்னூல் விருத்தியுரையினைத் தெளிவுபடுத்தும் இந்நூலுக்கு 'நன்னூல் உரைத்தெளிவு' எனத் தக்கபெயரைச் சூட்டியதோடு, இந்நூலை வெளியிடுவதற்குப் பல்வழியிலும் துணைபுரிந்தவரும் திருவருள் அச்சகத்தின் தலைவருமாகிய பேராசிரியர் உயர்திரு. ப. சோதிமுத்து, M. A., B. D. அவர்கள் இதற்கு நல்லதோர் அணிந்துரையை நல்கி யுள்ளார்கள். அவர்கட்கு என் மனமுவந்த நன்றியுரியது.

இந்நூல் மிகவிரைவில் வெளிவருவதற்குப் பெரிதும் துணை புரிந்து, எனக்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்தவர் என்கெழுதகை நண்பரும் திருவருள் அச்சகத்தின் பொறுப்பாளருமாகிய புலவர் த. ச. இராசாமணி (தலைமைத் தமிழாசிரியர், நாடார் உயர்பள்ளி, தெற்குவாயில், மதுரை.) அவர்களாவார்கள். அவர்கட்கு என்றுங் கடப்பாடுடையேன்.

'தொல்காப்பிய வழிகாட்டி'யை வரவேற்று ஆதரவுதந்த தமிழுலகம் இந்நூலையும் நன்கு வரவேற்று ஆதரவு தரும் என்று நம்புகின்றேன்.

மதுரை-1,
22-8-64.

அன்பன்,
கு. மா. திருநாவுக்கரசு

# அணிந்துரை.

பேராசிரியர் ப. சோதிமுத்து. M.A., B.D.
*தமிழ்த்துறைத் தலைவர்,*
*அமெரிக்கன் கல்லூரி, மதுரை-2.*

தமிழ்மொழி மிகவுந் தொன்மைய மொழிகளில் ஒன்ருகும். அதுமட்டுமன்றி, அது தொன்றுதொட்டு இன்றுவரை நிலவிவருகின்றது; ‘என்றுமுள தென்தமிழ்’ ஆகையால் அஃது என்றும் நிலவிவரும். மேலும் அஃது இலக்கணச் செறிவும் படைத்தமொழி. இதுவரை நமக்குக் கிடைத்துள்ள நூல்களில் காலத்தால் மிகவும் பழையது **தொல்காப்பியம்** என்னும் இலக்கண நூலேயாம்.

தொன்றுதொட்டு இயங்கிவரும் இயல்புடைய மொழி ஒன்று, நாளடைவில் சில பல மாறுதல் அடையப்பெறும். காலத்துக்குக் காலம் புதுப்புது நூல்கள் எழ, புதுப்புதுக் கருத்துக்கள் தோன்ற, பழையன கழிதலும் புதியன புகுதலும் தடுக்கமுடியாத நிகழ்ச்சியாகும். எனவே, மொழிப் புலவர்களும் இதன் உண்மையை நன்கு ஓர்ந்து, அவ்வக் காலத்து வழங்கிவரும் மொழியின் இயல்புக்கேற்ப, புதுப் புது இலக்கணங்களும் வரைந்து தருவர். நம்மொழி இதற்கு விலக்கன்று. எனவே பண்டைய தொல்காப்பியத்துக்குப் பல நூற்ருண்டுகள் கழித்து **நன்னூல்** என்னும் மற்ருேர் இலக்கணநூல் இயற்றப்பட்டுள்ளது.

இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் என்பர். இலக்கண நூலாசிரியர் தமதுகாலத்தில் வழங்கிவரும் மொழியின் இயல்புக்கேற்பத்தான் இலக்கணம் காண்பர். தாமேபாடஞ் சொல்லுங்கால் தக்க மேற்கோள் காட்டி, எல்லாவிதிகளையும் விளக்கிச்செல்வர். ஆனுல் 'அவர்காலத்துக்குப் பிற்பட்டுவரும் ஆசிரியர்க்கும் மாணவர்க்கும் பயன்படும் பொருட்டு, அவ்விலக்கணநூல்களுக்கு உரைகாண்பது மிகவும் வேண்டத்தக்கது. எனவேதான், தொல்காப்பியத்துக்

குப் பல உரைகள் வெளிவரலாயின. அதுபோன்றே, நன்னூல் என்னும் இலக்கண நூலுக்கும் பலர் பலவிதமாக உரைகள் இயற்றியுள்ளனர். உரைக்கு உரை வேறுபடுவது இயல்பு. இவற்றைப் படிக்கமுயலும் மாணவர் இவ்வேறுபாடுகண்டு மயங்கநேரிடும். இம்மயக்கத்தைத் தெளிவிக்கும்பொருட்டு வெளிவந்துள்ளது **நன்னூல் - உரைத் தெளிவு** என்னும் இப்புதுநூல்.

இந்நூலாசிரியர் திரு. கு. மா. திருநாவுக்கரசு அவர்கள் மதுரைத்தமிழ்ச்சங்கம் நடத்திவரும் செந்தமிழ்க்கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றி வருகின்றார் ஆகையால் தாம் மாணவர்க்கு நன்னூல் பாடஞ்சொல்லுங்கால் அவர்கள் மனத்தில் எழக்கூடிய கேள்விகளையும், ஐயங்களையும் நுண்ணுணர்ந்து, ஆங்காங்குத் தடைகளையும் விடைகளையும் எழுப்பி, அவற்றிற்குத் தகுந்த விடைகளையும் காட்டிச்செல்கின்றார். எனவே, வித்துவான், பண்டிதர், புலவர் பட்டங்களுக்குப் பயிலும் மாணவர்க்கு இந்நூல் இன்றியமையாக் கைந்நூலாகப் பயன்படும் என்பதற்குச் சிறிதும் ஐயமின்று.

இந்நூலாசிரியர் ஏற்கெனவே தொல்காப்பியத்துக்கும் வழிகாட்டி ஒன்று அமைத்துத் தந்திருக்கிறார். அதன் பயனைக் கண்டறிந்த தமிழ் உலகம் இந்நூலையும் மகிழ்ந்தேற்கும்.

**நன்னூல்-உரைத்தெளிவு** நன்கு, துப்புரவாக அச்சிடப்பெற்றுள்ளது.

இதுபோன்ற இதரமுயற்சிகளிலும் இந்நூலாசிரியர் ஈடுபட்டு, மேலும் தமிழ்த்தொண்டுபுரிவார் என நம்புகின்றேன்.

*மதுரை-2.*
*21—8—1964.*

(ஒப்பம்) *ப. சோதிமுத்து.*

## நூலாசிரியரைப் பற்றிய குறிப்புக்கள்.

பெயர். — பவணந்தி முனிவர்.

தந்தை, ஆசிரியர். — சன்மதி முனிவர்.

காலம். — கி-பி. 1178 — 1216, (மூன்றும் குலோத்துங்கன் காலத்தவனும், கங்கர் மரபினனுமாகிய சீயகங்கன் காலம்)

ஊர். — சனகை. (தொண்டைநாட்டுச் சனநாகபுரம் என்பர் சிலர், கொங்குநாட்டுச் சனநாதபுரம் என்பர் சிலர்.)

சமயம். — சமணம்.

1) "சன்மதி முனியருள்......நாமத் திருந்தவத்தோன்" என்று பாயிரம் கூறுகின்றது.

2) கடவுள்வாழ்த்துப் பகுதிகளில், பூமலி யசோகின்......நான்முகன்' என்றும் 'முச்சக நிழற்றும்......அச்சுதன்' என்றும் கூறி, அருகக்கடவுளையே வணங்குகின்றார்.

3) 'மொழி முதற்காரணம்...' என்னும் நூற்பாவில் எழுத்திற்கு முதற்காரணம் அணுக்கூட்டம் எனக் கூறுகின்றார். அவ்விடத்து, 'இவ்வாசிரியருக்கு மாயை உடன்பாடன்று; ஆதலின் அணுவைக் கூறினார்' எனச் சிவஞானமுனிவர் கூறுகின்றார். இவைகளே இவரது சமயம் சமணம் என்பதற்குச் சான்றுகளாகும்.

செய்வித்தோன் — சீயகங்கன்; கங்கர் மரபைச் சார்ந்தவன்; 'திருந்திய செங்கோற்சீயகங்கன்; அருங்கலை விநோதன்; அமராபரணன்' எனப் புகழப்படுபவன்.

நூலை இயற்றக்காரணம். — சீயகங்கனது வேண்டுகோளும், யாவர்மாட்டும் கொண்ட அருளுடைமையும்.

சிறப்பு. — சைனரில் துறவிகளை 'நந்தி' என்றழைப்பது மரபு ஆதலின் இவர் சைனமதத்துறவி என்பது அறியப்படும். தமிழ், வடமொழி ஆகிய இருமொழி களிலும் மிகச்சிறந்த புலமையுடையவர்; இலக்கியங் கண்டு இலக்கணம் இயம்பும் கூரிய அறிவுடை யவர்.

## நன்னூல் ஐந்ததிகாரத்தால் முடிவுபெற்றது என்பதற்குச் சான்றுகள்.

1) 'பழையன கழிதலும் புதியன புகுதலும் என்னும் சொல்லதிகாரத்திறுதி நூற்பாவுரையின் தொடக்கத்தில் இந் நூலிற் சொன்ன ஐந்ததிகாரத்துக்குஞ் சிங்கநோக்காய் நிற்ப தோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று. இவ்வாறே மேல் வரும் அதிகாரங்களிலும் கண்டுகொள்க' என்று மயிலை நாதர் உரைக்குறிப்பில் எழுதப்பட்டுள்ளது. இதனுள் சிங்க நோக்கென்றது நடுவுநின்றது இருபக்கமும் நோக்குதலாம். இவ்வுரையாசிரியர் இந்நூலின் பிற்பகுதியாகிய பொருள், யாப்பணி யிலக்கணங்களைக் கண்கூடாகக் கண்டாலன்றி 'ஐந்ததிகாரத்திற்கும் இது புறனடை' எனக் கூறுர் என்பது திண்ணம்.

2) சிறப்புப்பாயிர வுரையுள், "இயற்றமிழை, அரும் பொருளைந்து எனக் கூறினமையின் இந்நூலுட் கூறிய பொருள், யாப்பு, அணிகள் அக்காலத் துள்ளனபோலும்" எனச் சிவஞானமுனிவர் குறிப்பிடுகின்றுர்.

3) பிள்ளை லோகாசாரியசீயர் பெரியதிருமொழிப் பாயிரவுரையுள் "தமிழ நன்னூற்றுறைகளஞ்சு" என்பதன் பொருளை விளக்குகின்றுர். அவ்விடத்துத் "திராவிட சாத் திரம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்கிற ஐந் திலக்கணத்தோடு கூடியிருப்பது. தமிழுக்கு எழுத்து முத லான ஐந்து இலக்கணத்தையும் அறுதியிடுவதான நன்னூல் என்று ஒரு சாத்திரமுண்டு" என்று எழுதியுள்ளார்.

4) 'பல்வகைத் தாதுவின்......' (சொல்...268) என்ற நூற்பாவில் செய்யுளுக்கு இன்றியமையாத உறுப்புக்கள் ஏழு என்றும், பொருள்—அதன் உயிர்; அணிகள் அதனைச் சிறப்பிப்பன என்றும் தோற்றுவாய் செய்தலின் ஐந்தனை யுமே கூறினுராதல் வேண்டும் எனச் சிலர் கூறுவர்.

இங்குக் கூறப்பெற்றவைகளே நன்னூல் ஐந்ததிகாரத் தால் முடிவு பெற்றது என்பதற்குச் சான்றுகளாம்.

## நன்னூலின் ஆக்கியோன் பெயர் முதலிய பதினொன்று மாவன :-

(1) ஆக்கியோன் பெயர் — பவணந்தி முனிவர்.

(2) வழி — முன்னோர் நூலின் வழி.

(3) எல்லை — குணகடல், குமரி, குடகம், வேங்கட மெனும் நான்கெல்லை.

(4) நூற்பெயர் — நன்னூல்.

(5) யாப்பு — இன்னது கேட்டபின் இது கேட்கற்பாற்று என்னும் இயைபு. ஈண்டு. நிகண்டு கற்று இலக்கியத்தை ஆராய்ந்த பின்னர் இந்நூல் கேட்கத்தக்கது என்பதைக் குறிக்கும்.

(6) நுதலிய பொருள் — எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் அரும்பொருளைந்து.

(7) கேட்போர் — இலக்கியத்தை ஆராய்ந்தோர் இது கேட்டற்குரியார்.

(8) பயன் — மொழிக்கண் உளவாகும் முட்டினை (சிக்கலை) அறுத்தல்.

(9) காலம் — 'சீயகங்கன் மொழிந்தனனுக வகுத்தனன்' எனவே அவனது காலம்.

(10) களம் — அவனது அவைக்களம்.

(11) காரணம் — சீயகங்கன் மொழிந்தமையும், யாவரிடத் தும் இரக்கமுடைமையும்.

## ஆக்கியோன் பெயர் முதலிய எட்டனையும் முன்னர் உணர்த்தற்கு விருத்தியுரைகாரர் கூறும் காரணமாவது :-

ஒரு நூலைக் கேட்கவெண்ணிய நன்மாணுக்கர்க்கு முதற்கண் வேண்டுவது மனவூக்கம். அவ்வூக்கம் எழவேண்டுமாயின், "அந்நூலிற் கூறப்படும் பொருள் யாது? அதனைக் கேட்டலாற் பெறப்படும் பயனென்ன? அதனைக் கேட்பதற்குரியவர் யார்? வேறு எந்நூற்களைக் கற்றபின் இந்நூல் கேட்கத்தக்கது?" என்னும் நான்கினையும் முதற்கண் உணரவேண்டும். ஆதலின் இன்றியமையாச் சிறப்பினவாகிய (நுதலியபொருள், பயன், கேட்போர், யாப்பு- ஆகிய) இந் நான்கினையும் முன்னர் உணர்த்தல் வேண்டும்.

இந்நான்கினையு முணர்ந்தாலும், கற்று வல்ல சான்றோரல்லராற் செய்யப்பட்ட நூலாயின், 'கூறியது கூறல் முதலிய குற்றமுடையதாமன்றோ? எனவும், "கற்றுவல்ல சான்றோரும் வேறொரு கொள்கைபற்றிச் செய்தால், முன்னோர் நூலொடு மாறுபடுமன்றோ?" எனவும் ஐயம் எழும். அவ்வையம் எழுந்தால் அதனைக் கேட்டற்கண் ஊக்கம் செல்லாது. ஆதலின் அவ்வையத்தை நீக்குதற் பொருட்டு, ஆக்கியோன் பெருமையும், நூற்பெருமையும், அந்நூல் வழங்கும் நிலமும், அதன் முதனூலும் இவையென்பது விளங்க, ஆக்கியோன் பெயரும், நூற்பெயரும், எல்லையும், வழியும் ஆகிய நான்கினையும் முன்னவற்றோடு சேர்த்து உணர்த்தல் வேண்டும். இவ்வாறு, ஆக்கியோன் பெயர் முதலிய எட்டனையும் முன்னர் உணர்த்தற்கு விருத்தியுரைகாரர் காரணம் கூறுகின்றார்.

## ஆக்கியோன் பெயர் முதலிய எட்டற்கும் காலம் முதலிய மூன்றற்குமுள்ள வேற்றுமை:-

| ஆக்கியோன் பெயர் முதலிய எட்டு. | காலம் முதலிய மூன்று. |
| --- | --- |
| இவை, நூல்செய்தார்காலத்தும் நூல் வழங்குங் காலத்தும் ஒப்ப (சமநிலையில்)நிகழ்பவை. எனவே, இவற்றை உறுதியாக உணர வேண்டுதலின் இவை எல்லா ஆசிரியராலும் கொள்ளப்பட்டன. | இவை நூல்செய்தார் காலத்துமட்டும் நிகழ்ந்தவை. கழிந்தவற்றை யுணர்தலால் பெரும் பயனில்லை யாதலின் இவை சிலரால் மட்டும் கொள்ளப் பட்டன. |

## ஆனந்தரியம், சம்பந்தம் - விளக்கம் :-

ஆக்கியோன் பெயர் முதலிய பதினொன்றனுள் ஒன்றுகிய 'யாப்பு' என்பதனை வடநூலார் 'ஆனந்தரியம்' என்பர். யாப்பு, இயைபு, தொடர்ச்சி என்பன ஒருபொருட்கிளவி. ஆகவே, இந்நூல் கேட்டபின் இது கேட்டற்குரியது என்னும் இயைபே வடநூலாரால் ஆனந்தரியம் எனப்பட்டது என்றறியலாம். இனி, வடநூலாருள் ஒருசிலர் 'யாப்பு' என்பதனை 'ஆனந்தரியம்' எனக் கூருது, சம்பந்தம் எனக் கூறுவர். அதற்கு அவர் கூறும் காரணம் 'ஆனந்தரியம்' என்பது நூலைப் பயப்பிப்பதற்குக் காரணமாய்க் கேட்போரை விசேடிக்கிறதேயன்றி நூலை விசேடித்து அதன் இயைபை விளக்கவில்லை ஆதலின் அவர்கள் 'யாப்பு' என்பதனைச் 'சம்பந்தம்' என்ற பெயரால் அழைப்பர். சம்பந்தம் என்பது நூலுக்கும் நூல்நுதலிய பொருளுக்குமுள்ள இயைபை யுணர்த்துவது ஆதலின் 'சம்பந்தம்' என்பதனைக் கொண்டு 'ஆனந்தரியம்' என்பதனை விலக்குவர். நமது தமிழில் கூறப்படும் 'யாப்பு' என்னும் பொதுச்சொல்லால் 'சம்பந்தம்' என்பதனைக் கொள்ளலாம். எனவே நூற்கும் நுதலிய பொரு

ளுக்கும் வகுப்பதும் வகுக்கப்படுவதுமாகிய 'சம்பந்தம்' என் பது பெறப்பட்டது. வடநூலார் எப்படி மாறுபடினும் ஆனந் தரியம், சம்பந்தம் என்ற இரண்டும் யாப்பு என்ற பொதுச் சொல்லில் அடங்கியிருத்தலை அறியலாம்.

## "வாய்ப்பக் காட்டல் பாயிரத்தியல்பே"-'வாய்ப் பக் காட்டல்' என்றதனுல் அறியப்படுவன:-

ஆக்கியோன் பெயர் முதலியனபோல அத்துணைச் சிறப் பிலவாய், அவ்வவற்றிற்கு இனமாய்க் காட்டப்படுவ னவுமுள.

அவையாவன:-

| சிறப்புப்பாயிரம். | அவற்றிற்கு இனமாய் வருவன :- |
|---|---|
| (1) ஆக்கியோன் பெயரே யன்றி, | ஆக்குவித்தோன்பெயர் கூறு தலும், |
| (2) வழியேயன்றி, | அதன் வகையாகிய தொகுத்தல் முதலிய நான்கினுள் ஒன்ருகு மாறு கூறுதலும், |
| | தன் முதனூலுக்குவழிகூறுதலும், அது வந்த மரபுவழி]கூறுதலும், |
| (3) பொதுவெல்லை கூறுதலே யன்றி, | செந்தமிழ் முதலியவற்றின் சிறப் பெல்லை கூறுதலும், |
| (4) நூற்பெயரே யன்றி, | அதிகாரம், இயல் ஆகியவற்றின் பெயர் கூறுதலும், |
| (5) (அ) நூற்கியைபு கூறுதலேயன்றி, | நூலினுள் அதிகாரம் முதலியவற் றிற்கு இயைபு கூறுதலும், |

| | | |
|---|---|---|
| | (ஆ) சம்பந்தம் காட்டுவார் கொள்கைப் படி, நூற்கும் நூல்நுதலிய பொருட்குங் கிழமை (தொடர்பு) கூறுதலே யன்றி, | நூல் நுதலிய பொருட்கும் பயனுக்கும் கிழமை கூறுதலும், நூற்கும் நூல் செய்தோனுக்கும் கிழமை கூறுதலும், |
| (6) | நூல் நுதலிய பொருளே யன்றி, | அதிகாரம், இயல், சூத்திரம் ஆகியவை நுதலிய பொருள் கூறுதலும், |
| (7) | கேட்போரேயன்றி, | கேட்பிப்போரைக் கூறுதலும், |
| (8) | பயனே யன்றி, | பயனுக்குப்பயன் கூறுதலுமாம். |

## பயனுக்குப் பயனுவது :

இயற்றமிழை (எழுத்திலை) யறிய, எழுதுதற் கண்ணும் பேசுதற் கண்ணும் உண்டாகும் குற்றங்கள் நீங்கும்; அங்ஙனம் குற்றங்கள் நீங்கிய இலக்கண அறிஞன் மொழிக்கண் உண்டாகும் முட்டுக்களை (இடையீடுகளை) நீக்கியவனுவான்; அங்ஙனம் மொழிக்கண்ணுள்ள முட்டுக்களை நீக்கிய அறிஞன், கடவுளும், அவன் அருள்வழி நின்ருேரும் செய்த நூற்பொருளை அறிந்து, கட்டு(பாச பந்தம்) நீக்கி நிலைத்த வீட்டின்பத்தை அடைவான். இதுவே பயனுக்குப் பயனுகும்.

## நன்னூலார் இயற்றமிழ் ஒன்றற்கு மட்டும் இலக்கணம் கூறியதன் காரணம்:-

இசைத்தமிழ், மன ஒருமைப்பாட்டிற்கும், நாடகத்தமிழ் அதனேடு பொருளுணர்விற்கும் கருவியாகுமேயன்றி, இயற்றமிழ்போல் முதனூற் பொருளையுணர்தற்குக் கருவி (காரணம்) ஆகா. ஆதலின் நன்னூலார் இயற்றமிழ் (எழுத்து) ஒன்றற்குமட்டுமே இலக்கணம் கூறினர்.

## பாயிரம் பொது எனவும், சிறப்பு எனவும் இரு வகைப்பட்டதன் காரணம் :-

''(ஆக்கியோன் பெயர் முதலிய) சிறப்புப் பாயிரத்தின் வகைகளுள் 'கேட்போர்' என ஒன்றுளது. 'வாய்ப்பக் காட்டல்' என்ற மிகையால் கேட்பிப்போர் என்பதும் சிறப்புப்பாயிரத்தின் வகையாகச் சேர்க்கப்பட்டுள்ளது. ஆகவே, கேட்போர்-மாணுக்கரையும், கேட்பிப்போர்-ஆசிரியரையும் குறிக்கும். எனவே மாணுக்கர், ஆசிரியர் ஆகிய இவ்விரண்டின் இலக்கணங்களும் பொதுப்பாயிரத் துள் கூறப்படுகின்றன. அதனுல் அவ்விரண்டையும் சிறப் புப் பாயிரத்தின் வகைகளாகச் சேர்க்கவேண்டியதில்லை' என்பது இங்கெழும் வினு,

### அதற்கு விடை :-

பொதுப்பாயிரத்துள் கூறப்படும் நூற்பாக்களால் பொது வகையான் ஆசிரியர்க்கும், மாணுக்கர்க்கும் இலக்கணம் பெறப்பட்டன அல்லது, இந்நூற்கு இன்னுரென்னும் சிறப்பு வகை பொதுப்பாயிரத்துள் பெறப்படாமையான் இது சிறப் புப் பாயிரத்துள் சேர்க்கப்பட்டது.

ஈண்டு இது சேர்க்கப்படவில்லையேல்,

சிற்றறிவினேர் பெருநூலும், பேரறிஞர் சிறுநூலும், முத் தமிழுள் ஒரு நூற்குரியோர் ஏனையிரண்டு நூலும், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு நூலுள் ஒன்றற் குரியோர் ஏனை மூன்று நூலும் கேட்கப் புகுந்து இடர்ப்பட்டு மயங்குவர் ஆதலின் இஃது ஈண்டு உறுதியாகச் சேர்க்கப் படல் வேண்டும். இதுபற்றியே, பாயிரம் பொது எனவும், சிறப்பெனவும் இருவகைப்பட்டதாயிற்று.

## கேட்போர், யாப்பு - என்பனவற்றிற்குப் பிறர் கூறும் உரையும், சிவஞானமுனிவரது மறுப்பும் :-

### இளம்பூரணர் முதலியோர் கூறும் உரை :-

கேட்போர் — நூலரங்கேறும் அவைக்களத்துக் கேட்டோர்.

யாப்பு — தொகை, வகை, விரி முதலிய (வழியின்) பாகுபாடுகள்.

### மறுப்பு:-

(1) **'ஆக்கியோன்** பெயர்', **'நுதலிய** பொருள்' என்பனபோலக் 'கேட்டோர்' என இறந்தகாலத்தாற் கூருது, 'கேட்போர்' என எதிர்காலத்தாற் கூறியதே அஃது உரையன்மைக்குச் சான்றாகும்.

(2) 'அவைக்களத்துள் கேட்டோர்' என்பது சிறப்புப் பாயிரத்தின் வகைகளில் கூறப்பட்டுள்ள காலத்துள்ளும், களத்துள்ளும் அடங்கும். ஆதலின் 'கேட்டோர்' என வேறு கூறவேண்டுவதில்லை.

(3) ஆக்கியோன் பெயர் முதலிய (முன்னர் உணர்த்தப்பட்ட) எட்டும் நூல் செய்தார் காலத்தும், நூல்வழங்குங் காலத்தும் நிகழ்வன. ஆனல் 'கேட்டோர்' என்பதோ நூல் செய்தார் காலத்து மட்டுமே நிகழ்வது. ஆதலின் அவற்ருெடு இதனை ஒருங்குவைத்து எண்ணல் பொருந்தாது.

(4) கேட்பதற்குரிய அதிகாரிகளாவாரை உறுதியாக ஈண்டு (சிறப்புப்பாயிரத்துள்) உணர்த்த வேண்டும்.

(5) தொகுத்தல் முதலியன சிறப்புப்பாயிரத்தின் வகைகளுள் ஒன்ருன 'வழி' என்பதனுள் அடங்கும் ஆதலின் அவற்றை வேறுகூற வேண்டுவதில்லை.

(6) இயையும் உறுதியாக உணர்த்தப்பட வேண்டும்.

(7) சிவஞானமுனிவர் கூறிய உரையே வடநூலார்க்கும் உடன்பாடாகும்.

இத்தகைய காரணங்களால் 'பிறர் கூறுமுரை போலியுரை' எனக்கூறி மறுத்துள்ளார் சிவஞானமுனிவர்.

## பாயிரத்தின் வேறு பெயர்களும், அவற்றின் பெயர்க் காரணங்களும்.

பாயிரம் என்பதற்கு வரலாறு என்பது பொருள்.

அதன் வேறு பெயர்கள். காரணங்கள்.

(1) முகவுரை — பாயிரத்தின் இலக்கணங்களை முன் உணர்ந்தல்லது நூல்களைச் செய்தலும் அவற்றை ஈதலும், ஏற்றலும் முடியாமை கருதி முன்னுரைத்தலின் 'முகவுரை'யாம்.

(2) பதிகம் — 'பதிகக்கிளவி பல்வகைப் பொருளைத் தொகுதியாகச் சொல்லுதல் தானே' என்பர் ஆதலின் மேல்வகுக்கும் ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பல்வகைப் பொருளையும் தொகுத்துச் சொல்லுதலின் 'பதிகம்' ஆம்.

(3) அணிந்துரை — நூலினது பெருமை முதலியன விளங்க அணிந்துரைத்தலின் 'அணிந்துரை'யாம்.

(4) நூன்முகம் — முகவுரை என்றது போல 'நூன்முகம்' ஆம். இனி, நூலுக்கு முகம்போலச் சிறந்திருத்தலின் நூன்முகம் எனினுமாம்.

(5) புறவுரை — நூலுள் கூறப்படும் பொருளல்லாத நுவல்வோன்திறன் முதலியவற்றை யுரைத்தலின் 'புறவுரை'யாம்.

(6) தந்துரை — நூலுக்கு இன்றியமையாதனவும், நூலுள் கூறப்படும் பொருளல்லாதனவுமாகிய உத்தி, மதம், அழகு முதலியவற்றை நூலுக்குத் தந்து உரைத்தலின் 'தந்துரை'யாம்.

(7) புனைந்துரை — 'அணிந்துரை' என்றது போலப் 'புனைந்துரை'யாம். (1)

## 'பொதுப்பாயிரம் நான்கு' என்பார் கூற்றுப் பற்றிய தடைவிடைகள் :-

'ஈவோன்தன்மை, ஈதலியற்கை, கொள்வோன்தன்மை, கோடன்மரபு என நான்கு வகைப்படும் பொதுப்பாயிரம்' என்பர் இளம்பூரணர் முதலியோர். அவர்கள் 'நூல்' என்ற ஒன்றை விட்டொழித்தனர். அங்ஙனம் நூலை நீக்கிப் பொதுப்பாயிரத்தை வகைப்படுத்தல் பொருந்துமா எனின், பொருந்தாது. ஏனெனின் பாயிரம் கூறுதல் நூல்கட்கன்றிப் பிறவற்றிற்கன்று. ஆதலின் நூலின் வரலாறு ஒன்றையே உறுதியாகக் கூறவேண்டும். அதனோடு ஆசிரியன் வரலாறு முதலிய நான்கினையும் உடன்கூறுதல் எதுகருதியெனின், வரலாற்றுமுறைமையின் வாராதார் நூல்களைக் கற்பிக்கவும் கற்கவும் புகுந்தால், 'பொய்படுமொன்றோ புனைபூணும் கையறியாப் பேதை வினைமேற்கொளின்' (குறள்) என்றவாறு அமைந்து, நூல்கள் அருமையும் பெருமையும் கெட்டுப் பயன்படாவாம் என்பது கருதியேயாம்.

ஆயின், நூன்முகத்து உரைக்கப்படும் பாயிரவுறுப்பினுள் நூலைக் கூறுவது பொருந்ாதெனின், இவ்விலக்கணத்தா னமைபவன் ஆசிரியன் என்றாற்போல, இவ்விலக்கணத்தா னமைவது நூல் என்றதன்றிப் பாயிரத்துள் நூலைக் கூறியதன்று. ஆதலின் தொல்காப்பியர் நூலினியல்பை (ஒத்துறுப்பாகிய) மரபியலுள் கூறினாற்போல இவ்வாசிரியர் பாயிரவுறுப்பினுள் கூறினார். (3)

## வழிநூலின் இலக்கணங் கூறுமிடத்துப் ‘பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி’ என்பதன் பொருள் :-

பின்னோன் வேண்டும் விகற்பங் கூறுதலாவது:— பழைய இலக்கணங்களாகி இக்காலத்து வழங்காதவைகளை ‘இறந்தது விலக்கல்’ என்னும் உத்தியாலே விலக்கியும், புதிய இலக்கணங்களாகி இக்காலத்து வழங்குபவைகளை ‘எதிரது போற்றல்’ என்னும் உத்தியாலே தழுவியுங் கூறுதல் முதலியன. ‘முனைவன் கண்டது’ என ஒருமையாற் கூறிய பின்னர் ‘முன்னோர்நூல்’ எனப் பன்மையாற் கூறியது பற்றி விளக்கம்:—

இறைவன் நூலையும், அவனருள் வழிப்பட்டுத் தத்தம் மரபின் வரும் ஆன்றோர் பலர் நூலையும் தழுவிக்கொள்ளற் பொருட்டு வழிநூல் கூறுமிடத்து ‘முன்னோர் நூல்’ எனப் பன்மையாற் கூறினர். எனவே, முதனூல் மாத்திரையாய் நிற்பது இறைவன் நூலும், வழிநூல் மாத்திரையாய் நிற்பது இறுதி நூலுமன்றி, இடைநிற்கும் நூல்களெல்லாம் முதனூலாயும் வழிநூலாயும் நிற்கும். எதுபோலவெனின் ஒருவற்கு மைந்தனாயினன் மற்றொருவற்குத் தந்தையாயினாற் போல. (7)

## மதங்கள் (கொள்கைகள்) ஏழு.

1. பிறர் மதத்திற்குத் தான் உடன்படுதல்.
2. பிறர் மதத்தை மறுத்தல்.
3. பிறர் மதத்திற்கு உடன்பட்டுப் பின்பு மறுத்தல்.
4. தானே ஒருபொருளை எடுத்து நாட்டி அதனைப் பல இடங்களிலும் நிறுத்தல்.
5. மாறுபட்ட கொள்கை இரண்டனுள் ஒன்றைத் துணிதல்.

6. பிறரது நூலில் உள்ள குற்றத்தை எடுத்துக் காட்டல்.

7. பிறரது மதத்திற்கு உடன்படாது தன் மதத்தையே கொள்ளுதல் என்பன. (11)

## குற்றங்கள் பத்து.

1. குறித்த பொருளை விளக்குதற்கு வேண்டுஞ் சொற்களில் குறைபடக் கூறுதல்.

2. குறித்த பொருளை விளக்குதற்கு வேண்டுஞ் சொற்களில் அதிகமாகச் சொல்லுதல்.

3. முன்சொன்ன பொருளையே பின்னும் காரணமின்றிச் சொல்லுதல்.

4. முன்சொன்ன பொருளுக்குப் பின்சொல்லும் பொருள் மாறுபடச் சொல்லுதல்.

5. குற்றமுடைய சொற்களைச் சேர்த்துவைத்தல்.

6. இதற்குப் பொருள் இதுவோ அதுவோ என மயங்கவைத்தல்.

7. பொருள் எனும் கருக்கொள்ளாது வறிதே சொற்களைச் சேர்த்துவைத்தல்.

8. சொல்லத் தொடங்கிய பொருளைவிட்டு மற்றொரு பொருளை இடையிலே விரித்துச் சொல்லுதல்.

9. செல்லச் செல்லச் சொற்செறிவு, பொருட்பொலிவுகள் தேய்ந்து முடியச் சொல்லுதல்.

10. சொற்கள் இருந்தும் ஒருபயனும் இல்லாதொழியச் சொல்லுதல் என்பன. (12)

## அழகின் வகைகள் - 10

1. சொற்கள் வீணாக விரியாமல் சுருங்கி நிற்கச் சொல்லுதல்.
2. சுருங்கச் சொல்லினும் பொருளை ஐயத்திற்கு இட மின்றி விளங்க வைத்தல்.
3. படிப்போர்க்கு இன்பத்தைத் தருதல்.
4. நல்ல சொற்களைச் சேர்த்தல்.
5. ஓசை (சந்தம்) இன்பமுடையதாதல்.
6. படிக்கப் படிக்க ஆழ்ந்த கருத்துக்களை உடைய தாதல்.
7. இயல், அதிகாரம் முதலியவற்றை முறைப்படி வைத்தல்.
8. உயர்ந்தோர் வழக்கத்தோடு மாறுபடாதவாறு சொல்லுதல்.
9. சிறந்த பொருளைத் தருதல்.
10. எளிதில் விளங்கத்தக்க உதாரணங்களை உடைய தாதல் என்பன. (13)

## மதம் ஏழனுள்ளும் அழகு பத்தனுள்ளும் வருவன சில உத்தியுள்ளும் காணப்படுதலும், அதற்குரிய காரணமும்:-

| **மதத்தினுள்** வருவன. | | **உத்தியுள்** காணப்படுபவை. |
|---|---|---|
| 1. இருவர் மாறுகோள் ஒருதலை துணிவு | — | ஒருதலை துணிதல். |
| 2. உடன்படல் | — | பிறநூல் முடிந்தது தானுடன் படுதல். |

3. தானுட்டித் தனுது நிறுப்பு. — தன்குறிவழக்கம் மிக வெடுத்து உரைத்தல்.

**அழகினுள்** வருவன. **உத்தியுள்** காணப்படுபவை.

1. விளங்க வைத்தல் — சொற்பொருள் விரித்தல்.

2. முறையின் வைப்பு — ஓத்துமுறை வைப்பு.

3. விளங்கு உதார ணத்ததாகுதல் — எடுத்துக் காட்டல்.

**காரணம்:-**

கொள்கை பற்றி 'மதம்' என்றும், சிறப்புப்பற்றி 'அழகு' என்றும், இந்த மதம், அழகு முதலியவெல்லாமே புத்தி நுட்பத்தால் அமைதல் பற்றி 'உத்தி' என்றும் கூறப்பட்டன.

அங்ஙனமாயின், மதம், அழகு எல்லாவற்றையுமே உத்தியின்பாற்படுத்திக் கூருது, சிலவற்றை மட்டும் (உத்தியினுளடக்கிக்) கூறியது என்ணயெனின், இங்குக் கூறப்பட்ட (முப்பத்திரண்டு) உத்திகளேயன்றி, உரையிற்கோடல், ஏற்புழிக்கோடல் முதலாக வேறுசில உத்திகளுமுள. ஆதலின் உத்தி வரம்பின்றி வரும் என்பது அறியப்படும். அங்ஙனம் வரும் உத்தியுள் **தலைமைபற்றி** 'முப்பத்திரண்டு' என வகைப்படுத்திக் கூறினர். ஆகவே இங்கு எடுத்துக் கொண்ட முப்பத்திரண்டு உத்திகளுமே தலைமையிடம் பெறுபவை என்பதும், ஏனையவை தலைமையிடம் பெருதவை என்பதும் பெறப்படும். ஆதலின் மதம், அழகு எல்லாவற்றையுமே உத்தியின்பாற்படுத்திக் கூருது, தலைமையிடம் பெறக் கூடிய சிலவற்றை மட்டும் உத்தியுள் அடக்கிக் கூறினர்.

(14)

**'நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது'**- இதன் விளக்கம்.

'நேரினம்' எனவே 'ஒருசாதியாயினும் தம்மில் ஒத்தனவே கூறல் வேண்டும் என்பதாம். இவ்வாறு நூல்

செய்தல் உயர்ந்தோர் கடன் என்றவாறு. நேர்தல்—ஒன்று படுதல்; ஒருதன்மைத்தாதல். இஃது ஓத்து (இயல்) என்னும் உறுப்பினிலக்கணத்தை யுணர்த்தும் நூற்பாவாகும்.

ஒருசாதியாயுள்ள மணிகளை வரிசையாகப் பதித்து வைத்தாற்போல, ஒருசாதியாயுள்ள பொருள்களை ஒரு வழிப்படக் கூறுவது 'இயல்' என்னும் உறுப்பாம் எனக் கூறுவர் உயர்மொழிப் புலவர்.

இந்நூற்பா, 'தானெடுத்து மொழிதல்' என்னும் உத்தியால் தொல்காப்பியத்தினின்றும் எடுத்துக்கொள்ளப் பட்டது. (16)

## குறி, செய்கை - விளக்கம்:-

**குறி:**—இது சூத்திர வகைகளுள் ஒன்று. அஃதாவது இவை உயிர், இவை ஒற்று, இவை பெயர், இவை வினை என்றாற் போன்று அறிதல் மாத்திரையாய் (அறிகின்ற அளவில்) வருவது. குறி என்பது:- அறிதலை யுணர்த்திய முதனிலைத் தொழிற்பெயர். எ-டு:- 'அம்முத லீராறுவி' என்றாற்போல வருவன குறிச்சூத்திரங்களாகும்.

**செய்கை:-** இதுவும் சூத்திர வகைகளுள் ஒன்று. செய்கைச் சூத்திரங்களைச் சிறப்பாக இரண்டு வகையில் அடக்கலாம்.

### 1. புணர்ச்சிச் செய்கை:-

பதமுன்-விகுதியும், பதமும், உருபும் புணரும் புணர்ச்சி விதி யறிந்து, அங்ஙனம் அறிதலளவில் நில்லாது, அவ்வாறு வேண்டுழிப் புணர்த்தலைச் செய்வது. எ-டு: 'ணனவல் லினம் வரட் டறவும்' என்றாற்போல் வருவன.

### 2. முடிபுச் செய்கை:-

பெயர், வினை முதலியன கொள்ளும் முடிவுவிதி யறிந்து அங்ஙனம் அறிதலளவில் நில்லாது, அவ்வாறு வேண்டுழி முடித்தலைச் செய்வது.

எ-டு:- 'முதலறு பெயரலது ஏற்பில முற்றே' என்றாற் போல வருவன.

## எல்லாச் சூத்திரங்களும் பிண்டம், தொகை, வகை, புறனடை யென்னும் நான்கனுள் அடங் குவனவாயிருக்க, குறியினையும், செய்கையினை யும் வேறோதியதுபற்றி விளக்கம்:-

எல்லா நூலுள்ளும் சொல்லப்படுவன அறிவதும், செய் வதுமன்றி வேறில்லை. ஆதலின் பிண்டமாக்கியும், தொகுத் தும், வகுத்தும், புறத்து அடைகொடுத்தும் கூறப்படுவன யாவும் குறியும், செய்கையுமே என்பது தோன்றற்குக் குறி யினையும், செய்கையினையும் வேறு ஓதினர். எனவே, எல்லா நூலுள்ளும் வரும் எல்லாச் சூத்திரங்களும் குறிச் சூத்திரம், செய்கைச்சூத்திரம் என இரண்டாயடங்கும் என்பது பெற்றும். (20)

## குறி, செய்கை - என்பனவற்றிற்குப் பிறர்கூறும் உரையும், மறுப்பும்.

### பிறர் கூறும் உரை.

'குறி - பெயர்களை யுணர்த்தும் சூத்திரம்.'

'செய்கை - எழுத்துப் புணர்ச்சியை யுணர்த்தும் சூத் திரம்.'

### மறுப்பு.

அங்ஙனம் கூறின், ஏனையிலக்கணங்களைக் கூறும் சூத் திரங்களையும், தனியே விரித்துக் கூறவேண்டும். பெயர் களையேயன்றி, ஏனையகுறியீடுகளையுணர்த்தும் சூத்திரங்களை யும், எழுத்துப்புணர்ச்சியையேயன்றி, முடிபுச்செய்கை முத லியவற்றை யுணர்த்தும் சூத்திரங்களையும் வேறு கூறுது 'குறி', 'செய்கை' எனப் பொதுவாகக் கூறியதனுல் அவற் றையும் இவ்விரண்டினுள்ளேயே அடக்க வேண்டும்.

மேலும், 'பெயருணர்த்தும் சூத்திரம்,' 'புணர்ச்சியுணர்த் தும் சூத்திரம்' என்றுல், பெயரும், புணர்ச்சியும் இவ்விலக்

கண நூற்குரியனவாய்ச் சிறப்புப்பாயிரமா யமையுமேயன்றி, எல்லா நூல்கட்குமுரியனவாகக் கூறப்படும் இப்பொதுப் பாயிரத்துள் கூறுதல் பொருந்தாமற் போய்விடும்.

இவ்விரண்டு காரணங்களால் பிறர் கூறுவது உரையன்று. (20)

## காண்டிகை - பெயர்க் காரணம்.

உரையெழுதுதற்கேற்ற பொருளடக்கமுள்ள சுருங்கிய சொற்களால் செய்யப்படுவது காண்டிகை; ஐவகை யுறுப்பும் (கருத்து முதலியன) நூற்பொருளுணர்ச்சிக்கு இன்றி யமையாதன. ஆதலின், காண்டிகையுரை கற்போன் மூலபாடங் கற்பதுபோலவே ஏடு பாராது வாய்ப்பாடமாகச் சொல்ல வல்லவனுதல் வேண்டும். அங்ஙனம் கல்லானுயின், அவனுல் முறையானே நூற்பொருளுணர்தல் இயலாது என்பது தெளிவு.

மிடற்றெலி யெழப் படித்து வாய்ப்பாடமாக வரப்பண்ணிய பாடத்தையே முகஸ்தம் (வாயிலுள்ளது), கண்டஸ்தம் (மிடற்றிலுள்ளது) எனப் பண்டிதர்கள் கொண்டாடுகின்றனர்.

எனவே, நியமமாகக் கண்டத்தை யுதவிக் கற்கத்தகும் உரை - காண்டிகை எனலாம். இங்ஙனம் கூறியதனுற் போந்த பொருள் மிடற்றெலி யெழப் படித்து வாய்ப்பாடமாக வரப்பண்ணத்தக்கது காண்டிகை என்பது. இதனுல் வாய்ப்பாடமாக வரப்பண்ண வியலாது விரிந்து பரந்து கிடந்த விருத்தியுரையின் வேறுபட்டதென்பதும் விளங்கும். ஆதலின் இது காரணக் குறி என்பது ஒரு வகை,

இனி இவ்வகையேயன்றி, அணிகல விசேடப் பெயராகிய கண்டிகையே காண்டிகையென உருவகம் பெற்று முதல் நீண்டது என்பது மொன்று. இப்பொருளில் மணித்தாழ்வடம், மணி கண்டிகை, மகர கண்டிகை என வழங்கும் அணிகலப் பெயரானும் அறியப்படும். அவ்வணி

கலன் நெஞ்சினும், மிடற்றினும் நிலவத் தரிக்கத்தக்கது என்பது பெறப்படும். இதனுல் மனப்பாடமும், வாய்ப்பாடமுமாக வரப்பண்ணற்பாலது காண்டிகையுரை என்றவாருயிற்று: ஈண்டு நெஞ்சு, மிடறு என்பன உபசாரவழக்காய் மனமும், தொண்டையுமாகிய உள்ளுறுப்புக்களையுணர்த்தின.

இங்ஙனம் கொள்ளுதலால் ஆசிரியர் காண்டிகை எனப் பெயரிடும் முகத்தானே அதனை மனப்பாடமும் வாய்ப்பாடமுமாக வரப்பண்ண வேண்டுமெனக் கற்போர்க்கும், கற்பிப்போர்க்கும் கற்கும்முறையும், கற்பிக்கும்முறையும் சொல்லி வற்புறுத்தினர் என்பது பெறப்படும்.

## காண்டிகை யுரையின் இயல்பும், அதனினின் றும் விருத்தியுரை வேறுபடும் விதமும்.

நூலுக்கு உரை பதினுன்கு வகையால் உரைக்கப்படும். அப்பதினுன்கனுள், "கருத்துரை, பதவுரை, உதாரணம் என்னும் மூன்றனையும் உரைத்தலானும், அம்மூன்றனேடு வினு, விடை என்னும் இரண்டனையும் கூட்டியுரைத்தலானும் சூத்திரத்திலுள்ள பொருளை விளக்கியுரைப்பன காண்டிகையுரைகளாம்". – இவ்வைந்தனுள் வினு, விடை, என்னும் இரண்டுமின்றியும் காண்டிகையுரை வழங்கும் என்பதனையறிவித்தற்கு அவற்றைப் பிரித்து வேறு கூறினுர். இதுவே காண்டிகையுரையின் இயல்பு. (22)

## அதனினின்றும் விருத்தியுரை வேறுபடும் விதம்.

காண்டிகையுரைபோலச் சூத்திரத்திலுள்ள பொருளை விளக்கும் அளவில் நில்லாது, அவ்விடத்துக்கு இன்றியமையாத (அவசியமான) எல்லாப் பொருள்களும் விளங்குமாறு தான் உரைக்கும் உரையாலும், பிறநூலானும் (ஆசிரிய வசனங்களாலும்), மேற்கூறிய காண்டிகையுறுப்பு ஐந்தினுலும் ஐயம் நீங்கச் சுருக்கமில்லாது உண்மைப்பொருளை விரித்துரைப்பது விருத்தியுரையாம்.

எனவே, காண்டிகையுறுப்பு ஐந்தனோடு, பாடம், சொல்வகை(சொற்களைப் பிரித்தல்),பொழிப்புரை, விசேடம், விரிவு, அதிகாரம், துணிவு, பயன், ஆசிரியவசனம் என்னும் ஒன்பதுறுப்பும் கூட்ட, பதினான்கு உறுப்புங் கொண்டது விருத்தியுரை என்பது அறியப்படும். (23)

## நல்லாசிரியர் இயல்பு.

1. உயர்குடிப்பிறப்பு,
2' அருளுடைமை,
3. கடவுட்கொள்கை,
4. பல நூல்களிற் பழகிய தேர்ச்சி,
5. நூற்பொருளை மாணுக்கர்க்கு எளிதிலுணரும்படித் தொகுத்துச் சொல்லும் வன்மை,
6. நிலம் போன்ற பொறுமை,
7. மலைபோன்ற அறிவு வன்மை,
8. துலாக்கோல் போன்ற நடுவுநிலைமை,
9. மலர்போன்ற மென்மைக்குணம்,
10. உலகநடையை யறியும் அறிவு.

இவைபோன்ற உயர்ந்த குணங்கள் நிறையப்பெற்றவரே நல்லாசிரியராவர். (26)

## இவரினின்றும் ஆசிரியராகாதார் வேறுபடும் விதம்.

1. பாடம் சொல்லும் குணமில்லாமை,
2. இழிகுணமாகிய இயற்கை,
3. பிறருக்கு வரும் கல்வியைக்குறித்துக் கொள்ளும் பொருமை,

4. பொருளின்மேல் அதிகமாக வைக்கும் ஆசை,

5. மெய்ப்பொருளை மறைத்துப் பொய்ப்பொருளைக் காட்டி வஞ்சித்தல்,

6. கேட்போருக்கு அச்சமுண்டாகப் பேசுதல்,

7. கழற்காய்பெய்த குடம்போன்று மாறுபடக் கற்பிக்கும் இயல்பு.

8. கூரிய கருக்குமடல்கள் விரியப்பெற்ற பனைமரம் போன்று தன்னை யாரும் நெருங்க விடாமை,

9. பஞ்சு அடைத்த குடுக்கை போன்று எளிதிற் பிறர்க்கு ஈயாமை,

10. வளைந்த தென்னைமரம்போன்று நன்மாணுக்கர் அல்லாத பிறர்க்கு அளிக்கும் தன்மை.

இவைபோன்ற மாறுபாடு கொண்ட கருத்துக்களையுடையோர் ஆசிரியராகாதாராவர். (31)

## ஆசிரியர் கற்பிக்கும் முறை.

உரிய காலத்தையும் உரிய இடத்தையும் தூயனவாகப் பார்த்தல்; சிறந்த இடத்திலிருத்தல்; வழிபடுகடவுளை வாழ்த்தல்: சொல்லப்படும்பொருளைத் தம் உள்ளத்தில் அமைத்துக்கொள்ளுதல்; விரையாது, வெகுளாது விரும்பி முகமலர்ந்திருத்தல்; கேட்கும் மாணுக்கரது அறிவின் வகையை அறிந்து அவரது மனம் ஏற்றுக்கொள்ளுமாறு மாறுபாடில்லாத மனத்துடன் நூலைக் கற்பித்தலாகும். (36)

## மாணுக்கர் இலக்கணம்.

தன்மகன், தன்ஆசிரியன் மகன், பொருளை மிகுதியாகக் கொடுப்பவன், வழிபாடு செய்பவன், தன்னுல் சொல்லப் பட்ட உரையை விரைவில் மனத்திற் கொள்ளும் அறிவுடையோன் ஆகியோருக்கு நூல் சொல்லத்தக்கது.

அன்னப்பறவையையும், பசுவையும் போல்வார் முதல் மாணுக்கர்; மண்ணையும், கிளியையும் போல்வார் இடை மாணுக்கர்; துளையிட்டகுடத்தையும், ஆட்டையும், எருமையையும், பன்றையையும் போல்வார் கடைமாணுக்கர். (37, 38)

## மாணுக்கர் ஆகாதார் இலக்கணம்.

கள்ளுண்ணல், சோம்பல், செருக்கு, காமம், களவு, பிணி, அறியாமை, பிணக்கு, சினம், அளவிறந்த தூக்கம், அறிவுநுட்பம்இல்லாமை, பழைய நூல்களைக் கண்டு அஞ்சித் தடுமாறும் உள்ளம், அஞ்சுவனவற்றுக்கு அஞ்சாமை, பாவஞ்செய்தல், பொய்பேசுதல் என்னும் இவை போன்ற குற்றங்களை யுடையோர்க்கு ஆசிரியர் நூலைச் சொல்லார். ஆதலின் இவர்களே மாணுக்கராகாதவர்கள். (39)

## பாடம் கேட்கும் முறை.

தக்க காலத்தில் போய், வழிபாடு செய்தலில் வெறுப்பில்லாதவனுகி, ஆசிரியருடைய குணத்தோடு பொருந்தப் பழகி, அவர் குறிப்பின்வழியிற்சேர்ந்து, இரு என்று சொன்னபின் இருந்து, படி யென்று சொன்னபின் படித்துப் பசித்து உண்போனுக்கு உணவிடத்து உள்ள ஆசைபோலப் பாடங் கேட்டலில் ஆசையுடையவனுகிச் சித்திரப்பாவையைப்போல அசைவற்ற குணத்தோடு அடங்கிச் செவி வாயாகவும், மனம் கொள்ளும்இடமாகவும், முன்கேட்கப் பட்டவற்றை மீண்டும் கேட்டு அவற்றை மறந்துவிடாது மனத்தில் பதியவைத்துக்கொண்டு, போ என்றபின் போதலே மாணுக்கன் பாடங்கேட்கும் முறையாகும். (40)

## நூல்களைக் கற்கும் முறை.

1. உலக வழக்கும் செய்யுள்வழக்குமாகிய இருவகை நடையையும் ஆராய்ந்தறிதல்.
2. மூலபாடங்களை மறவாமற் பாதுகாத்தல்.

3, ஆசிரியனிடத்துக் கேட்ட பொருள்களைப் பலகாற் சிந்தத்தல்.

4. ஆசிரியரை நெருங்கி முன் கேட்ட அவற்றையே குறைவு தீரத் தன் மனத்திற் பதியும்படி மறுபடியுங் கேட்டல்,

5. அவ்வாறு கற்குந் தொழிலுடைய மாணுக்கரோடு பழகுதல்,

6. தான் ஐயமுற்ற பொருள்களை அம்மாணுக்கரிடத்து வினவுதல்.

7. அவர் வினவியவற்றிற்குத் தான் விடை கூறுதல்.

இத்தகைய செயல்களை முறையாக மாணுக்கன் கொண்டால் அறியாமையானது மிகுதியும் அவனைவிட்டு நீங்கும். இதுவே நூல்களைக் கற்கும் முறையாம். (41)

## ஒருவற்கு ஐயமறு புலமை மாண்புபெறும் விதம்.

1. ஒரு மாணுக்கன் ஆசிரியனிடத்து ஒரு முறைக்கு மூன்று முறை நெருங்கி நிரம்பக் கற்றுக்கொண்டானுயினும், அவ்வாசிரியனது புலமைத்திறத்திற் **காற்பங்கு** பெறுவானே யன்றி அதற்கு அதிகமாகப் பெறுன்.

2. அவ்வாறு கற்குந்தொழிலுடைய மாணுக்கர்களோடு பழகும் வகையால் ஒரு **காற்பங்கு** பெறுவான்.

3. தன் மாணுக்கர்க்கும், அவையிலுள்ளோர்க்கும் ஒழுங்காக எடுத்துச் சொல்லுவதால் மற்றை **இரண்டு காற்** (அரைப்) பங்கும் பெறுவான்.

'இவ்வாறு ஒருவற்குக் குற்றமற்ற புலமை நிரம்பி மாட்சிமையுடையதாகும்'' என்று நன்னூலார் கூறுகின்றுர்.

(43, 44, 45)

## நூற்குப் பெயரெய்தும் முறையும், எடுத்துக் காட்டுக்களும்.

ஒரு நூலுக்கு, அதன் முதனூல், செய்தோன் (கருத்தா), அளவு, மிகுதி, பொருள், செய்வித்தோன், தன்மை முதலிய காரணங்களானும், இடுகுறியானும் பெயர் வரும்.

| பெயரெய்தும் முறை | | எடுத்துக்காட்டுக்கள் |
|---|---|---|
| 1. முதனூலால் | — | இராமாயணம், பாரதம். |
| 2. செய்தோனல் | — | அகத்தியம், தொல்காப்பியம். |
| 3, அளவினல் | — | பன்னிருபடலம், நாலடி நானூறு. |
| 4. மிகுதியால் | — | (இறையனர்) களவியல். |
| 5. பொருளால் | — | (நம்பி) அகப்பொருள். |
| 6. செய்வித்தோனல் | — | சாதவாகனம், இளந்திரையம். |
| 8. இடுகுறியால் | — | நிகண்டு, கலைக்கோட்டுத் தண்டு. (49) |

## சிறப்புப்பாயிரம் செய்தற்குரியார்.

தன்னுடைய ஆசிரியன், தன்னெடுகற்றவன், தன்னுடைய மாணக்கன், தன்னூலுக்கு உரைசெய்தவன் என்னும் இந்நால்வருள் ஒருவர் சிறப்புப்பாயிரம் செய்தற்குரியராவர். (51)

**'பாயிரம் நூல்களுக்கு இன்றியமையாதது' என்பதனை நிறுவுதல்.**

"ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே"-என்றதனால், மிகப் பலவகைகளால் விரிந்த நூலாயினும் பாயிரம் இல்லாதது நூலன்று என்பது பெறப்படும்.

'மாடக்குச் சித்திரமும்'—எனத் தொடங்கும் பாடலால், மாளிகை, மாநகர், மகளிர் என்ற மூன்றற்கும் முறையே சித்திரம், வாயிற்கோபுரம், அணிகலன் என்னும் மூன்றும் இன்றியமையாச் சிறப்புடையனவாயிருத்தல் போல அழகிய பொருளை உணர்த்தும் இருவகைப் பாயிரங்களையும் உரைத்து, எத்தகைய பெரிய நூல்கட்கும் முன்னர் பெய்துவைத்தார் அறிவுடையோர். ஆதலின் பாயிரம் இல்லது பனுவல் (நூல்) அன்று என்பது பெறப்படும்.

இவற்றால், பாயிரம் (முகவுரை) நூல்களுக்கு இன்றியமையாதது என்பது அறியப்படும். (54, 55)

**'அதிகாரம்'— என்பதற்குக் கூறப்படும் விசேடப் பொருள் :-**

அதிகாரம் — அதிகரித்தல். அஃது இருவகைப்படும்.

**முதல்வகை:-**

வேந்தன் இருந்தவிடத்திலிருந்து தன் நிலம் முழுவதும் தன்னாணையின்படி நடப்பச் செய்வது போல, ஒருசொல் நின்றவிடத்தில் நின்று பல சூத்திரங்களும், பல இயல்களும் தன் பொருளையே சொல்லி வரச் செய்வது.

எ-டு:—'எழுத்ததிகாரம்' என்றவிடத்து வரும் அதிகாரம் என்பது இம் முதல்வகையைச் சேர்ந்தது. அஃதாவது, இவ்வதிகாரத்திலுள்ள 257 சூத்திரங்களும் (ஐந்தியல்களும்) 'எழுத்து' என்பதைப்பற்றியே நுதலி வருவதைக்

காணலாம். இதனை வடநூலார் 'யதோத்தேசபக்கம்' என்பர்.

### இரண்டாவது வகை :-

சென்று நடாத்தும் சேனைத்தலைவர் போல, ஓரிடத்து நின்றசொல் பல சூத்திரங்களோடும் சென்று இயைந்து தன்பொருளை விளைவிப்பது.

எ-டு: 'இசைகெடின்......'(91) என உயிரளபெடையில் வரும் சொற்றொடர், அதற்கு அடுத்துவரும் ஒற்றளபெடை (92) பற்றிய நூற்பாவிலும் சென்று இயைந்து பொருள் தருகின்றது. இதனை வடநூலார் 'காரியகாலபக்கம்' என்பர்.

## எழுத்திலக்கணத்தின் பன்னிரு பகுப்புக்களும், அவற்றின் முறைவைப்பும்.

### எழுத்திலக்கணத்தின் பன்னிரு பகுப்புக்களாவன:-

(1) எண் (2) பெயர் (3) முறை (4) பிறப்பு (5] உருவம் (6) மாத்திரை (7) முதனிலை (8) இறுதிநிலை (9) இடைநிலை (மயக்கம்) (10) போலி (11) பதம் (12) புணர்ச்சி என்பனவாம்.

### முறைவைப்பு.

இப்பன்னிரண்டனுள், முதற்பத்தும் எழுத்தின் 'அகத்திலக்கணம்' என்றும், இறுதி இரண்டும் 'எழுத்தின் புறத்திலக்கணம்' என்றும் கூறப்படும். எனவே, எழுத்தின் அகத்திலக்கணமாகிய பத்தையும் 'எழுத்தியல்' என ஓரியலாக்கி முதலிலும், அவ்வெழுத்தின் புறத்திலக்கணமாகிய பதம், புணர்ச்சி என்னும் இரண்டனுள், அவ்வெழுத்தானுகும் பதத்தின் இலக்கணத்தைப் **'பதவியல்'** என ஓரியலாக்கி அதன்பின்னும், அப்பதம் புணரும் புணர்ச்சி யிலக்கணத்தை **உயிரீற்றுப்புணரியல், மெய்யீற்றுப்புணரியல், உருபுபுணரியல்** என மூன்று இயலாககி, உயி

ரெழுத்து, மெய்யெழுத்துக்களின் முறைமைபற்றி உயிரீற்றுப் புணரியலைப் பதவியலின் பின்னும், மெய்யீற்றுப்புணரியலை அதன்பின்னும், உயிரீறு, மெய்யீறு என்றவற்றுள் உருபு அடங்குதலால் உருபுபுணரியலை அவ்விரண்டன்பின்னும் 'ஓத்துமுறைவைப்பு' என்னும் உத்தியால் வைத்தார்.

(57, 58)

## 'இவ்வாசிரியர்க்கு மாயை உடன்பாடன்று' என விருத்தியுரைகாரர் உணர்த்துமிடமும், அதற்குக் காரணமும்:-

### உணர்த்துமிடம்.

'மொழிமுதற் காரணமா **மணுத் திரளொலி எழுத்து**' என்னும் நூற்பாவில், 'இவ்வாசிரியர்க்கு மாயை உடன் பாடன்று' என்பதை யுணர்த்துகின்றார்.

### காரணம்.

முதற்கண், நூற்பாவின் கருத்தைக் காண்போம். "எழுத் தாவது மொழிக்கு முதற்காரணமாயிருப்பது; அணுக்கூட் டத்தின் காரியமாய் வருவது" என்பது இதன் கருத்து. ஈண்டு, எழுத்து என்றது ஒலியையும், அணுஎன்றது ஒலியின் நுட்பத்தையும் குறிக்கும். எனவே செவியளவில் அறியக் கூடியதும் அணுவளவிலுள்ளதுமாகிய ஒலியின் நுட்பங்கள் பல சேர்ந்தே ஓரொலி – எழுத்து – உண்டாகின்றது. ஆத லின் எழுத்திற்கு முதற்காரணம் அணுக்கூட்டம் என்பது அறியப்படும். எனவே, சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலன்களைக்கொண்ட ஒரு பெரிய உருவத் தையே உலகம் என்கின்றோம். உலகத்தின் ஐவகைப் புலன் களின் தோற்றத்திற்கு அவ்வவற்றின் அணுக்கூட்டமே முதற்காரணம் என்பது சமணசமயக்கொள்கை. 'உலகத் தோற்றத்திற்கு முதற்காரணம் மாயை (சக்தி)' என்பது சைவம் முதலிய பிற சமயக்கொள்கை.

இவ்விரண்டு காரணங்களுள் முன்னது — காலத்தொடு பட்ட முதற்காரணமாயிருப்பது. அஃதாவது, கறையானுடைய வாயிலிருந்து உண்டாகும் நீர்த்துகளே பெரிய உருவமாகிய புற்றுத் தோன்றுவதற்குக் காரணமாயிருத்தலை யாவரும் அறிவர். அதுபோலச் சுவை முதலிய ஐவகை நுட்பங்களாகிய அணுக்கூட்டங்களே அவ் வைவகைப் புலன்களை யுடைய உலகத் தோற்றத்திற்குக் காரணம் என்பதை யாவருமறிவர். ஆதலின் இதனை 'ஆதிகாரணம்' என்பர்.

பின்னது–காலத்தொடுபடாமல் மிகத் தொன்றுதொட்ட இயற்கைக் காரணமாயிருப்பது. அஃதாவது, 'உலகத் தோற்றத்திற்கு மாயை (சக்தி) முதற்காரணம்' என்பது ஒருவராலும் அறியமுடியாதநிலையில் காலத்திற்கும் அப்பாற்பட்டது. ஆதலின் இதனை 'அநாதிகாரணம்' என்பர்.

இவற்றுள், ஈண்டு நன்னூலார் எழுத்தின் (ஒலி) தோற் தோற்றத்திற்குக் காரணமாக மாயையினைக் கூருது அணுவைக் கூறியதற்கு முனிவர் இரண்டு காரணம் கூறுகின்ருர்.

(1) "அணுவை யாவருமறிவர்; மாயையினை ஒருவருமறியார். ஆதலின் யாவருமறியக்கூடியதைக் கூறுவதே சிறப்பு எனக்கருதி அணுவைக் கூறினர்." ஈண்டு அணுவின் காரியத்திற்குக் கறையானது காரியத்தை உவமையாகக் கூறி விளக்குகின்ருர்.

(2) 'மாயை', 'அணு' என்னும் இரண்டனுள் அணுக்களினுலேயே எல்லாப் பொருள்களும் அமைவன என்பது சமண சமயக் கொள்கை. எனவே நன்னூலார் சமண சமயத்தினராதலின் இவர்க்கு 'மாயை' உடன்பாடன்று. அதுகருதி ஈண்டு அணுவைக் கூறினர்: இது பிறிதொடு படாஅன் தன்மதங்கொளல் (பிறர் கொள்கையொடு கலவாமல் தன் மதத்தையே தான் கொள்ளுதல்) என்னும் மதம்படக் கூறியதாகக் கொள்ளப்படும்.

இவ்விரண்டாவது காரணத்தினுல், 'இவ்வாசிரியர்க்கு மாயை உடன்பாடன்று' என்பதை உணர்த்துகின்ருர். (59)

## தொல்காப்பியர் சார்பெழுத்து மூன்று எனக்கூறியிருக்க, நன்னூலார் பத்து என்பதுபற்றி விளக்கம்.

தொல்காப்பியர், "குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் எனச் சார்பெழுத்து மூன்று வகைப்படும்" என்று கூறியுள்ளார். அங்ஙனம் அவர் கூறியது செய்கை யொன்றனைக் கருதியேயாம். அஃதாவது புணர்ச்சியிலக்கணம் ஒன்றை மட்டும் கருதியே அவர் அவ்வாறு கருவி செய்தார். ஆனல் நன்னூலார் புணர்ச்சியிலக்கணத்தோடு செய்யுளியற்று தற்கும் கருவி (காரணம்) யாயுள்ள எழுத்துக்களை வகைப் படுத்தக் கருதினுர். ஆதலின் செய்கை (புணர்ச்சி), செய்யுளியல் என்னும் இரண்டனையும் நோக்கிச் சார்பெழுத்துப் பத்து என வகைப்படுத்திக் கூறினுர்.

எனவே, 'புணர்ச்சியிலக்கணத்திற்கு மட்டும் பயன்படுவன குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்னும் மூன்றுமேயாம்.' என்பதும், ஏனைய அளபெடை முதலியன செய்யுளியலை நோக்கி ஈண்டுக் கொள்ளப்பட்டன என்பதும் அறியப்படும். மேலும், நன்னூலார் கூறிய பத்தும் தம்மொடு தாம் சார்ந்தும், இடம் சார்ந்தும், இடனும் பற்றுக்கோடும் சார்ந்தும் விகாரத்தால் வருதலின் சார்பெழுத்தென்றலே பொருத்தமன்றி, முதலெழுத்து என எவ்வகையிலும் கூறமுடியாது ஆதலானும், (முதல், சார்பு என) இவ்விரண்டு வகையன்றி வேறு வகையில்லை ஆதலானும் நன்னூலார் கூறியது பொருந்தும் எனலாம். (60)

## சார்பெழுத்தின் விரியும், தொகையும்.

உயிர்மெய் முதலாக வகைப்படுத்தப்பட்ட சார்பெழுத்துப் பத்தினையும் விரித்துக் கூறுங்கால் அவை முந்நூற்று அறுபத்தொன்பதாகும்.

| | | |
|---|---|---|
| உயிர்மெய் | — | 216 |
| முற்ருய்தம் | — | 8 |
| உயிரளபெடை | — | 21 |
| ஒற்றளபெடை | — | 42 |
| குற்றியலிகரம் | — | 37 |
| குற்றியலுகரம் | — | 36 |
| ஐகாரக்குறுக்கம் | — | 3 |
| ஔகாரக்குறுக்கம் | — | 1 |
| மகரக்குறுக்கம் | — | 3 |
| ஆய்தக்குறுக்கம் | — | 2 |
| | — | 369 |

(61)

## 'சார்பெழுத்து' எனப் பெயர்வரக் காரணம்.

உயிர்மெய் — உயிரும் மெய்யும் சார்ந்து (கூடிப் பிறக்கின்றது.

ஆய்தம் — 'அற்ரு லளவறிந் துண்க அஃ துடம்பு' என்றவிடத்து, உயிர் போல நின்று அலகு பெற்றும்,

'தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்' என்றவிடத்து, மெய் போல நின்று அலகு பெருதும் உயிர்மெய்களை ஒருபுடை (ஒரு சிறிது) ஒத்து அவ்வுயிர்மெய்களி னிடையே சார்ந்து வருகின்றது.

ஏனைய எட்டும் — தத்தம் முதலெழுத்தின் திரிபு விகாரத்தாற் பிறக்கின்றன.

இதனுல் இவைகள் சார்பெழுத்தாயின. இவ்வாறன்றி, "உயிர்மெய் நீங்கிய ஏனைய ஒன்பதும், அகரம் முதலியன போலத் தனித்தும் இயங்காமல், ககரம் முதலியனபோல

அகரமொடு சேர்ந்தும் இயங்காமல், **ஒருமொழியைச் சார்ந்து** வருதலையே தமக்கு இலக்கணமாக வுடையன. ஆதலின் அதுகருதி அவை சார்பெழுத்தாயின" என்றும் கொள்ளலாம். (60)

**'இடுகுறி காரணப்பெயர் பொதுச்சிறப்பின'—இரு பொருள்.**

**முதற்பொருள்.**

இடுகுறி காரணப் பெயர் – இடுகுறிப் பெயரும் காரணப் பெயருமாகிய இரண்டும்,

பொது – பலபொருளுக்குப் பொதுப் பெயராகியும்,

சிறப்பின – ஒவ்வொரு பொருளுக்கும் சிறப்புப்பெயராகியும் வருவனவாம்.

எனவே, இடுகுறிப் பொதுப்பெயர் – மரம்
இடுகுறிச் சிறப்புப்பெயர் - பனை
காரணப் பொதுப்பெயர் – அணி
காரணச் சிறப்புப்பெயர் - வளை

எனப் பெயர் நான்கு வகைப்படும் என்பது அறியப் படும்.

"இடுகுறி – கடவுளாலும், அறிஞர்களாலும் இட்ட குறியாகி வருவன"

"காரணம் – காரணத்தால்வருவன"

**இரட்டுறமொழிதல் என்னும் உத்தியாற் கொள்ளப் படும் இரண்டாவது பொருள்.**

பெயர் – 'இடுகுறி' என்றும், 'காரணம்' என்றும் சொல்லப்படும் இலக்கணங்களையுடைய பெயர்கள்.

இடுகுறி காரணம் பொது – இடுகுறி, காரணம் என்னும் இரண்டிற்கும் பொதுவாயும், இடுகுறிக்கே சிறப்பாயும், காரணத்திற்கே சிறப்பாயும் வருவனவாம்.''

எனவே, காரணவிடுகுறிப்பெயர் – முள்ளி
இடுகுறிப்பெயர் – பொன்
காரணப்பெயர் – பொன்னன்

எனப் பெயர் மூவகைப்படும் என்பது அறியப்படும். இவற்றுள், முள்ளி என்பது முள்ளையுடைய பலவற்றிற்கும் செல்லுங்கால் காரணமாயும், ஒருவகைச் செடிக்கே யுரியதாகுங்கால் இடுகுறியாயும் வருவதால் இது காரணவிடுகுறிப்பெயர் எனப்பட்டது. (62)

**'இடுகுறிகாரணப்பெயர் பொதுச்சிறப்பின'—இதனை எழுத்தியலிற் கூறக்காரணம்.**

'எழுத்தின் அகத்திலக்கணம் பத்து; புறத்திலக்கணம் இரண்டு' எனத் தொகுத்துக் கூறிய நன்னூலார் முதற்கண் எழுத்தின் எண்ணினை–எழுத்து இன்னது என்பதும், அதன் வகையும் என்பதனை – விரித்துக் கூறுகின்றார். அதனையடுத்து இரண்டாவதாகக் கூறவேண்டுவது எழுத்துக்களின் பெயர்பற்றியதாகும். அஃதாவது, 'எழுத்து–உயிர், மெய், குறில், நெடில், சுட்டு, வினா, வல்லினம், மெல்லினம், இடையினம் முதலிய பெயர்களைப் பெற்று வரும்' எனக் கூறவேண்டுவது இன்றியமையாதது. அங்ஙனம் எழுத்திற்குப் பெயர் கூறத் தொடங்குங்காலத்து அதற்கு முன்னர் பெயர்க்கெல்லாம் பொதுவிலக்கணமுணர்த்துதல் தேவையன்றோ? ஈண்டு எழுத்திற்கு எவ்வெவ் வழியாற் பெயரிடுவர்? என ஐயம் எழுவது இயற்கை. அவ்

வையத்தைப் போக்க வேண்டி, ''எழுத்திற்கு இருவழியாற் பெயரிடுவர். (1) இடுகுறி (2) காரணம் என்பன அவை. அவ்விருவழியிலும் பொது, சிறப்பு என்னும் இரண்டையும் சேர்க்க எழுத்திற்குப் பெயரிடும்வழிகள் நான்கேயுள்ளன'' எனக் கூற வேண்டுவது இன்றியமையாததாகின்றது. ''பெயர்க்கெல்லாம் பொதுவிலக்கணமாகிய இதனை முதற் கண் உணர்த்திப் பிறகு எழுத்தின்பெயர்களை விரித்துக் கூறுதலே சிறப்புடைத்து'' எனக் கருதியே நன்னூலார் ''இடுகுறி காரணப்பெயர் பொதுச்சிறப்பின'' என்னும் சூத்திரத்தை எழுத்தியலிற் கூறியுள்ளார். (62)

## சுட்டெழுத்தின் வகைகளும், விளக்கமும்.

அ, இ, உ என்னும் மூன்றும் சுட்டெழுத்துக்களாம். இவற்றுள், அகரம் சேய்மையிலுள்ள பொருளையும், இகரம் அண்மையிலுள்ள பொருளையும், உகரம் நடுவிலுள்ள பொருளையுமுணர்த்தும். (உகரம்–பின்னிற்கும் பொருளையும், மேல் நிற்கும் பொருளையும் உணர்த்தும் ஆற்றலுடையது) இவ்வாறு, வரும் சுட்டெழுத்துக்கள் ஒருசொல்லினுள்ளே நின்று பொருளைச் சுட்டி வருவதுண்டு.

எ-டு: அவன், இவன், உவன். ஈண்டு வரும் சுட்டெழுத்துக்கள் அறம், இலை, உரல் என்பனவற்றிலுள்ள அகர, இகர, உகரங்கள்போலப் பின்னெழுத்துக்களோடு தொடர்ந்து நின்று ஒருபொருளை யுணர்த்தவில்லை; 'மலையன்' என்பதன்கண் உள்ள 'மலை' என்னும் பகுதி போல வேறு நின்று சுட்டுப்பொருளை யுணர்த்துகின்றன. இவ்வாறு வருவதனை 'அகச்சுட்டு' என்பர்.

இனி, இச்சுட்டெழுத்துக்கள் அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன் என ஒருசொல்லின் புறத்தே (அ + கொற்றன்) நின்று பொருளைச்சுட்டி வருவது உண்டு. இவ்வாறு வருவதனைப் 'புறச்சுட்டு' என்பர். ஆகவே 'சுட்டு ஒருசொல்லின் முதற்கண் வரும்' என்பதும், அங்ஙனம் வருங்கால் அகச்சுட்டாயும், புறச்சுட்டாயும் வரும் என்பதும் அறியப்படும். (66)

## இனவெழுத்துக்கள் இன்னவென்பது.

ஒத்த இனமில்லாத ஐகார ஔகாரங்கள், ஈகார ஊகாரங்கட்கு இனமாகிய இகர உகரங்களைத் தமக்கும் இனமாகப் பொருந்த, முதலெழுத்துக்கள் (உயிரும், மெய்யும்) இரண்டிரண்டு ஓரினமாகி வருதல் முறையாம். அஃதாவது உயிரெழுத்துக்களில் குறிலுக்கு நெடிலும், மெய்யெழுத்துக்களில் வல்லினத்திற்கு மெல்லினமும் முறையே இரண்டிரண்டாயிணைந்து இனவெழுத்துக்களாய் வரும். இடையினவெழுத்துக்கள் ஆறும் இவ்விரண்டாயிணைந்து இனவெழுத்துக்களாய் வாரா.

எ-டு:- 'அ—ஆ', 'க்—ங்' என்பது போலக் கொள்ளப்படும்.

## இனவெழுத்தென்றதற்குக் காரணம்.

தானம், முயற்சி, அளவு, பொருள், வடிவு என்னும் இவற்றுள் ஒன்று முதலாக ஒருசில ஒத்திருத்தலே இனமாதற்குக் காரணமாம்.

1. தானத்தாலும் முயற்சியாலும் ஒத்துவருவன. } உயிரினமெல்லாம்.
2. முயற்சியாலும் அளவாலும் ஒத்து வருவன. } வல்லின, மெல்லின மெய்கள்.
3. பொருளால் ஒத்து வருவன—'அ, ஆ', 'க், ங்' முதலியன. 'அது—ஆது,' 'குளக்கரை—குளங்கரை' என்னுமிடங்களில் இவை பொருளால் ஒத்து வருதலைக் காணலாம்.
4. வடிவால் ஒத்து வருவன—'இ, ஈ, ஐ, ஔ, உ' எனுமிவை நீங்கிய மற்றைய உயிர்கள். (71, 72)

## 'சிறப்பினும் இனத்தினும் செறிந்தீண் டம்முதல் நடத்த ரனே முறையா கும்மே'—இதற்கு விளக்கம்.

இதன் பொருள்:- "சிறப்பினானும், இனத்தினானும் ஒன்றன்பின் ஒன்று பொருந்தி இவ்வுலகத்தில் அகரம் முதலாகத்

தொன்றுதொட்டு வழங்குதலே எழுத்துக்கள் நிற்கும் முறையாம்'' என்பது.

**சிறப்பின்:-**

1. அகரம் முதலிய பன்னிரண்டும் தனித்து இயங்கும் ஆற்றலுடையன ; ககரம் முதலிய பதினெட்டும் அவ்வுயிர்களோடு கூடியல்லது இயங்கும் ஆற்றலில்லாதன. ஆதலின் மெய்யெழுத்துக்கட்கு முன் உயிரெழுத்துக்கள் வைக்கப்பட்டன.

2. குறிலினது விகாரமே நெடிலாதலின் நெட்டெழுத்துக்கட்குமுன் குற்றெழுத்துக்கள் வைக்கப்பட்டன.

3. மெய்களுள்—வலியாரை முன்வைத்து மெலியாரைப் பின்வைத்தல் மரபு ஆதலின்—மெல்லெழுத்துக்கட்கு முன் வல்லெழுத்துக்கள் வைக்கப்பட்டன. இவை மூன்றும் 'சிறப்பின்' என்பதனுல் கொள்ளப்ப்டுவன.

**இனத்தின்:-**

1. குற்றெழுத்துக்கட்குப்பின் அவ்வவற்றின் இனமொத்த நெட்டெழுத்துக்கள் நிற்பதும்,

2. வல்லெழுத்துக்கட்குப்பின் அவ்வவற்றின் இனமொத்த மெல்லெழுத்துக்கள் நிற்பதும் ஆகிய இவையிரண்டும் 'இனத்தின்' என்பதனுற் கொள்ளப்படுவன. இனி, வலி, மெலி என்னும் இரண்டையும் நோக்கியல்லது இடைநிகரனவாய் ஒலித்தல் அறியப்படாமையின் அதுகருதி இடையெழுத்துக்கள் அவ்விரண்டன்பின் வைக்கப்பட்டன.

**'அம்முதல்'** :- நாதமாத்திரை (ஒலியளவு) யாய் எல்லா எழுத்திற்கும் காரணமாய் அகரம் முன்னிற்றலின் 'அம்முதல்' என்ருர்.

**நடத்தல்தானே**:- எல்லா எழுத்திற்கும் வைத்த முறைக்காரணம் உயிர்களால் முற்றும் உணர முடியாது. ஆதலின் 'நடத்தல்தானே' என்ருர். இவையே இதற்கு முனிவர் கூறும் விளக்கவுரையாம். (73)

## உயிரெழுத்துக்களின் முறைவைப்பு :-

| எழுத்துக்கள் | | காரணம் |
|---|---|---|
| அ | | அங்காந்து கூறும் முயற்சி. |
| இ | | அவ்வங்காப்போடு அண் பல்லடியை நாவிளிம்புறக் கூறும் முயற்சி. |
| உ | | அவ்வங்காப்போடு இதழ் குவித்துக் கூறும் முயற்சி. |
| ஆ | | அகரத்தின் இனம். |
| ஈ | | இகரத்தின் இனம். |
| ஊ | | உகரத்தின் இனம்: |
| எ | இ அ·எ | அகரக்கூறும், இகரக் கூறும் தம்முள் ஒத்து இசைத்து நரமடங்கல் போல் நிற்பது. (நரன் – மனிதன் மடங்கல் - சிங்கம்) |
| ஒ | உ அ·ஒ | அகரக்கூறும், உகரக் கூறும் தம்முள் ஒத்து இசைத்து அவ்வாறு நிற்பது. |
| ஏ | | எகரத்தின் இனம். |
| ஓ | | ஒகரத்தின் இனம். |
| ஐ | அ இ ய · ஐ | அகரமும், யகரமும், இகரமும் தம்முள் ஒத்து இசைப்பது. |
| ஔ | உ அ வ அ-ஔ | அகரமும். வகரமும், உகரமும் தம்முள் ஒத்து இசைப்பது. |

(73)

தடித்த பகுதிகளை ஒட்டிப் பார்க்க.

## மெய்யெழுத்துக்களின் முறைவைப்பு :-

| எழுத்துக்கள் | காரணம் |
|---|---|
| வல்லினம் – | வலியாரை முன்வைத்தல். |
| மெல்லினம் – | மெலியாரைப் பின்வைத்தல். |
| இடையினம் – | இடைநிகரனவாய் ஒலித்தல். |




(அ)




(ஆ)

(அ)

1. க்,ங் – அடிநா, அடியண்ணம்
2. ச்,ஞ் – இடைநா இடையண்ணம்
3. ட்,ண் – நுனிநா நுனியண்ணம்
4. த்,ந் – நுனிநா அண்பல்லடி
5. ப்,ம் – மேலிதழ், கீழிதழ்

இவற்றின் முயற்சியால் இம்முறையே வைக்கப் பட்டன.

(ஆ)

1. ய் – அடிநா, அடியண்ணம்
2. ர் – நுனி நா, (இடை) அண்ணம்
3. ல் – நுனிநா, அண்பல்லடி
4. இ – மேற்பல், கீழிதழ்

இவற்றின் முயற்சியால் இம்முறையே வைக் கப்பட்டன.

(இ) ழ், ற், ன் – இம்மூன்றும் தமிழுக்கே உரிய சிறப்பெழுத்துக்கள் என்பது கருதி இறுதியில் வைக்கப்பட்டன.

இவற்றுள்,

ழ் — இடையெழுத்து ஆதலின் அதுகருதி இடையெழுத்தொடு சேர்த்து அவற்றிறுதிக்கண் வைக்கப்பட்டது.

ள் — வடமொழியில் - லகரம் ளகரமாகவும் உச்சரிக்கப்படுமேயன்றித் தனியே ஓரெழுத்தில்லை. அச்சிறப்பின்மைகருதி இவ்விடையினத்தின் இறுதியில் வைக்கப்பட்டது. (73)

## உயிரெழுத்துக்கள் கூட்டொலிகளே என்பதற்குச் சான்றுகள்.

1. ஏ, ஓ, ஐ, ஒள என்னும் நான்கினையும் வடநூலார் சந்தியக்கரம் என்பர்.

(சந்தி - கூட்டு; அக்கரம் – அட்சரம், எழுத்து)

2. கையடனுர், 'நரமடங்கல்போல்' என்று உவமையும் கூறியுள்ளார்.

3. மாபாடியத்துள் - அதன் ஆசிரியர் பதஞ்சலியார், "ஊகாரத்தின் பின்னின்ற வடவெழுத்து நான்குயிர்க்கும் இடையே ரகர, லகரக்கூறுகள் ஒத்து நிற்கும்" என்ருர். இஃது "ஐ, ஒள என்புழியும் இடையே யகர, வகரக்கூறுகள் விரவி நிற்கும்" என்பதை வலியுறுத்தும்.

4. தொல்காப்பியர்,

'அகரம் இகரம் ஐகாரமாகும்.'

'அகரம் உகரம் ஒளகாரமாகும்.'

எனக்கூறி, ஐ என்னும் நெட்டெழுத்தின் வடிவு புலப்படுத்தற்கு அகர இகரங்களேயன்றி அவற்றிடையே யகரமும் ஒத்திசைக்கும் என்று கூறியுள்ளார். ((இவைநான்கும் புறச்சான்றுகள்)

5. பவணந்தியார்,

'அம்முன் இகரம் யகரம் என்றிவை
எய்தின் ஐயொத் திசைக்கும் அவ்வொ(டு)
உவ்வும் வவ்வும் ஔவோ ரன்ன' (125)

எனக் கூறியதை அகச்சான்றுகக் கொள்ளவேண்டும்.

இத்தகைய அகப் புறச்சான்றுகளால் உயிரெழுத்துக்கள் கூட்டொலிகளே என்பது அறியப்படும்.

(73)

## ண,த,ய,ற— இவை பிறக்குமிடமும், பிறக்குமாறும்.

| | பிறக்குமிடம் | பிறக்குமாறு |
|---|---|---|
| ண | — இது மெல்லினத்தைச் சேர்ந்தது ஆதலின் இடம் – மூக்கு. | நுனி நா நுனியண்ணத்தைப் பொருந்துதல், |
| த | — இது வல்லினத்தைச் சேர்ந்தது ஆதலின் இடம் நெஞ்சு. | நுனிநா அண்பல்லினது அடியைப் பொருந்துதல். |
| ய | — இஃது இடையினத்தைச் சேர்ந்தது ஆதலின் இடம்-கழுத்து. | அடிநா அடியண்ணத்தைப் பொருந்துதல். |
| ற | — இது வல்லினத்தைச் சேர்ந்தது ஆதலின் இடம்-நெஞ்சு. | நுனிநா அண்ணத்தைப் பொருந்துதல். |

(79. 80, 82. 86)

## உயிர்மெய்யெழுத்துக்களின் தோற்றம்.

1. மெய்யெழுத்துக்கள் அகரவுயிரோடு கூடிய பொழுது, புள்ளியைவிட்டு அவ்விட்டவடிவே வடிவாகி வரும்.

2. 'ஆ' முதலிய மற்றைய உயிர்களோடு கூடிய பொழுது, புள்ளியைவிடுதல் மாத்திரமேயன்றி, வடிவு பலவாக வேறுபட்டு வரும்.

3. உயிருக்குரிய மாத்திரையே மாத்திரையாய் வருமேயன்றி, மெய்க்குரிய மாத்திரை தோன்ருது.

4. வரிவடிவில் உயிரின்வடிவெழுத்து விகாரப்பட்ட மெய்யெழுத்துக்களின் வடிவே வடிவாய் வரும்.

5. உயிரும், மெய்யுமாகிய இரண்டிடத்தும் பிறந்த 'உயிர்மெய்' என்னும் பெயருடனே வரும்.

6. மெய்யினெலி முன்னும், உயிரினெலி பின்னுமாகி வரும்.

ஈண்டு, **வடிவு பலவாக வேறுபட்டு வரும் என்பதுபற்றி விளக்கம்.**

(அ) புள்ளி பெறுதல்—க. இவ்வாறு அருகேபெற்ற புள்ளியை. இக்காலத்தார் கா எனக் காலாக எழுதுவர்.

(ஆ) மேல் விலங்கு பெறுதல் — கி

(இ) கீழ்விலங்குபெறுதல் — கு

(ஈ) கோடு பெறுதல் (கொம்பு) — கெ, கே

(உ) புள்ளியும் கோடும் உடன் பெறுதல் } கெ., கே. (கொ, கோ)

(85)

## உயிரளபெடை இருபத்தொன்ருமாறு.

நெட்டெழுத்தேழும் மொழியின் முதல், இடை, கடை என்னும் மூன்றிடத்தும் அளபெடுக்குமெனவே உயிரளபெடை இருபத்தொன்ருகும்; ஔகாரம் மொழிக்கு நடுவிலும் இறுதியிலும் வாராது. ஆதலின் அவ்விரண்டையும் கழிக்க, நின்ற உயிரளபெடை பத்தொன்பது; அப்பத்தொன்பதனேடு இன்னிசையளபெடை, சொல்லிசையளபெடை என்னும் இரண்டையும் கூட்ட, உயிரளபெடை இருபத்தொன்ருதலை யறியலாம். (91)

## இன்னிசையளபெடை.

செய்யுட்கண் தளையிற் பிழையில்லையாயினும் இனிய ஓசை நிறைத்தற்பொருட்டுக் குறில் நெடிலாய் அளபெழுந்து நிற்க, அளபெடை தனியசையாக எண்ணப்பட்டும், படாதும் வருவது.

எ-டு:- "**கெடுப்பதூஉம்** கெட்டார்க்கு......மழை". 'கெடுப்பதும் கெட்டார்க்கு' என்றவிடத்து விளமுன் நேர் வந்து இயற்சீர்வெண்டளைபட நிற்றலின், வெண்டளையிற் பிழையில்லை. ஆயினும் 'கெடுப்பதும்' என்பதிலுள்ள உகரத்தைக் 'கெடுப்பதூஉம்' என நெட்டெழுத்தாக்கி அளபெடையாகக்கொள்ள, வெண்பாவிற்கேயுரிய வெண்சீர் வெண்டளையாய் இனிய ஓசையை நிறைத்து நிற்றலின் இன்னிசையளபெடையாயிற்று.

## சொல்லிசையளபெடை.

பெயர், வினை ஆகிய சொற்களில், ஒருவகைச்சொல் பிறிதொருவகைச்சொல்லின்பொருள் தோன்றுமாறு அளபெழுந்து நிற்க, அளபெடை தனியசையாக எண்ணப்பட்டும், படாதும் வருவது.

எ-டு:- '**உரனசைஇ** யுள்ளந் துணையாகச் சென்ருர்'. ஈண்டு ('உரனசை' என) அளபெடை கொள்ளாக்கால் நசை என்னுஞ் சொல் விருப்பம் என்னும் பொருள்தந்து பெயர்ச்சொல்லாய் முடிபின்றி நிற்கும். அதனுல் நசைஇ என அளபெடுக்கவே, 'விரும்பி' எனப் பொருள்பட்டுச் 'சென்ருர்' என்ற வினையாலணையும்பெயரொடு முடிதலின், **பெயர்ச்சொல் வினையெச்சச் சொல்லாகிய** முறையில் சொல்லிசையளபெடையாயிற்று. (91)

## உயிரளபெடைபற்றித் தொல்காப்பியர் கருத்து :-

'நீரும் நீரும் சேர்ந்தாற்போல **நெடிலோடு குறில்** ஒத்து நின்று நீண்டு இசைப்பதே அளபெடை' என்னும் கருத்துடையராய்க் 'குன்றிசை மொழிவயின் நின்றிசை

நிறைக்கும் நெட்டெழுத்திம்பர் ஒத்த குற்றெழுத்தே’ என்பர் தொல்காப்பியர்.

**பவணந்தியார் கருத்து:-**

‘இரண்டு மாத்திரை பெற்ற நெட்டெழுத்து, செய்யுட்கண் ஓசை குறைந்தால் தத்தம் மாத்திரையினும் மிக்கு ஒலிக்கும். அவ்வாறு மிக்கு ஒலித்தலை அறிதற்குக் குற்றெழுத்துக்கள் அவற்றின்பின் அறிகுறியாய் (வரிவடிவில்) வரும்’ எனக்கூறுவர் பவணந்தியார். எனவே குறில் நீண்டு ஒலிப்பதே—அளபெடை எனத் தொல்காப்பியரும், “நெடிலேழும் தத்தம் மாத்திரையின் நீண்டு ஒலிப்பதே அளபெடை; குறில் அடையாளமாய் வரிவடிவில் வரும்” என நன்னூலாரும் கூறுவதால், நீண்டொலிக்கும் எழுத்துப்பற்றி இருவருக்கும் கருத்து வேறுபாடு உண்டு என்பதும், ஒலிபற்றிக் கூறும்வகையால், இருவருக்கும் கருத்து ஒன்றே என்பதும் அறியப்படும். ஈண்டு நன்னூலார் ஒருதலைதுணிதல் என்னும் மதமும், உத்தியும்பட வேறுபட்டுக் கூறினர். (91)

## உயிரளபெடைபற்றிப் பிறர்கூற்றும், மறுப்பும்.

**பிறர்கூற்று :-**

‘நெடிலும் குறிலும், விரலும் விரலும் சேர நின்றாற்போல இணைந்து நின்று அளபெடுப்பது—அளபெடை’ என்பது.

**மறுப்பு:-** நெடிலும் குறிலும் இவ்வாறு இணைந்து நின்று அளபெடுக்கும் எனக்கொண்டால், ஆசிரியர் ‘எழுத்தெடை’ (எழுத்து நீளல்) எனப் பெயரிட்டிருக்க வேண்டும். அங்ஙனமின்றி ‘மாத்திரை நீளல்‘ என்னும் பொருளில் ‘அளபெடை‘ எனப் பெயரிட்டுள்ளார் ஆதலின் அது பொருந்தாது.

**தடை :-** அளபெடையைப் பிளவுபடாத ஓரெழுத்தாகக்கொண்டால், ஓரெழுத்தினையே இரண்டுமாத்திரையும், ஒருமாத்திரையுமாகப் பிரித்து அசையாக்கிச் சீர்செய்து தளைகொள்ளுதல் பொருந்தாது என்பது தடை.

அதற்கு விடை:-

யாப்பிலக்கணத்தில் எழுத்துவகையான் தளைபிரித்தல் எனக் கூறுது,

'மாத்திரைவகையான் தளைதம கெடாநிலே
யாப்பழியாமை யென்றளபெடை வேண்டும்'

என்பார் ஆதலின், எழுத்திற்கு மாத்திரை கொள்ளலும், அசையாக்கிச் சீர்செய்தலும், தளைபிரித்தலும் ஓசைபற்றியே யன்றி எழுத்துப்பற்றியல்ல. ஆகவே 'அளபெடை' என்றதால் தளைகொள்ளுதலில் தடையில்லை. (91)

## ஒற்றளபெடை இன்னது என்பது.

ஒற்றளபெடையாவது:— மெய்யெழுத்துக்கள் தமக்குரிய அரைமாத்திரையினின்றும் நீண்டு ஒலிப்பதுண்டு. அதனையே ஒற்றளபெடை என்பர்.

1. ஙஞணநமன வயலள என்னும் பத்துமெய்களும், ஆய்தமும் ஆகிய பதினேரெழுத்தும் அளபெடுப்பன;

2. இவை இரண்டுகுறிலின்பின்னும், ஒருகுறிலின்பின்னும் அளபெடுக்கும்.

3. மொழிக்கு நடுவிலும், இறுதியிலும் செய்யுளின் குறைந்த ஓசையை நிறைக்கும் பொருட்டுத் தத்தம் அரை மாத்திரையின் மிக்கு ஒலிக்கும்.

4. அப்படி இவை அளபெடுத்தமையை அறிதற்கு அடையாளமாக அம்மெய்யெழுத்துக்களின்பின் அவ்வெழுத்துக்களே வரிவடிவில் மற்ருெருமுறை அறிகுறியாய் வரும்.

எ-டு. '**இலங்ங்கு** வெண்பிறை'

'**எங்ங்கு** இறைவன்' இவற்றில் முன்னது—குறிலிணைக் கீழிடையிலும், பின்னது—குறிற்கீழிடையிலும் ஙகரமெய்

நீண்டு ஒலிப்பதைக் காணலாம். ஏனையவும் இவ்வாறே யாம்.

## ஒற்றளபெடை நாற்பத்திரண்டாமாறு:-

குறிலிணைக்கீழிடை, குறிற்கீழிடை, குறிலிணைக்கீழ்க்கடை, குறிற்கீழ்க்கடை என்னும் நான்கிடத்தும் ஙகரம் முதலிய பதினேரெழுத்தும் அளபெடுக்குமெனவே ($4 \times 11 = 44$) ஒற்றளபெடை நாற்பத்துநான்காம். அப்பதினேரெழுத்தில்—ஆய்தம் ஒருமொழிக்கண்ணும், தொடர்மொழிக்கண்ணும் விதித்த முதலெழுத்துக்கள் (ஆய்தத்தின்) இருமருங்கும் நின்று எழுப்ப, இருசிறகெழுப்ப எழும் உடலுடைய பறவைபோல இடையில் எழுந்து ஒலிக்குமேயன்றி, ஒருவாற்ருனும் மொழிக்கு ஈருய் வாராது. எனவே, 'அஃகடிய' முதலியவற்றின்கண் தோன்றிய ஆய்தம், அஃகான் முதலியவற்றின்கண் தோன்றிய ஆய்தம் போலத் தொடர்மொழிக்கண் இடைநிலையாயதன்றி விதியீருய் வந்ததன்று என்பதறியப்படும். அதனுல் ஆய்தத்திற்குக் குறிலிணைக்கீழ்க்கடை குறிற்கீழ்க்கடை என்னும் இரண்டிடத்தை விலக்கவே, ஒற்றளபெடை நாற்பத்திரண்டாய் வருதலைக் காணலாம். (92)

## அளபெடைகளின் பயன்.

உயிரெழுத்துக்களும், மெய்யெழுத்துக்களும் அளபெடுக்குந்தன்மை—செய்யுளுக்கேயுரியது. சிறுபான்மை உரை நடைப்பகுதியில் வரினும், அவ்வுரையும் செய்யுள்வகையுள் ஒன்ருகவே கருதப்படும். எனவே செய்யுளுக்கு மிகவும் இன்றியமையாதது ஓசைநலமேயாம். ஒவ்வொருவகையான செய்யுளுக்கும் ஒவ்வொருவகையான ஓசையுண்டு. அவ்வோசையிற் சிறிது குறையினும் செய்யுளோசையின்பம் குன்றும். அதுமட்டுமன்றிச் செய்யுளிலக்கணமுஞ் சிதையும். ஆகவே செய்யுளிலக்கணஞ் சிதையாமைப்பொருட்

டும், ஓசையின்பங் குன்றுமைப்பொருட்டும் அளபெடைகள் பயன்படுகின்றன.

## குற்றியலுகரம் இன்னதென்பது.

ஒருமாத்திரையினின்றும் குறுகி அரை மாத் திரை யா யொலிக்குந் தன்மையுடைய உகரம்—குற்றியலுகரம்.

'தனி நெடிலோடு ஆய்தம், உயிர், வலி, மெலி, இடை ஆகிய ஆறுவகை எழுத்துக்களுள் யாதாயினும் ஒன்று மொழியின் ஈற்றுக்கு அயலிலேவர, ஈற்றிலே வல்லினமெய் களிலே ஏறி வருகின்ற உகரம் (கு, சு, டு, து, பு, று,) தனது ஒரு மாத்திரையிற் குறுகியொலிக்கும். நெடில் ஒழிந்த பிற ஐந்துதொடர்களும் ஈற்றயலெழுத்துத் தொடர்தலே யன்றி ஒன்றும் பலவுமாகிய பிற எழுத்துக்கள் தொடரவும் பெறும்.

எ-டு—'நாடு'—ஈற்றுக்கு அயலிலே தனிநெடில் வந்துள் ளதால் இது நெடிற்றொடர்க் குற்றியலுகரமாயிற்று. 'சுக்கு'– ஈற்றுக்கு அயலிலே வல்லினமெய்வர அதற்குமுன்னே வேறோரெழுத்துத் தொடர்ந்து வந்துள்ளதால்—இது வன் றொடர்க் குற்றியலுகரமாயிற்று. பிறவும் இவ்வாறே வரும்.

**அது முப்பத்தாறுமாறு:** (ஈற்றயலில் வருவன)

| | | |
|---|---|---|
| 1. | தனிநெடில் | 7 |
| 2. | ஆய்தம் | 1 |
| 3. | மொழியிடை, யீறுகளில் வரப்பெறாத ஔகாரம் நீங்கிய ஏனைய உயிர்கள் | 11 |
| 4. | வல்லினமெய்கள் | 6 |
| 5. | மெல்லினமெய்கள் | 6 |
| 6. | வல்லெழுத்துக்களோடு தொடராத வகரம் நீங்கிய ஏனைய இடையினமெய்கள் | 5 |
| | ஆக | 36 |

ஆகவே ஈற்றயலெழுத்தை நோக்கிக் குற்றியலுகரம் முப்பத்தாறாயிற்று. (94)

**'பிறமேற்ருெடரவும் பெறுமே'—எனக் கூருதொழியின் வருங் குறைபாடுகள்.**

1. ஆய்தம் முதலிய ஐவகையெழுத்தும், ஈற்றெழுத்தும் (கு சு டு து பு று என்பன) கூடியே ஒருமொழியாய் நிற்கு மெனப் பொருள்பட்டு, அது, இது போன்ற முற்றியலுகரமும் குற்றியலுகரமாய் அமைந்துவிடும்.

2. 'ஆய்தமும், தனிமெய்யும் மொழிக்கு முதலில் வரும் எனப் பொருள்படும்.

3. நூற்பாவில், 'நெடிலோடு ஆய்தம்' என்புழி நெடிலை ஒடுவுருபு கொடுத்துப் பிரித்துள்ளார். ஏனெனில் நெடிலுக்குமட்டும் பிறமேற்ருெடர்தல் இல்லை என்பதை விளக்கவேண்டியேயாம். அத்தொடரில்லையெனின் அங்ஙனம் ஒடுவுருபு கொடுத்துப் பிரிக்கவேண்டியது தேவையில்லாது போய்விடும்.

4. ஆய்தம் முதலிய ஐந்தனுள் ஒன்று, ஈற்றுக்கு அயலில் நின்று இறுதியிலுள்ள குற்றியலுகரத்தைத் தொடர்தலே அவ்வுகரம் குறுகுதற்குக் காரணமாகும் என்றும், (ஈற்றயலெழுத்தல்லாத) பிறவெழுத்துக்கள் காரணமல்ல என்றும் பொருள்படும்.

5. இனித் தொல்காப்பியர் இங்ஙனம் பிறமேற்ருெடர்தலைக் கூறவில்லையே யெனின்,

அவர், "நெட்டெழுத்திற்குப் பின்னரும், தொடர்மொழியீற்றிலும் வல்லினமெய்யை ஏறிக் குற்றியலுகரம் நிற்கும்" எனத் தொகுத்துக் கூறினுரேயன்றிச் சிறப்பாக விரித்துக் கூறவில்லை. ஆதலின் அவர் இதனைக் கூருது உய்த்துணரவைத்துச் சென்ருர். ஆனுல் நன்னூலாரோ அங்ஙனம் தொகுத்துச் சுருக்கமாகக் கூருது, எல்லா எழுத்தையும் விரித்துக்கூறத் தொடங்குகின்ருர். விரித்துக்கூற வந்தவர் அவ்வெழுத்தை ஆய்தம் முதலாக ஐந்தாக வகுத்துத் தனி நெடிலோடு ஆருகக் குற்றுகரத்தை அறுவகையான் வழங்குதற்கு இலக்கணம் புலப்படுமாறு கூறியுள்ளார். ஆதலின்

நன்னூலார், 'பிறமேற்றொடர்தலைக்' கூற வேண்டுவது இன்றியமையாத தாயிற்று. (94)

## 'குற்றியலுகரம்' பற்றிக் காரிகைநூலார்கருத்தும், சிவஞானமுனிவரதுமறுப்பும்.

நன்னூலார் ஈற்றியலில் நின்ற எழுத்தை இடமாகக் கொண்டு குற்றியலுகரத்தை வகைப்படுத்தி இலக்கணம் கூறியுள்ளார்.

### காரிகைநூலார்கருத்து :

ஈற்று அயலில் நின்ற **அசையை** இடமாகக்கொண்டு குற்றியலுகரத்தை வகைப்படுத்திக் கூறுவார் அவர்.

அவர் வகைப்படுத்துமாறு:— அஃதாவது, நேரசை நான்கும், நிரையசை நான்கும் ஆகிய எட்டனுள், குற்றெழுத்துத்தனியே வரும் அசை ஒன்றனை மட்டும் நீக்கிவிட வேண்டும். ஏனெனில் ஈற்றுக்கு அயலில் தனிக்குறிலாகிய அசை வரின் 'பசு', 'மடு' என்றாற்போல வரும். அவை முற்றுகரமாகுமேயன்றிக் குற்றுகரமாகா. ஆதலின், அவ்வசையை நீக்கவே, ஈற்றுக்கு அயலிலே,

| | |
|---|---|
| தனிநெடில், | நெடிலொற்று, |
| குறிலிணை, | குறிலிணையொற்று, |
| குறில்நெடில், | குறில்நெடிலொற்று, |
| | குற்றொற்று |

ஆகிய ஏழு அசைகளும் வரும். அங்ஙனம் வருதலைக் கொண்டு குற்றியலுகரம் ஏழுவகையாகக் கொள்ளப்படும்.

எ-டு :- **நாடு**—ஈற்றுக்கு அயலிலே தனிநெடிலாகிய நேரசை வந்துள்ளது. எனவே இது 'நெடிற்கீழ்க் குற்றியலுகரம்' எனப்படும். பிறவும் இவ்வாறே வரும்.

### சிவஞானமுனிவரதுமறுப்பு :-

1. அங்ஙனம் 'ஏழிடம்' எனக்கொள்ளின், 'பிண்ணாக்கு,' 'இறும்பூது' முதலியனவும், 'கஃசு' போன்று ஆய்

தம் தொடர்ந்தனவும், அவ்வெழுவகையுள் அடங்கா வன்றே? ஆதலின் (குற்றியலுகரமாய்க் கொள்ளப்படும்) அவை குற்றியலுகரமாகாமற் போய்விடுமே என்பது முதற் காரணம்.

2. ஈற்றயலசைக்குமேலும் பிற அசைகள் வருதலும், ஆய்தத்தை ஒற்ருகக் கொள்ளுதலும் குற்றியலுகர இலக்கணத்திற்குத் தடையில்லை எனக்கொண்டு,

**பிண்ணாக்கு :** நெடிலொற்றின்கீழ்க் குற்றுகரம் என்றும்,

**இறும்பூது :** நெடிற்கீழ்க் குற்றுகரம் என்றும்,

**கஃசு :** குற்ருெற்றின்கீழ்க் குற்றுகரம் என்றும் கொள்ளலாமேயெனின், அவற்றை அங்ஙனம் கொண்டாலும்,

**'போவது', 'வருவது', 'ஒன்பது'** போன்றவை அவ்வெழுவகையுள் அடங்காமற்போய்விடுமே என்பது இரண்டாவது காரணம்.

3. காரிகைநூலார்விதிப்படி, நெடில் முதலிய அசைகள் ஈற்றுக்குற்றுகரத்தினை அடுத்தே வரவேண்டும் என்னும் வரையறை இல்லை. ஆதலின் **'போவது'** என்பதுபோலத் தனிநெடில் முதற்கண் நின்ருலும் ஈற்றுகரம் அத்தனிநெடிற்கு இறுதியில் வந்ததாகக் கொள்ளலாமே! அங்ஙனம் கொண்டு,

| | | |
|---|---|---|
| போவது | — | நெடிற்கீழ்க்குற்றுகரம் |
| வருவது | — | குறிலிணைக்கீழ்க்குற்றுகரம் |
| ஒன்பது | — | குற்ருெற்றின்கீழ்க்குற்றுகரம் |

எனக் கூறலாமன்ருே? எனின், குற்றயலுகர இலக்கணம் ஒரு வரையறைக்குட்படாது சிதைவுபட்டுப்போவதோடு, அங்ஙனம் பல்வேறு வகையாகக் குற்றுகர இலக்கணத்தைப் பாகுபடுத்தி (பிரித்து)க் கூறுவதால் யாதொரு பயனுமில்லை என்பது மூன்ருவது காரணம். எனவே ஈற்றயலசையை இடமாகக்கொண்டு இலக்கணங்கூறல் பொருத்தமில்லை.

(94)

**'தற்சுட்டளபொழி ஐம்மூவழியும்நையும்'—இது பற்றிச் சிவஞானமுனிவர் உரையும், பிறருரையும், மறுப்பும்.**

இஃது ஐகாரக்குறுக்கம் பற்றிய நூற்பாவாகும்.

**சிவஞானமுனிவர் உரை.**

''ஐகாரம் தன்பெயர் கூறுமளவில் குறுகாது ஒழிந்த மொழிக்கு முதல், இடை, கடை என்னும் மூன்றிடத்தும் தன் மாத்திரையிற் குறுகும்.'' ஈண்டுத் 'தற்சுட்டளபு' என்பதற்கு ''ஐகாரம் தன்னைக்குறித்துத் தன்பெயர் கூறும் அளவு'' எனப் பொருள் கூறுகின்றார். இதனால் ஐகாரம் தன்னைச் சுட்டுமளவில்மட்டும் குறுகாது என்பது பெற்றாம். (அளபு—அளவு, பொழுது)

**பிறருரை.**

''ஐகாரம் தன்னைச்சொல்லுதற்கண்ணும், அளபெடுத்தற்கண்ணும் அல்லாதவழி......குறுகும்.'' ஈண்டுத் 'தற்சுட்டளபு' என்பதற்குத் ''தன்னைச்சுட்டுதலும், அளபெடையும்'' எனப் பொருள்கூறுகின்றனர். இதனால் ஐகாரம் தன்பெயர்கூறுதல், அளபெடுத்தல் ஆகிய இரண்டிலும் குறுகாது என்பது பெற்றாம். (அளபு — அளபெடை)

**மறுப்பு.**

ஐகாரம் தன்பெயர்கூறுமிடத்திற் குறுகாது என்பதில் இருசாராருக்கும் ஒத்தே கருத்தேயாகும். 'அளபெடையிற் குறுகாது' என்பதனையே சிவஞானமுனிவர் மறுக்கின்றார்.

**மறுக்குமாறு.**

உயிரளபெடையாவது தன்னியல்பாய இரண்டு மாத்திரையினின்றும் 'விகாரத்தான் மூன்றுமாத்திரையும், நான்குமாத்திரையுமாய் மிக்கு ஒலிப்பது. ஈண்டு ஐகாரம்

தன்னியல்பாகிய இரண்டு மாத்திரையினின்றும் (தன் பெயர் கூறுமிடத்துக்) குறுகாது எனக் கூறவே, அதனாலேயே தன் னியல்பினின்று நீண்டு ஒலிக்குமிடத்திலும் குறுகாது என் பது பெறப்படும். ஆதலின் அளபெடையிற் குறுகாது எனக் கூறத் தேவையில்லை. அதனால் அது பொருந்தாது. (95)

## 'ணன முன்னும் வஃகான் மிசையுமக்குறுகும்' இஃது உய்த்துணரவைப்பு என்பதுபற்றி விளக்கம்.

**நூற்பாக்கருத்து :-** "ளகர லகரந் திரிந்த ணகர னகர வொற்றுக்களில் ஒன்றன்முன்னும், வருமொழி முதலில் வந்த வகரவுயிர்மெய்யின்முன்னும் மகரமெய் தன் அரை மாத்திரையிற் குறுகும் என்பது.

எ-டு ;- 'மருண்ம்' 'போன்ம்' 'தரும்வளவன்'.

இவற்றுள், மருளும், போலும் என்பன 'மருண்ம்' 'போன்ம்' என உகரம் கெட்டு மெய்திரிந்தன.

இந்நூற்பாக்கருத்தைப் பின்வரும் சில நூற்பாக்களைக் கொண்டு உய்த்துணரவைத்தலால் இஃது உய்த்துணர வைப்பு என்னும் உத்தியாம்.

அவையாவன ;-

1. மருளும், போலும்—என்பன செய்யுமென்னும் வாய்பாட்டுத் தெரிநிலைவினைமுற்று" என்பதற்கு நூற்பா,

'பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்
செல்லாதாகுஞ் செய்யுமென் முற்றே' (348)

2. 'முற்றிறுதியின் அயலிலுள்ள உகரவுயிர் கெடும்'... என்பதற்கு நூற்பா, 'செய்யும்......... உயிரும்......... ஏகலு முளவே' [மருள்ம், போல்ம்] (341)

3. லகர ளகர மெய்களின்முன் மகரம் மயங்காது (சேராது) என்பதற்கு நூற்பா,

'லள முன் கசபவய வொன்றும்மே' (117)

4. ணகர னகரங்களின்முன் மகரம் மயங்கும் — என்பதற்கு நூற்பா.

'னண முன் இனங் கசஞபமய வவ்வரும்' (114)

5. லகர ளகரங்கள், னகர ணகரங்களாகத் திரியும் என்பதற்கு நூற்பா ;-

'லள வேற்றுமையில்......**மெலிமேவின் னணவும்** (227).

6. (அ) இவற்றுள் ஒன்றுடன் மகரமெய் ஈரொற்றுய்க்கூடின் மகரம் குறுகும்.

(ஆ) இவைகளின்முன் குறுகுதல் செய்யுளிடத்தேயாம்.

(இ) காணும், கானும் என இயல்பாக நின்ற ணகர னகரங்களின் முன் இவ்வாறு (உகரம் கெட்டு) மகரம் குறுகாது.

இவற்றிற்கு நூற்பா :—

'லள மெய் திரிந்த னணமுன் மகாரம்
**நைந்து ஈரொற்றுஞ்** செய்யுளுள்ளே. (120)
(96)

**'நின்ற நெறியே உயிர்மெய் முதலீறே' — இது சிங்க நோக்கு ஆமாறும், பொருந்தாவுரையும்.**

**நூற்பாக்கருத்து :-**

"உயிர்மெய்யெழுத்திற்கு முதல் யாது? ஈறு யாது? எனின், ஒற்று முன்னும் உயிர் பின்னுமாய் ஒலித்து நின்ற நெறியே அவ்வுயிர்மெய்க்கு மெய் முதலாம்; உயிர் ஈறும்" என்பது.

இந்நூற்பாவுக்கு முன்னர் மொழிக்கு முதலிலும், இறுதியிலும் வரும் எழுத்துக்களைப்பற்றிக் கூறுகின்றூர்; இதற்குப் பின்னர் இடைநிலை, போலி, பதம், புணர்ச்சி ஆகியவற்றில் வரும் எழுத்துக்களைப்பற்றிக் கூறுகின்றூர். ஆதலின் மொழிக்கு முதலும் ஈறும் கூறுதலோடு, எழுத்துக்கு முதலும் ஈறும் கூறுகின்றூர் என்பது அறியப்படும். மேலும் இந் நூற்பா இதற்கு முன்னுள்ள இலக்கணத்திலும், பின்னுள்ள இலக்கணத்திலும் வரும் உயிர்மெய்யெழுத்துக்கட்குரிய முதலும் ஈறும் கூறுகின்றது. அஃதாவது முன்னுள்ள நூற்பாக்களையும், பின்னுள்ள நூற்பாக்களையும் நோக்கி அமைந்துள்ளது. அதனுல் இது சிங்கநோக்கு நூற்பாவாயிற்று.

**பிறருரை :-**

"இது சிங்கநோக்கு அன்று, ஆற்ருெழுக்காய் இதற்கு முன்னர் மொழிக்கு முதல், இறுதி உரைக்கும் நூற்பாக்களை நோக்கியே அமைந்துள்ளது" என்பது.

**மறுப்பு :-**

அங்ஙனம் ஆற்ருெழுக்காய் முன்னின்ற நூற்பாக்களை மட்டுமே தொடர்ந்து வந்துள்ளதாகக் கொண்டால், இந் நூற்பாவுக்குப்பின் 'ஙம்முன் கவ்வாம்' (117) என்பது போன்ற இடைநிலைமயக்கம்பற்றிய நூற்பாக்களிலும்,

'இயல்பினும் விதியினும் நின்ற......கசதப மிகும்' (165) என்பதுபோன்ற புணர்ச்சிவிதிபற்றிய நூற்பாக்களிலும் கூறப்படும் உயிர்மெய்யின் உயிரையும், மெய்யையும் வேறு பிரித்தோதுவது இலக்கணமன்ருய் முடியும். ஆதலின் அது பொருந்தாவுரையாம். (109)

**உயிர்மெய்யினை ஓரெழுத்தாக எண்ணியவர், "நின்ற நெறியே உயிர்மெய்முதலீறே" எனக்கூறல் பொருந்துமா என்பதுபற்றி ஆய்வு :-**

தண்ணீரோடு கலந்த உப்புத் தண்ணீராய்க் கரைந்து தன்னளவின்றித் தண்ணீரின் அளவாய்த்தோன்றி ஒன்

ருய் அமைதல்போல உயிரோடுகூடியமெய் தன் அரை மாத்திரை தோன்ருது, உயிரின்மாத்திரையாய்த்தோன்றி ஓரெழுத்தாய் நிற்கின்றது. ஆதலின் எண்ணதிகாரத்துள் உயிர்மெய்யினை ஓரெழுத்தாய்க் கணக்கிட்டுக் கூறினர். (ஈண்டு மாத்திரைவகையான் 'ஒன்று' எனப்பட்டது.) ஒன்ருய் அமைந்த அவ்வுயிர்மெய் ஒலிக்குங்கால் ஒற்று முன்னும் உயிர்பின்னுமாய் ஒலித்துநிற்கும் நெறிகாரணமாக இரண்டாய் நிற்கின்றது, ஆதலின் இந்நூற்பாவில் அவ் வுயிர்மெய்யினை 'மெய்முதல் உயிரீறு' என இரண்டாக்கி வைத்து இலக்கணங் கூறினர். (ஈண்டு ஒலிவகையான் இரண்டு எனப்பட்டது.) இம்முறையில் — 'உயிர்மெய்' என்னுஞ்சொல் மாத்திரைவகையாற் கொள்ளுங்கால் உயிரும் மெய்யுங் கூடிப்பிறந்த எழுத்து எனப் பொருள் பட்டு உம்மைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகவும், ஒலிவகையாற் கொள்ளுங்கால் 'உயிரும் மெய்யும்' எனப் பொருள்பட்டு உம்மைத்தொகையாகவுங் கொள்ளப்படும். ஆதலின் இவ்வாறு இலக்கணங் கூறுதல் பொருந்தும். (103)

## இடைநிலைமயக்கம் இன்னது என்பதும், அதன் வகையும் :-

மயக்கம் என்ருல் கூட்டம் என்பது பொருள். அஃதாவது, ஓரெழுத்து மற்ருேரெழுத்தோடு சேர்தலாகும். அது மூன்று வகைப்படும்.

அவை :- )அ) உயிருடன் உயிர்மயங்கல்,
(ஆ) மெய்யுடன் மெய்மயங்கல்,
(இ) இவ்விரண்டும் மாறிமயங்கல் என்பன.

இவற்றுள், (அ) உயிருடன் உயிர் மயங்குந்தன்மை யில்லை. ஆதலின் அதனையொழித்து ஏனை யிரண்டையும்பற்றியே நன்னூலார் கூறுகின்ருர்.

### (ஆ) மெய்யுடன் மெய் மயங்கல்.

இஃது இரண்டு வகைப்படும்.

### (1) வேற்றுநிலைமெய்ம்மயக்கம்.

'மார்பு' என்புழி இடையிலுள்ள ரகரமெய் அதனையடுத்துள்ள (ப்+உ) வேறுமெய்யுடன் மயங்கிவந்துள்ளது. இவ்வாறு தன்மெய்யோடு பிறமெய் மயங்கி வருவதையே 'வேற்றுநிலைமெய்ம்மயக்கம்' என்பர். பதினெட்டுமெய்களுள், ர், ழ்-என்னும் இரண்டும் வேற்றுநிலைமெய்ம்மயக்கத்திற்கே யுரியனவாகும்.

### (2) உடனிலைமெய்ம்மயக்கம்.

'சுக்கு'—என்புழி இடையிலுள்ள ககரமெய் அதனையடுத்துள்ள (க்+உ) தன்மெய்யோடு மயங்கி வந்துள்ளது. இவ்வாறு தன்மெய் தன்மெய்யோடு மயங்குவதையே 'உடனிலைமெய்ம்மயக்கம்' என்பர். பதினெட்டுமெய்களுள். க், ச், த். ப் என்னும் நான்கும் உடனிலைமெய்ம்மயக்கத்திற்கே யுரியனவாகும்.

இவ் வாறுமெய்களும் நீங்கிய ஏனைய (ஙகர முதலிய) பன்னிரண்டுமெய்களும் 'பங்கு', 'அங்ஙனம்' என்பன போன்று வேற்றுநிலை, உடனிலை ஆகிய இரண்டுவகை மயக்கத்திற்குமுரியனவாகும்.

### (இ) உயிரும் மெய்யும் மாறிமயங்கல்.

('அல்' என) உயிருடன் மெய்யும், ('கா' என) மெய்யுடன் உயிரும் மாறி, உயிரும்மெய்யும் மயங்கும் மயக்கத்திற்கு வரையறையில்லை; வேண்டியவாறே மயங்கும். (110)

## இடைநிலைமயக்கம்பற்றிப் பிறர்கூறும் உரைகளும், மறுப்பும்.

### பிறருரை—1.

"இங்குக் கூறப்படும் இடைநிலைமயக்கம் 'வண்டு' என்பதுபோன்று ஒருமொழிக்கேயுரியதாகக் கொள்ள வேண்டுமேயன்றி, 'வெண்கலம்' என்பது போன்று தொடர்

மொழிக்குரியதாகக் கொள்ளக்கூடாது'' என்பது நச்சி ஞர்க்கினியர் போன்றோர் கொள்கை.

**மறுப்பு.**

(அ) ஒருமொழி, தொடர்மொழியாகிய எவ்விடத்து வந்தாலும் இரண்டெழுத்து இணங்கிப் பொருந்தும் பொருத்துவாயை (பொருத்தும்இடத்தை) 'இடைநிலை' எனக்கூறுவது சான்றோர் மரபு அதனாலும்,

(ஆ) இரண்டெழுத்தும் இணங்காதன வந்தால் தந் நிலையில் நில்லாது (புணர்ச்சிவிகாரத்தால்) விகாரப்பட்டும் வரும் அதனாலும் ஒருமொழிக்கே யுரியதாகக் கொள்வது நூற்கருத்தன்று.

**பிறருரை—2.**

'உயிர்மெய் மயக்களவின்று'—என்பதற்கு 'உயிர்மெய் முன் உயிர்மெய் மயங்குதல் வரையறையில்லை' என்று உரை கூறுவர் மயிலைநாதர் போன்றோர்.

**மறுப்பு.**

(அ) 'ஙம்முன் கவ்வாம்' என்புழிச் 'சங்கம்' என, ஙக ரத்தின் முன் ககரமெய் மயங்கும் எனக் கூறப்பட்டுள்ளது. ஈண்டுக் 'க' என்னும் உயிர்மெய்யை க்+அ என இரண் டெழுத்தாகப் பிரித்தே மெய்முன் மெய் மயங்கியதாகக் கூறி யுள்ளார். இவ்வாறே பிறவுங் கூறப்பட்டுள்ளன. இங்ங னம் உயிர்மெய்யெழுத்தினை இரண்டெழுத்தாகப் பிரித்து மயக்கவிதி கூறும் நன்னூலார், அவ்வுயிர்மெய்யையே இங்கு ஓரெழுத்தாக வைத்து மயக்க விதி கூறார் ஆதலா னும்,

(ஆ) அங்ஙனம் உயிர்மெய்முன் உயிர்மெய் மயங்கு தலைப்பற்றிக் கூறினும் இடைநிலைமயக்கம் முழுவதும் இந்நூற்பாவில் (110) அடங்காது ஆதலானும் அது பொருந்தாது. (110)

**ட், ம், ல் — இவைகள் பிறமெய்களோடு மயங்கு மாறு :—**

ட் - இம்மெய்முன்னர் க, ச, ப என்னும் மூன்று மெய்களும் மயங்கும்.
எ-டு ;- வெட்கம், மாட்சி, தட்பம்.

ம் - இம்மெய்முன்னர் ப, ய, வ என்னும் மூன்று மெய்களும் மயங்கும்.
எ-டு :- கம்பன், கலம்யாது, கலம்வலிது,

ல் - இம்மெய்முன்னர் க. ச, ப. வ, ய என்னும் ஐந்து மெய்களும் மயங்கும்.
எ-டு :- வேல்கடிது, சிறிது, பெரிது, வலிது, யாது. (113, 115. 117)

**போலிகளையுணர்த்தும் மூன்று நூற்பாக்கட்கும் பிறர் கூறும் கருத்தும், மறுப்பும் .**

**பிறர்கருத்து :—**

அகம் - அகன் என்பதுபோன்று போலிகளையுணர்த்தும் நூற்பாக்கள்மூன்றனையும் இடைநிலைமயக்கத்தின் ஒரு வகையாகக் கூறுவர் மயிலைநாதர்.

**மறுப்பு :-**

(அ) ‘அகம்-அகன் ; பசல்- பைசல்; செய்ந்நின்ற - செய்ஞ்ஞின்ற’ என்புழி வரும் எழுத்துக்கள் மொழிக்கு உறுப்பாகி ஒரெழுத்து நின்றவிடத்தில் மற்ரேரெழுத்து அதுபோல மொழிநிரப்ப நிற்பதன்றி, ஒன்ரேடொன்று மயங்கி(கூடி) இரண்டெழுத்தும் உடன் நிற்பதில்லை அதனுைம்,

(ஆ) முன்னரே, மொழிக்கு முதல், இறுதி, இடைநிலை ஆகியவற்றிற்குத் “தம்பெயர் மொழியின்......இயலுமென்ப” (121) என்னும் நூற்பாவாற் புறனடையும்கூறி இடைநிலைமயக்கம்பற்றி ஒருசிறிதும் குறைவில்லாமல் இலக்கணம் கூறிவிட்டார் அதனுனும்,

(இ) இம்மூன்று நூற்பாக்களிலும் 'உறழா நடப்பன', 'ஒக்கும்', 'உறழும்' என உவமவுருபு கொடுத்துக் கூறியுள்ளார். அதனானும் ஒன்றுநின்றவிடத்தில் அதுபோல மற்றொன்று போலியாக நிற்கும் எனப் பொருள்படுமேயன்றி இடைநிலைமயக்கத்தில் சிறிதும் அடங்காது. ஆதலின், அது பொருந்தாது. (122, 123, 124)

**'அம்முன் இகரம் யகரம்.........' என்னும் நூற்பாவிற்குச் சிவஞானமுனிவர் கருத்தும், பிறருரையும், மறுப்பும் :—**

**சிவஞானமுனிவர் கருத்து :-**

கூட்டொலி எனப்படும் சந்தியக்கரம் என்பவற்றுள், ஐ, ஔ என்னும் நெட்டெழுத்துக்களின் வடிவிலக்கணம் கூறுவது இந்நூற்பா'' என்னும் கொள்கையில் முனிவர் இதற்கு உரைகூறுகின்றார். அஃதாவது,

'அ, ய், இ' — இம்மூன்றும் தம்முள் ஒத்து எய்தின் 'ஐ' என்னும் நெட்டெழுத்து ஒலிக்கும்.

'அ வ் உ' — இம்மூன்றும் தம்முள் ஒத்து எய்தின் 'ஔ' என்னும் நெட்டெழுத்து ஒலிக்கும் என்பது முனிவர் கூறும் கருத்து.

**பிறருரை :-**

'இந்நூற்பா எழுத்துப்போலி உணர்த்திற்று' எனப் பொருள்கொண்டு,

| | |
|---|---|
| 'அஇ—ஐ. | அய்—ஐ. |
| கஇ—கை. | கய்—கை. |
| அஉ—ஔ. | அவ்—ஔ. |
| கஉ—கௌ. | கவ்—கௌ' என மேற் |

கோள் காட்டுவர் மயிலைநாதர் முதலியோர்.

**மறுப்பு :-**

(அ) தமிழ்நூற்பயிற்சி யொன்றையே உடையார் (மயிலைநாதர்) இவ்வாறு பொருள்கொண்டு மேற்கோள் காட்டுவதால் யாதொரு பயனுமில்லை அதனாலும்,

(ஆ) அவர்கூறுவது வடநூலோடு மாறுபடுகின்றது அதனுலும் அது பொருந்தாது. (125)

**'மொழியாய்த் தொடரினும் முன்னனைத்தெழுத்தே' முன்னனைத்தாதலைப்பற்றி விளக்கம் :-**

'அகரமுதலிய எழுத்துக்கள் பதமாயினும், அப்பதம் தம்மொடும், உருபொடும் புணரினும் அவற்ருல் பிறழாது, எழுத்தியலிற் கூறப்பட்டுள்ள எழுத்தின் அகத்திலக்கணம் பத்தையும் உடையவாம்' என்பது இதன்பொருள். ஆகவே, சுண்ணத்தின்கண் (பொடி) மஞ்சள் முதலியன கலந்தால் அதனினின்றும் பிரிக்கமுடியா. அதுபோல அமையாது, கட்டப்பட்ட மாலையின்கண் உள்ள மலர்போலப் பிணைந்தும், பின்னர், தனியே பிரிக்கக்கூடியதாயும் எழுத்து இருக்கின்றது என்பதறியப்படும்.

**முன்னனைத்தாதல் :—**

'அம்மா'—என்புழி 'அ-ம்-மா' என்னும் மூன்றெழுத்துங் கூடிப் பதமாயினும் அவ்வெழுத்துக்களின் அகத்திலக்கணம் யாவும் அடங்கியிருப்பதைக் காணலாம். (127)

**நூற்பாநிலைகளும், எடுத்துக்காட்டுக்களும்.**

நூற்பாக்கள் ஒன்ருேடொன்று தொடர்ந்துநிற்கும் நிலைகள் நான்கு. அவையாவன;

**(1) ஆற்ருெழுக்கு.**

இடையருது ஓடுகின்ற நீரோட்டத்தைப்போன்று அமைவது ஆற்ருெழுக்கு எனப்படும்.

எ-டு:- எழுத்தியலில் எழுத்துக்களின் பிறப்பிலக்கணம் பற்றி வரும் நூற்பாக்கள் ஆற்ருெழுக்காக அமைந்துள்ளன. முன்னர், உயிரெழுத்துக்களின் பிறப்பிலக்கணத்தை அ முதல் ஔ ஈருக முறையாகக் கூறி, பின்னர், மெய்யெழுத்துக்களின் பிறப்பிலக்கணத்தைக் க முதல் ன ஈருக முறைப்படுத்திக் கூறியுள்ளார். ஆதலின், இம்முறையில் அமையும் நூற்பாக்கள் ஆற்ருெழுக்கு எனப்படும். (76-86)

### (2) அரிமா (சிங்கம்) நோக்கு.

இதுபற்றிய விளக்கத்தை 51ஆம் பக்கத்திற் காண்க.

### (3) தவளைப்பாய்த்து.

இடையிட்டுக் குதிக்கின்ற தவளையினது பாய்ச்சலைப் போன்று அமைவது தவளைப்பாய்த்து எனப்படும்.

(எ–டு) "ஆவியும் ஒற்றும் அளவிறந் திசைத்தலும்
மேவும் இசைவிளி பண்டமாற் றுதியின்"-என்னும் நூற்பா, தவளைப்பாய்த்துநிலையில் அமைந்துள்ளது. எழுத்துக்களின்மாத்திரைக்குப் புறனடையாக வரும் இந் நூற்பா இதற்கு முன்னுள்ள 'இயல்பெழும் மாந்தர் இமை நொடி மாத்திரை"—என்ற நூற்பாவைத் தழுவாது, அதற்கு முன்னின்ற 'மூன்றுயிரளபு'—என்ற நூற்பாவைத் தழுவிநிற்கின்றது. இன்னின்ன எழுத்துக்கள் இன்னின்ன மாத்திரை (அளவு) பெறும் என்பதை அறிவிப்பது 'மூன்றுயிரளபு' என்ற நூற்பா. அவ்வாறு குறிப்பிட்டவிதியைக் கடந்தும், இசை, விளி முதலிய இடங்களில் மாத்திரைபெறும் என்பதை அறிவிப்பது "ஆவியும்" என்ற நூற்பா. எனவே, இஃது இடையிட்டு (நடுவில் ஒரு நூற்பாவை விட்டு)இதற்கு முன்னின்ற நூற்பாவைத் தழுவுவதால் இது தவளைப்பாய்த்து எனப்படும். (101)

### (4) பருந்தின் வீழ்வு.

பருந்து நெடுந்தூரத்தினின்றும் ஒன்றை வௌவிப் போதற்கு வீழ்கின்ற செயலையே 'பருந்தின்வீழ்வு' என்பர். இதுபோன்று அமைந்துள்ள நூற்பா மகரக்குறுக்கம்பற்றியதாகும். இதுபற்றிய விளக்கத்தை 50ஆம் பக்கத்திற்காண்க.

## எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரின்-கோடிட்ட சொல்லிற்குச் சிறப்புப்பொருள் :—

'ஒன்று, இரண்டு அல்லன பல' என்பது வடநூல் வழக்கு ; 'ஒன்று அல்லன பல' என்பது தமிழ்நூல் வழக்கு. ஆதலின், தமிழ்நூல் வழக்குப்பற்றி நன்னூலார் ஈண்டு எழுத்துப் பதமாகும் முறையைக் கூறியுள்ளார். அஃதாவது, தனித்து ஓரெழுத்தொருமொழியாய் வருவனவற்றை

ஒழித்து, ஏனையிரண்டு முதலாகத் தொடர்ந்துவரும் பதங்களையெல்லாம் தொடர்மொழி எனக் கூறவிரும்புவார், ‘தனித்தும்’ எனக் கூறியதையடுத்துத் ‘தொடர்ந்தும்’ எனக் கூறியுள்ளார்.

எழுத்துப் பதமாகும் முறைபற்றித் தொல்காப்பியர் கூறுவது யாதெனின்,

“மொழிகள்தோன்றும்நெறிகள்; ஓரெழுத்தொருமொழி, ஈரெழுத்தொருமொழி, இரண்டைக் கடந்து ஒலிக்குந் தொடர்மொழி என்னும் மூன்றுவகையாகும்” என்பது. ஈண்டு ஓரெழுத்தொருமொழியையடுத்துத் தொடர்மொழியைக்கூருது, ஈரெழுத்தொருமொழியைக்கூறிப் பிறகு ‘இரண்டிறந்திசைக்குந் தொடர்மொழி’ எனக்கூறியதால் ‘ஒன்று, இரண்டு, அல்லன பல’ என்னும் வடநூல்வழக்கு அவரது நூற்பாவில் அமையக் காணலாம்

அங்ஙனம், அவர் வடநூல்வழக்கு அமையக் கூறினுராயினும், ‘ஒன்று அல்லன பல’ என்னுந் தமிழ்நூல் வழக்கையும் ஏற்றுக்கொள்வர் தொல்காப்பியர் என்பது அவர் தொடர்மொழிபற்றிக்கூறும் முறையிலிருந்து அறியலாம். அஃதாவது, ஈரெழுத்தொருமொழியையடுத்துத் ‘தொடர்மொழி’ எனப் பொதுவாகக் கூருது, ‘இரண்டிறந்திசைக்குத் தொடர்மொழி’ என அடைமொழி கொடுத்துக் கூறியதன் கருத்து யாதெனின், கல், வில் போன்ற ஈரெழுத்தொருமொழிகளும் ஒன்ருேடொன்று தொடர்ந்துநின்றே பிறபொருளைத் தருதலின் அவையும் தொடர்மொழிகளே என்பதை வலியுறுத்தற்பொருட்டாகும். ‘இரண்டைக்கடந்து ஒலிக்குந்தொடர்மொழி’ என அடைமொழி கொடுத்துக் கூறவே, இரண்டைக் கடவாது ஒலிக்குந் தொடர்மொழி ஒன்று உண்டு என்பது பெறப்படுகிறதன்ருே? இரண்டைக் கடவாது ஒலிக்குந் தொடர்மொழி யாதெனின் ஈரெழுத்தொருமொழியேயன்றி வேறில்லை. ஆதலின் தொல்காப்பியரும், ‘தனித்து வருவனவற்றை யொழித்து ஏனையவெல்லாமே தொடர்மொழி’ என்னுங் கொள்கையை உடன்படுபவர்

என்பதற்கு அவர் தொடர்மொழிக்கு அடைமொழிகொடுத்துக் கூறியதே சான்ருயமைதலைக் காணலாம். (128)

**“எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரின் பதமாம்”—இதற்குப் பதசாரம்:-**

**எழுத்தே:-** எழுத்துக்கள் கூடிப் பதமாகுங்கால் மலரால் அமைக்கப்பட்ட மாலைபோலப் பின்னர்த் தனியே பிரிக்கக்கூடியனவாய் நிற்குமேயன்றி, மஞ்சள் முதலியவற்ருல் செய்யப்பட்ட பொடிபோலப் பிரிக்கமுடியாதநிலையில் நில்லா. எனவே, எழுத்துப் பதமாக மாறினுலும் எழுத்தின் தன்மைகள் சிதையாதிருப்பதை உணர்த்தற்பொருட்டு ‘எழுத்தே’ என்ருர்.

**தனித்தும்:-** ‘மா’ முதலியன ஓரெழுத்துக்களாய் இருப்பினும், மரமுதலிய பிறபொருள்களைத் தருதலின், அங்ஙனம் தனித்துவருபவையும் ‘பதமாம்’ எனக் கூறவிரும்புவார் ‘தனித்தும்’ என்ருர்.

**தொடர்ந்து:-** 59ஆம் பக்கத்தில்காண்க.

**பொருள் (தரின்):-** எழுத்துக்கள் ஒன்ருேடொன்று தொடர்ந்துவருவனவெல்லாம் பதம் எனக் கூறின், இறிஞி, மிறிஞி போன்றனவும் ஒன்ருேடொன்று தொடர்ந்து வந்துள்ளமையால் அவையும் பதங்களாய் அமைந்து விடும். அவைகள், தொடர்ந்துவருமேனும் எழுத்துக்களாகிய தம்மை உணர்த்துமேயன்றிப் பிற பொருளைத் தாராமையின் அவை பதமாகா என வலியுறுத்தற்பொருட்டுப் பொருள் (தரின்) என்ருர். பொருள்(தரின்) என்றதனுல் பிறபொருளையுணர்த்துபவை பதமாகுமேயன்றி எழுத்துக்கள் ஒன்ருேடொன்று தொடர்ந்து வருபவையெல்லாம் பதமாகாஎன்பது அறியப்படும்.

(பொருள்) **தரின்:-** ‘தன்னை யுணர்த்தின் எழுத்தாம்; **பிறபொருளைச் சுட்டுதற்கண்ணேயாம் சொல்’** என்று

கூறுவர் ஆன்றோர் ஆதலின், ஈண்டுப் 'பொருள்' என்றது பிறபொருள் எனக் கூற விரும்புவார், 'உணர்த்தின்' எனக் கூருது 'தரின்' என்ருர். பிறபொருளாயிருந்தாலன்றே தர முடியும்! ஆதலின், அங்ஙனம் தருதல்வாய்பாட்டாற் கூறினர்.

**பதமாம்:-** அணு என்னும் ஒலிநுட்பத்தான் எழுத்தாறுற்போல, எழுத்து என்னும் ஒலிநுட்பத்தான் மொழியாம்எனக் கூற விரும்புவார், 'பதமாம்' என்ருர். மேலும், இப்பதவியலுக்கு முதனூல் ஆரியம் எனக்கூறவிரும்புவார் 'மொழி' எனக் கூருது 'பதம்' என்ருர். (128)

**ஓரெழுத்தொருமொழிகள் இன்னவை என்பது;-**

1. உயிர் வருக்கத்தில் ஆறு:- ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ.
2. மவ் வருக்கத்தில் ஆறு:- மா, மீ, மூ, மே, மை, மோ.
3. தவ் வருக்கத்தில் ஐந்து:- தா, தீ, தூ, தே, தை.
4. பவ் வருக்கத்தில் ஐந்து:- பா, பூ, பே, பை, போ.
5. நவ் வருக்கத்தில் ஐந்து:- நா, நீ, நே, நை, நோ.
6. கவ் வருக்கத்தில் நான்கு:- கா, கூ, கை, கோ.
7. வவ் வருக்கத்தில் நான்கு:- வா, வீ, வை, வெள.
8. சவ் வருக்கத்தில் நான்கு:- சா, சீ, சே, சோ.
9. யவ் வருக்கத்தில் ஒன்று:- யா.

ஆக, நெட்டெழுத்தாகிய இந்நாற்பதுடனே நொ, து என்னும் குற்றெழுத்தாகியமொழி இரண்டும் சேர ஓரெழுத்தாகியமொழிகள் நாற்பத்திரண்டாம். இவையே சிறப்புடையனவாம்.

இவை சிறப்பின என்றதனல், சிறப்பில்லனவும் உள என்பது பெற்றும். அவை,

1. (அவ்என்னும்) வகர ஈற்றுச் சுட்டுப்பெயர்ப் பொருளை ஒப்புமையான் உணர்த்தும் 'ஔ' என்பதும்,

2, சுட்டு, வினு, உவமை ஆகியபொருளேத் தந்து இடைச்சொல்லாய்நிற்கும் அ, இ, உ, எ, ஒ என்னும் குற்றுயிர் ஐந்தும்,

3. 'கெள' என்னும் உயிர்மெய்யெழுத்தும், பிறவுமாம். (129)

## பகாப்பதம், பகுபதம் இவற்றின் வேறுபாடுகள்.

| பகாப்பதம். | பகுபதம். |
|---|---|
| (அ) தன்னைப் பகுத்துப்பார்க்கின் பயனில்லாதது. | தன்னைப் பகுத்துப்பார்க்கின் பயனுடையது. |
| (ஆ) இடுகுறியாயமைவது. | காரணமாயமைவது. |
| (இ) படைப்புக்காலந்தொட்டு ஒன்ருய் முடிந்து நடப்பது. | காலத்திற்கேற்பப் புதிது புதிதாய்த் தோன்றி வளர்வது. |
| (ஈ) பெயர் — நிலம்<br>வினை — நட<br>இடை — மன்<br>உரி — உறு<br>என்னும் நான்கு வகைப்படுவது. | பொருள் — பொன்னன்<br>இடம் — அகத்தன்<br>காலம் — ஆதிரையான்<br>சினை — கண்ணன்<br>குணம் — கரியன்<br>தொழில் — ஊணன்<br>என்னும் ஆறனடியாகப் பிறக்கும் **பெயர்களும்**, நடந்தான், பொன்னன் எனத் தெரிநிலையாயும், குறிப்புவினையாயும் காலத்தைக்கொள்ளும் **வினைகளுமாக** இரண்டு வகைப்படுவது. |
| (உ) இரண்டெழுத்துமுதல் ஏழெழுத்து ஈருக வருவது. எ-டு:- அணி, உத்திரட்டாதி முதலியன. | இரண்டெழுத்து முதல் ஒன்பது எழுத்து ஈருக வருவது. எ-டு:-கூனி, உத்திரட்டாதியான் முதலியன. (131, 2) |

## வினைக்குறிப்புப் பெயர்க்கும், வினைக்குறிப்பிற்கும் உள்ள வேற்றுமை:-

'வினைக்குறிப்புப்பெயர்' என்பது குறிப்பு வினையாலணையும் பெயரையும், 'வினைக்குறிப்பு' என்பது குறிப்புவினைமுற்றையும் உணர்த்தும்.

| குறிப்புவினைமுற்று. | குறிப்புவினையாலணையும்பெயர். |
| --- | --- |
| (அ) (தெரிநிலைவினைமுற்றைப் போல) பகுதியில் பொருள் சிறந்து நிற்கும். | விகுதியில் பொருள் சிறந்து நிற்கும். |
| (ஆ) காலத்தைக் குறிப்பாற் காட்டி வேற்றுமையுருபு ஏலாது வரும். | காலத்தைக் குறிப்பாற் காட்டி வேற்றுமையுருபு ஏற்றுவரும். |
| எ-டு:- (இன்று) அவன் பொன்னன். | பொன்னனை வணங்கினான். |
| ஈண்டு, பொன்னன் என்பதிலுள்ள 'அன்' விகுதியால் உணர்த்தும் ஆண்பாற் பொருளை 'அவன்' என்னும் எழுவாயே உணர்த்தி விடுவதால், 'பொன்னன்' என்னும் குறிப்புவினைமுற்றில் 'பொன்' என்னும் பகுதியே பொருளை உணர்த்துவதில் சிறப்புடையதாய் நிற்றலைக் காணலாம். | ஈண்டு, 'பொன்'என்னும் பகுதியில் நாட்டம் செல்லாது 'அன்'என்னும் விகுதியால் உணர்த்தப்படும் ஆண்பாற்பொருள் மேல் நாட்டம் செல்வதால், விகுதிப்பொருளை உணர்த்துவதில் சிறப்புடையதாய் நிற்றலைக் காணலாம். |

பொருட்சிறப்பையுணர்த்தும்முறையாவது :-

"பொருள் சிறக்கும் எழுத்தினை எடுத்தும், அயலெழுத்தினை நலிந்தும், ஏனையெழுத்துக்களைப் படுத்தும் ஓசைப் படுத்திக் கூறவேண்டும்' என்பது. (132)

**பொருளாதி யாறனடியாகப் பிறந்த பகுபதம் பெயராகவும், குறிப்புவினையாகவும் வரும்முறை :-**

'பொன்னன்'—இது பெயராகவும், குறிப்புவினையாகவும் வரும். இது பெயராக வருங்கால் பகுதி, விகுதி என்னும் இரண்டிலும் பொருள்சிறந்துநிற்கும்; வேற்றுமையுருபு ஏற்கும்; காலங்காட்டாது.

இது குறிப்புவினையாகவருங்கால் குறிப்புவினைமுற்றாகவும், குறிப்புவினையாலணையும்பெயராகவும் வரும். (132)

இதன்விளக்கத்தை 64ஆம் பக்கத்திற் காண்க.

**சொன்மை, பொருண்மை முதலியன பகாப்பதமா, பகுபதமா என்பதுபற்றி விளக்கம்.**

இவைகள், பகுதி விகுதியாகப் பகுக்கப்படுவதாலும், விகுதி வேறுபொருளின்றிப் பகுதியின்பொருளையே யுணர்த்திப் பகுதிப்பொருள்விகுதியாய் நிற்றலாலும், இவைகள் சொல்நிலையால் பகுபதம் என்றும், பொருள்நிலையால் பகாப்பதம் என்றும் கொள்ளப்படும். (135)

**'பகுதி, விகுதி முதலியன காரணப்பெயர்கள்' விளக்கம்.**

1. **பகுதி :-** இது பகுபதங்களின் முதலில் நிற்கும் உறுப்பாகும். "'பிரகிருதி' என்னும் ஆரியமொழியே 'பகுதி' எனத் திரிந்துநின்றது" என்பர் முனிவர். எனவே, பகுபதவுறுப்புக்களின் முதலில் நிற்கும் உறுப்பு, தன்னியல்பில் (திரியாது) நிற்றலின் 'பகுதி' எனப்பட்டது.

2. **விகுதி :-** இது பகுபதங்களின் இறுதியில் நிற்கும் உறுப்பாகும். "'விகிருதி' என்னும் ஆரியமொழியே 'விகுதி' எனத் திரிந்துநின்றது" என்பர் முனிவர். தன்னியல்பில் நிற்கும் ஒருவனுள்ளத்தை ஆடை, அணி முதலிய

வற்ருேடு ஒருத்தி முன்னின்று தன்னிடத்து அவாவுமாறு விகாரப்படுத்தல்போல, பகுதிப்பொருளை இடைநிலை முதலியவற்ருேடு விகுதி முன்னின்று தன்னிடத்து அவாவுமாறு விகாரப்படுத்தலின் 'விகுதி' எனப்பட்டது.

3. **இடைநிலை** :- இது பகுபதங்களின் இடையில் நிற்கும் உறுப்பு. முதனிலைப்பகுதிக்கும், இறுதிநிலைவிகுதிக்கும் இடையில் நிற்றலின், 'இடைநிலை' எனப்பட்டது.

4. **சாரியை** :- இது (பெரும்பாலும்) விகுதியைச் சார்ந்து (இடைநிலைக்கும் விகுதிக்கும் நடுவில்) நிற்கும் உறுப்பு. ஆகவே, விகுதி முதலிய புணர்ப்பைச் **சார்ந்து**, அவ்விடத்திற்குப் பொருந்தி நிற்றலின், 'சாரியை' எனப்பட்டது.

5. **சந்தி** :- இது (பெரும்பாலும்) பகுதியைச் சார்ந்து (பகுதிக்கும் இடைநிலைக்கும் நடுவில்) நிற்கும் உறுப்பு. பெயர் முதலிய நால்வகைச் சொல்லும் ஒன்ருேடொன்று சந்தித்தலான்; தோன்றல், திரிதல், கெடுதல் என்ற மூன்றும் 'சந்தி' எனப்படும். எனவே, நால்வகைச் சொல்லும் ஒன்ருேடொன்று சந்திக்குமிடத்து வருதலின் 'சந்தி' எனப்பட்டது.

6. **விகாரம்** :- (பெரும்பாலும்) சந்தியாக வரும் உறுப்பே விகாரப்பட்டுவரும். அவ்வமயம் அது 'விகாரம்' எனப் பெயர்பெறும். செய்யுட்டொடை முதலியவற்ருன் வலித்தல், மெலித்தல் முதலாக விகாரப்படும் உறுப்பாயிருத்தலின் இது 'விகாரம்' எனப்பட்டது. (133)

## பகுபதவுறுப்புக்களுக்குத் தனித்தனி இலக்கணமும், எல்லா உறுப்பினும் முடிந்த பகுபதம் ஒன்றனுள் உறுப்புக்கள் அமைந்தவாறும் :—

பகுபதவுறுப்புகளுக்குத் தனித்தனி இலக்கணம்:-

**1. பகுதி :-** பெயர்ப்புகுபதங்களுள்ளும், வினைப்பகு பதங்களுள்ளும், தத்தம் முதல்நிலையாய பகாப்பதங்களே 'பகுதி' எனப்படும். ஏவற்பொருளை உணர்த்தி வருவதே வினைச்சொற்களில் வரும் பகுதியின் இயல்பாகும். பெயர் முதலிய நால்வகைச் சொற்களுமே இடத்திற்கேற்பப் பகுதி களாய் வரும். (134)

**2. விகுதி:-** அன், ஆன் முதலாகச் சொல்லப்படும் முப்பத்தேழும் பிறவும் வினைச்சொற்களில் வரும் பகுதிகளா கும். திணை, பால் இடங்களையுணர்த்தி வருவதே இவ் விகுதிகட்குரிய இலக்கணம். இவற்றுள் சில, பெயரிடத்தும் விகுதிகளாய் வரும். (140)

**3. இடைநிலை:-** இது பெயரிடைநிலை, வினையிடை நிலை என இரண்டு வகைப்படும். அவற்றுள்,

(அ) பெயரிடைநிலை.

இது வரையறுக்கப்பட்டதன்று. ஆன்றோரால் நியமிக்கப்பட்ட இலக்கியத்தைப் பார்த்து அவ்விலக் கியத்திற்கு இலக்கணமாகச் சொல்லவேண்டுதலின், பகுதியையும் விகுதியையும் பிரித்து இடையில் ஏதேனும் நின்றால் அது பெயரிடைநிலை எனப்படும். வினையாலணை யும்பெயர்க்குமட்டும் வினைக்குக் கூறப்படும் இடைநிலைகள் வந்து அமையும். (141)

(ஆ) வினையிடைநிலை.

இது மூன்றுகால இடைநிலைகளாகப் பகுத்துக் கூறப் படும்.

(1) இறப்பு:- த், ட், ற், இன் என்னும் நான்கும் இறந்தகாலத்தைக் காட்டும் இடை நிலைகளாகும்.

(2) நிகழ்வு :- ஆநின்று, கின்று, கிறு என்னும் மூன் றும் நிகழ்கால இடைநிலைகளாகும்.

(3) எதிர்வு:- ப், வ் என்னும் இரண்டும் எதிர்கால இடைநிலைகளாகும்.

இவைகளெல்லாம் ஐம்பால் மூவிடங்களில் வந்து காலங்காட்டும் இடைநிலைகளாகும். (142)

4. **சாரியை :-** விகுதி முதலிய உறுப்புக்களைச் சார்ந்து வருவது 'சாரியை' எனப்படும். அன், ஆன், இன், அல், அற்று முதலியன பகுபதங்களில் வரும் சாரியைகளாகும். (243)

5. **சந்தி :-** நால்வகைச்சொற்களும் ஒன்றோடொன்று சந்திக்கும் இடத்தில் வருவது 'சந்தி' எனப்படும். (154)

**விகாரம் :-** செய்யுளிலக்கணத்திற்கேற்ப வலித்தல், மெலித்தல், நீட்டல், குறுக்கல், விரித்தல், தொகுத்தல் என்னும் அறுவகைகளுள் ஒன்றாக விகாரப்பட்டு வருவதே 'விகாரம்' எனப்படும். எல்லாவுறுப்பும் முடிந்த பகுபதம் 'நடந்தனன்' என்பது. (155)

பிரிக்குமாறு :-

நட + த்(1) + த்(2) + அன்(1) + அன்(2).

நட = பகுதி.

அன் 2 = விகுதி(ஆண்பால் படர்க்கையொருமை, வினைமுற்றுப்பொருளில் வந்துள்ளது)

அன் 1 = சாரியை.

த் 2 — இறந்தகாலஇடைநிலை.

த் 1 = சந்தி.

த்—ந் = சந்தியால் வந்த வல்லொற்று மெல்லொற்றாய்த் திரிந்தது விகாரம்.

## எழுத்துச்சாரியை, பதச்சாரியை வேறுபாடு:—

எழுத்துச்சாரியை.

1. கரம், காரம், கான் என்னும் மூன்றும், அகரமும் எழுத்துச் சாரியைகளாகும்.
'க்' போன்ற மெய்களை ஒலிக்குங்காலத்து, அகரத்தைச் சேர்த்தே ஒலிக்கவேண்டும். அவ்வமயம் 'அகரம்' மெய்கட்குரிய சாரியையாகக் கொள்ளப்படும்.
ஏனைய மூன்றனுள் :-

2. காரம் — 'அகாரம்' என உயிர்நெடிலோடும்,
கான்—ஐகான், ஔகான் என, ஐ, ஔ ஆகிய நெடிலோடும்,
கரம்—'அகரம்', 'மகரம்' என உயிர், உயிர்மெய் என்னும் இருவகைக் குறிலோடும் வரும்.
காரமும், கானும் — அகாரம், மகாரம் எனவும், அஃகான், மஃகான் எனவும் இருவகைக் குறில்களோடும் வரும்.
இவ்வாறு எழுத்தொடு சார்ந்து வருவதையே 'எழுத்துச்சாரியை' என்பர்.

பதச்சாரியை.

1. அன், ஆன், இன், அல், அற்று, இற்று, அத்து, அம், தம், நம், நும், ஏ, அ, ஐ, கு, ன என்பனவும் இவைபோன்ற பிறவும் பதச்சாரியைகளாக வரும்.

2. பதத்தின்முன் விகுதியும், பதத்தின்முன் பதமும் பதத்தின்முன் உருபும்புணருங்கால்;சாரியை ஒன்றேனும், பலவேனும் வருதலும், வாராதொழிதலும் உள. விகற்பமாகவும் வரும்.

(1) நடந்தனன்:- ஈண்டுப் பதமுன் விகுதி புணருங்கால் 'அன்' சாரியை வந்தது.

(2) நெல்லின்குப்பை:-பதமுன் பதம் புணருங்கால் 'இன்' சாரியை வந்தது,

(3) மரத்தை - பதமுன் உருபு புணருங்கால் 'அத்துச்' சாரியை வந்தது.

(4) நடந்தான், புளிக்கறி, ஆவை எனச் சாரியை வாராதொழிந்தன.

(5) புளியமரம் — 'அம்' என்னும் சாரியையின் மகரம் கெட்டுவந்தது.

(126, 243)

## பதவியலில் பகுதி, விகுதி, இடைநிலை என்னும் மூன்றை மட்டும் கூறி ஏனையவற்றை விடுக்கக் காரணம்:-

பதவியலில் கூருது விடப்பட்டவை:- சாரியை, சந்தி, விகாரம் என்பன. இவற்றுள், சாரியைபற்றி உருபு புணரியலில் 243, 244-ஆம் நூற்பாக்களில் விரிவாகக் கூறியுள்ளார் அதனுலும், விகாரம்பற்றி உயிரீற்றுப் புணரியல் 154, 155, 156, 157, ஆகிய நூற்பாக்களினுல் தெளிவாகக் கூறியுள்ளார் அதனுலும், சந்தி என்பது பெயர் முதலிய சொற்கள் ஒன்ருேடொன்று சந்திக்கும் இடத்துத் தோன்றும் எழுத்துக்களைக் குறிக்கும். அவ்வெழுத்துக்கள். சொற்களின் அமைவுக்கேற்ப வருமேயன்றி, அவை இன்னவை என்று வரையறை செய்ய முடியாதவை. எனவே, அதனை இலக்கியம் கண்ட பிறகு உய்த்துணருமாறு விடுத்தனர் அதனுலும்—இம்மூன்றையும் பதவியலில் கூருமற் சென்ருர் நன்னூலார். (134)

## பண்பிற்பகர நிலைப்பதமே — பதசாரம்.

செம்மை முதலாகக் கூறப்பட்டுள்ள வாய்பாடுகள் எல்லாம் சொல்நிலையால் பகுபதமாயினும், மைவிகுதிக்குப் பகுதிப்பொருளன்றி வேறுபொருள் இன்மையின், பொருள்நிலையால் பகுக்கப்படாது எனக்கூற விரும்புவார், பகுதியாகிய பண்புப்பொருள்களினின்றும், வேறுபொருள் பகுக்கப்படா என்னும் கருத்தில் 'பண்பிற்பகா' என்ருர்.

'மெய்கள் அகரச்சாரியையோடே சேர்த்துச் சொல்லப்படும்' என்ருற்போல, செம்மை முதலாகக் கூறப்பட்டுள்ள வாய்பாட்டுப்பண்புகள் 'மை'விகுதி இல்லாமல் இயங்கா. ஆதலின், இவ்விகுதி (மை)யினையும் பகுதியாக நிறுத்தி மேல்வரும் (அன் முதலிய) விகுதியோடு புணர்க்கப்படும் எனக் கூற விரும்புவார் 'நிலைப்பதம்' என்ருர். (135)

"ஈறுபோதல்.........இயல்பே" விளக்கம்:-

செம்மை, சிறுமை முதலியன பண்புச்சொற்களின் பகுதிகள். அவைகள், விகுதிகளோடு அல்லது வருமொழிகளோடு சேருங்காலத்து அடையும் மாறுதல்களை (விகாரங்களை) இந்நூற்பா விளக்குகின்றது.

இவ்விதியைப் பின்வரும் எல்லா விகாரங்களிலும் கொள்ளவேண்டும்.

1. ஈறுபோதல்:- 'நல்லன்' — நன்மை + அன் — இதில் உள்ள பண்பு (மை) விகுதி ஈறுபோதல் என்னும் விதிப்படிப் போயிற்று.

2. இடையுகரம் 'இ'யாதல்:- 'கரியன்' = கருமை + அன்— இதில் ஈற்று விகுதிபோய், இடையிலுள்ள உகரம் (ர் + உ) 'இடையுகரம் இ யாதல்' என்னும் விதிப்படி இகரமாயிற்று.

3. ஆதிநீடல்:— பாசடை = பசுமை + அடை — இதில் 'மை' விகுதிபோய், 'ஆதிநீடல்' என்னும் விதிப்படிப் 'ப'என்னும் முதலெழுத்துப்'பா'என நீண்டது.

4. அடியகரம் 'ஐ'யாதல் (அடி = முதல்):- பைங்கண் = பசுமை + கண்—இதில் 'மை'விகுதி போய், இடையுகரம் சகரத்தோடும் கெட்டு, வருமெழுத்திற்கு இனம்மிகுந்து, 'அடியகரம் 'ஐ' யாதல்' என்னும் விதிப்படி முதற்கண்ணுள்ள அகரம் ஐகாரமாயிற்று.

5. தன்னொற்றிரட்டல்:— வெற்றிலை = வெறுமை + இலை— இதில் 'மை'விகுதிபோய்த் 'தன்னொற்றிரட்டல்' என்னும் விதிப்படி 'வெறு' என்பது 'வெற்று' எனத் தன்னொற்றாகிய றகரம் இரட்டித்தது.

6. முன்னின்ற மெய்திரிதல்:- சேதா = செம்மை + ஆ— இதில் மைவிகுதிபோய், முதல்நீண்டு 'முன்

னின்ற மெய்திரிதல் என்ற விதிப்படிச் ‘சேம்’ என்பதிலுள்ள மகரமெய் தகரமெய்யாய்த் திரிந்தது.

7. இனமிகல்;- பைந்தார் = பசுமை + தார்—இதில் ‘மை’ விகுதி போய், இடையுகரம் சகரத்தோடும் கெட்டு, அடியகரம் ஐகாரமாய், ‘இனமிகல்’ என்னும் விதிப்படிப் ‘பை + தார் — பைந்தார் எனத் தகரமெய்க்கு இனமாகிய நகரமெய் மிகுந்தது. (136)

**‘ஈறுபோதல்’ என்னும் நூற்பாவில் உரைகாரர் கூறும் பதசாரம்.**

**ஈறுபோதல்:—** ‘மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்’ என்ற அகரம், பன்னீருயிரும் மெய்யோடு புணர வருங்காலத்து இயல்பாகவே நீங்கினற்போல, செம்மை முதலியவற்றேடு விகுதி முதலியன புணரவருங்காலத்துச் ‘செம்’ முதலிய பண்புவேர்ச்சொல் நிற்க, அப்பகுதிப் பொருளையுணர்த்தும் (மை)விகுதி இயல்பாகவே நீங்கிவிடும் எனக் கூறவிரும்புவார், ‘ஈறுகெடுதல்’ என்னது, ‘ஈறு போதல்’ என்ருர்,

**இனையவும்:-**

(அ) விதந்து (விரித்துக்) கூருத விகாரங்களும் உள; அவை வந்தவிடத்துக் காண்க எனக் கூறவிரும்புவார் ‘இனைய’ என்றும்,

(ஆ) ஈறுபோதல் முதலிய விகாரங்கள் யாண்டும் வர வேண்டுமென்பதில்லை. சிவப்பு + அன் = சிவப்பன்; கருப்பு + அன் = கருப்பன் என்னும் பிறவாய்பாடுகள் முடிவதுபோல, செம்மை + அன் = செம்மையன்; கருமை + அன் = கருமையன் எனவும் முடியவும் பெறும் எனக் கூறவிரும்புவார் எதிர் மறையும்மைகொடுத்து ‘இனையவும்’ என்றும், கூறினர்.

**பண்பிற்கியல்பே:-** ப்ண்புச்சொற்கள், 'நல்லன்' என வினைவிகுதியோடும், 'பெரியன்' எனப் பெயர்விகுதியோடும், 'பைந்தார்' என வேறுபதத்தோடும் புணர்ந்து வரும். ஆகவே, செம்மை முதலியனவற்றைப் பகுதி எனக் கூறின், அவை, அன் முதலிய விகுதிகளோடு மட்டுமே வரும் எனப் பொருள்படும். அங்ஙனமின்றி, வேறுபதங்களோடும் அவை புணர்வது உண்டு. ஆதலின் அவை, விகுதி, பதம் ஆகிய எல்லாவற்ருேடும் புணரினும் இங்குக் கூறப்பட்ட விகாரம் உண்டு என்பதை அறிவிக்கவேண்டிப் பகுதிக்கு என்னுது 'பண்பிற்கியல்பே' என்ருர். (136)

**'இருபான்மூன்ருமீற்றவும்' — இவையென்பதும், இவற்றுள் விலக்கப்பட்ட எழுத்தும், அதற்குக் காரணமும் :-**

மொழிக்கு இறுதியில் வரும் எழுத்துக்கள் இருபத்து நான்கு. அவையாவன:- உயிர்—12; மெய்—11; குற்றியலுகரம்—1. இவற்றுள் எகரம் ஒழித்து, ஏனைய இருபத்து மூன்று எழுத்துக்களையும் ஈற்றிலுடைய பகாப்பதமாகிய பகுதிகளே 'செய்' என்னும் ஏவல்வினைக்கும், மற்றைய வினைகட்கும் பகுதிகளாய் வருவனவாம்.

நட, வா, மடி, சீ, விடு, கூ, ஏ, வை, நொ, போ, வெள என்றும்,

உரிஞ், உண், பொருந், திரும், தின், தேய், பார், செல், வவ், வாழ், கேள் என்றும், அஃகு என்றும் வரும் வாய்பாடுகளே அப்பகுதிகளாகும். இங்கு, 'மொழிக்கு ஈரும் என எழுத்தியலில் கூறிய இருபத்துநான்கனுள் விலக்கப்பட்ட எழுத்து—எகரம்.

**காரணம் :—**

எகரம் வினு இடைச்சொல்லிலும், அளபெடையிலும், தன்னையுணர்த்துமிடத்திலும் ஈருகுமேயன்றி, மற்றைய

சொற்களில் ஈருகாது ஆதலின், அதனை விலக்கினர்.

[137)

## 'செய்யென்னேவல் வினைப்பகாப்பதமே' விளக்கம் :

இது, 'செய்யென் ஏவற்பகாப்பதம்' என்றும், ஏனை வினைப்பகாப்பதம்' என்றும் பிரித்துக் கூறப்படும். நட என்பது முதலாக அஃகு என்பது ஈருகவுள்ள இருபத்து மூன்று ஈறுகளையுடைய சொற்களெல்லாம் 'செய்' என்னும் வாய்பாட்டு ஏவல்வினைக்குப் பகுதியும், மற்றைத் தெரிநிலை வினைகட்குப் பகுதியுமாய் வரும்.

எ-டு:—நடவாய், வாராய் முதலிய ஏவல்வினைகட்கும், நடந்தான், வந்தான் முதலிய தெரிநிலைவினைகட்கும் நட, வா முதலியன பகுதிகளாய் வருதலைக் காணலாம்.

இவற்றில், முன்னது 'செய்' என்னும் ஏவல்வினைப் பொருளை உணர்த்துவதால் 'ஏவல்வினை'யென்றும், பின்னது தொழில்மட்டுமுணர்த்திக் காலங்காட்டி வருவதால் 'தெரி நிலைவினை' என்றும் கூறப்படும். இவ்விருவகையான வினை கட்குமே நட, வா முதலிய சொற்கள் பகுதிகளாய் வரும். (137)

## 'செய்யென்னேவல் வினைப்பகாப்பதமே'—இதற்குப் பிறருரையும், மறுப்பும் :-

இத்தொடரை ஆற்ருெழுக்காகக்கொண்டு மயிலைநாதர் கூறும் உரை: "நட, வா முதலிய இருபத்துமூன்று ஈற்ற வாயஏவல்வாய்பாட்டான் வருவனவெல்லாம் 'செய்' என் னும் ஏவல்வினையின் பகாப்பதமாகிய பகுதிகளாம்" எனப் பொருள்கூறி, அவ்வேவல்வினைப்பகாப்பதங்களே 'நடந் தான்' முதலிய தெரிநிலைவினைகட்கும், வினையாலணையும் பெயர்கட்கும் பகுதிகளாய் வரும் என்று விளக்கம் தருவர் மயிலைநாதர்.

(ஆற்றெழுக்காகக் கொண்ட) இவ்வுரையால், நட, வா முதலியன ஏவற்பொருளையுணர்த்தும் பகாப்பதங்கள் என்றும். அவைகளே ஏனைய வினைப்பகுபதங்கட்கும் பகுதிகளாய் வரும் என்றும் கொள்வதோடு, ஏவல்வினையில் நட, வா முதலிய பகாப்பதங்கள் இருக்கின்றனவேயன்றி (விகுதியோடுகூடிய) பகுபதங்கள் ஒன்றும் இல்லையென்றும் அறியலாம்.

**முனிவர் மறுப்பு :-**

(1) அங்ஙனம், ஏவல்வினையில் பகுபதங்கள் இல்லை என்று கொண்டால்,

'அருளைப் **புரிவாய்**'. 'எந்தாய் **இரங்காய்**'.

'வா **என்றருளாய்**'. 'நம்பி **நல்காய்**'.

என்னும் இவைபோன்ற இடங்களில் புரி, இரங்கு, அருள், நல்கு, முதலிய பகுதிகள் திணை, பால், இடம், காலங்காட்டும் ('ஆய்' என்னும்) விகுதியுறுப்போடுங்கூடி முற்றுச்சொற்களாய் நிற்கும் (முன்னிலையேவல் ஒருமை எதிர்காலவினைமுற்றுப்) பகுபதங்களையெல்லாம் 'பகாப் பதங்கள்' எனக் கூறவேண்டிவரும். அங்ஙனம் அவற்றை 'ஏவற்பகாப்பதங்கள்' எனக் கூறுவது சிறிதும் பொருந்தாது,

(2) புரியாய் முதலியவற்றைப் பகாப்பதங்கள் என்று கொண்டால்,

'**தத்தம்**, பகாப்பதங்களே பகுதியாகும்' என்னும் பகுதி பற்றிக் கூறும் பொதுநூற்பாவால் – பெயர் வினைப் பகுபதங்களில் தத்தம் முதனிலையாகிய பகாப்பதங்களே பகுதியாம் எனக் கூறினுரன்றே? அங்ஙனங் கூறியவர் 'புரியாய்' போன்ற ஏவல்வினைகளில் முதலில் நிற்பனவாகிய 'புரி' முதலியவற்றைப் பகுதியெனக்கொள்ளாது, 'ஏவல்வினையில்

பகுபதங்களே இல்லை' என்னும் பொருளில் அதற்கு அடுத்து விதிசெய்வாராயின், 'மாறுகொளக்கூறல்' என்னும் குற்றம் ஏற்படும். ஆதலின், ஆற்றெழுக்காகப் பொருள் கூறுவது பொருந்தாது. (157)

## 'நடவா...' என்னும் நூற்பா பத்தழகோடும் பொருந்தி நிற்குமாறு :-

கையறியா மாக்கள் = நூல்நெறியறியாத மாக்கள். அவர்கட்குப் பவணந்தியென்னும் புலவர்பெருமான்புகழும் நூற்பாப்பெருமையும் விளங்குமாறில்லை. நூலியற்றும் புலமை வாய்ந்தோர் யாவர்க்கும் பவணந்தியென்னும் புலவர் பெருமானின் பெருமையும், இந்நூற்பாப்பெருமையும் விளங்கி நிற்கும். அங்ஙனம் விளங்குங்கால், பவணந்தியின் பெருமை பலவகைப்பட்டபுலமையில் அழகுடைத்தாய் விளங்குதல்போல, இந்நூற்பாவும் பலவகைப்பட்ட நூலழகுடையதாய் விளங்குகின்றது.

புலமையழகுகளாவன :— சுருங்கக்கூறல், விளங்க வைத்தல் முதலியனவாம். அங்ஙனமின்றி, வீணே விரித்துக்கூறுதலும், கேட்போர் மயங்கக்கூறுதலும்போல்வன புலமைக்கு அழகல்லனவாம்.

நூலழகுகள்:- சுருங்கக்கூறல் முதலிய பத்தாம்.

1. பல நூறு வரியையுடைய வினைப்பகுதிகளை இருபத்து மூன்று (23) ஈற்றவாகச் சுருங்கக்கூறியது.

2. பொருளை ஐயமற விளங்கவைத்துள்ளமை, 'செய்யென் ஏவல்வினைப்பகாப்பதமே' என்புழி வினையுள்ளடங்கும் ஏவலை ஐயமறுத்தற்குப் பிரித்துக்கூறியவாற்றால் உணரப்படும். மேலும், சுருங்கச்சொல்லல் என்ற அழகினைச் செய்யென்னேவற்பகாப்பதம் என்றும், செய்யென் வினைப்பகாப்பதம் என்றும் விரித்துக்கூறவேண்டியதனைச் சுருக்கிக் கூறியவாற்றுலும் உணரலாம்.

3. நூற்பாக் கிடக்கையிலுள்ள சொற்கள் படிப்போர்க்கு இனிமை நல்குவன, இனிய ஒழுக்குடையன.

4. அவை, ஒவ்வோரீற்றிற்கும் சிறந்த சொற்களாய்ப் பொருள்விளங்கும் ஆற்றல் உள்ளனவாய் உள்ளன.

5. ஓசைநலம் உடையது இந்நூற்பா.

6. ஆழமுடைமை — பொருள்நோக்குடையதா யிருத்தல். ஏவற்கண்ணும் 'நட' முதலியன பகுதியேயாம் என்புழிக் காரணம் கருதிய நோக்குடைமை விளங்கும்.

7. இருபத்துமூன்றீற்று வாய்பாடுகளும் முறையே கூறப்பட்டன.

8. கற்ருேர்கருத்தோடு மாறுபடாத கருத்துடைமையால் உலகமலேவற்றுள்ளது. (உலகம்—உயர்ந்தோர்)

9, விழுமியபொருளேப் பயந்துள்ளது. விழுமியது பயத்தல் என்ற அழகிண இருபத்துமூன்றீற்றவாக விகற்பித்துக்காட்டும் வாய்பாடுகள் முதலியவெல்லாம் இப்பொதுவாய்பாட்டில் அடங்குமென்பார், செய்யெனவும் கூறிஞர் என்று உரைகாரர் கூறுவதனுல் நன்கு உணரலாம். காரணம்: விணயெச்சம், பெயரெச்சம் முதலியவைகளுக்குத் தனித்தனியாகவே பொதுவாய்பாடு கூறியுள்ளார் தொல்காப்பியர். நன்னூலார் விணப்பகுதி முழுமைக்கும் உரிய சிறப்புவாய்பாடுகளேயும், அவையெல்லாம் அடங்குதற்குரிய செய்யென்னும் பொதுவாய்பாட்டிணேயும் ஒரு நூற்பாவில் கூறியதாகும்.

10. உதாரணங்கள் நூற்பாக்கிடக்கையாலும் விளங்கி நின்றன. (137)

## "விளம்பிய பகுதி வேருதலும் விதியே"—இதற்கு முனிவர் உரையும், பிறருரையும், மறுப்பும்:-

நட, வா முதலிய தெரிநிலே விணப்பகுதிகள் 'நடவாய்', 'வாராய்' முதலிய் ஏவல்விணகட்குப் பகுதிகளாயும், 'நடந்தான்', 'வந்தான்' முதலிய ஏணயவிணகட்குப் பகுதிகளா

யும் வரும். இவ்விருவினைகளுள், ஏவற்பகுதிகள் 'நட வாய்,' 'வாராய்' எனத்தன்வினைப்பொருளை யுணர்த்தி வருதலோடு, 'நடப்பிப்பாய்', 'வருவிப்பாய்' எனப் பிற வினைப்பொருளையுணர்த்தும் முறையில் வேறுபட்டு(திரிந்து) வருவது உண்டு. அவ்வேவற்பகுதிகள் வேருதல்போல அதன்பின்னர்க்கூறப்பட்டுள்ளமற்றைய வினைப்பகுதிகளும், 'நடந்தான்', 'வந்தான்' எனத் தன் வினைப் பொருளை யுணர்த்தி வருதலோடு 'நடப்பித்தான்', 'வருவிப்பித்தான்' எனப் பிறவினைப்பொருளையுணர்த்தும் முறையில் வேறுபடுதலுமுண்டு. இதுவே முனிவர்தரும் உரையாகும்.

**பிறருரை:-** "நட, வா, மடி என்னும் நூற்பாவிற் கூறப்பட்டுள்ள வினைப்பகுதிகளிற்சில விகுதிகளோடு கூடுங் காலத்துத் தம் இயல்பில் நில்லாது விகாரப்படுதலுமுண்டு. அங்ஙனம் விகாரப்படுவது குற்றமாகாது" என்பது.

எ-டு:- வா என்னும் பகுதி 'வந்தான்' என 'ஆன்' விகுதியோடு புணருங்காலத்து 'வா—வ' என நெடில்குறுகி விகாரப்பட்டு வருதலைக் காணலாம்.

இதுவே இதற்கு மயிலைநாதர் கூறும் உரை.

**மறுப்பு:-** இத்தகைய விகாரங்கள் பகுபதவுறுப்பாக மாட்டெறிந்துகொண்ட, தோன்றல், திரிதல், கெடுதல் என்னும் மூன்று சந்தியுள்ளும், வலித்தல் முதலிய ஒன்பது செய்யுள்விகாரத்துள்ளும் அமைந்து கிடக்கின்றன. ஆதலின், இந்நூற்பாவிற்கு அவ்வாறு உரைகூறுவது பொருந்தாது.

(189)

**"இலக்கியங்கண்ட......எனலே"—சிறப்புரை:—**

**இலக்கியம்** என்றது குறிக்கப்படும் இலக்கணத்தை யுடையன எல்லாவற்றையும் குறிக்குமாயினும், ஈண்டுப் பெயர்ப்பகுபதத்தையே குறிக்கும்.

**இலக்கணம்** என்றது அப்பெயர்ப்பகுபதத்துப் பகுதி முதலிய உறுப்புக்களைக் குறிக்கும்.

**கண்டதற்கு;-** 'மா, பலா முதலியன பராரை (அடிப் பகுதி) முதலிய சினையோடு நின்றன' எனக் கண்டது கூறுவாரைப் போல, பகுபதம், பகுதி முதலிய உறுப்போடு நின்றது எனக் கண்டது கூறி, அப்பதத்தைத்தந்த யாருக்கும் தோல்வியடையாத நாவன்மையுடைய அறிவின்மிக்கோரது ஆணையின் நிற்றலின் 'கண்டதற்கு' என்றார்.

**'இடைநின்றது' :-** சாரியை, சந்தி, விகாரங்களும், பகுதி விகுதிகளின் இடையில் நிற்குமாயினும், அவை, மேல் (புணரியலில்) எடுத்துக் கூறப்படுவதால் அவை ஒழிந்த ஏனையவற்றை 'இடைநின்றது' என்றார்.

**'வினைப்பெயரல்பெயர்' :-** (மேல்) வினைக்குக் கூறும் இடைநிலை வினையாலணையும்பெயர்க்கும் அமைவதால் 'வினைப்பெயரல்பெயர்' என்றார்.

**'எனலே' :-** இப்பெயரிடைநிலை வரையறுக்கப்பட்டதன்று; ஆங்காங்கு வருவது உணர்ந்துரைக்க என்பார் 'எனலே' என்றார். (141)

## காலங்காட்டும் விகுதிகளும், மேற்கோள்களும்.

| விகுதிகள். | காலம். | மேற்கோள். |
|---|---|---|
| 1. று, றும். | இறப்பும்.<br>எதிர்வும். | சென்று, சென்றும்.<br>சேறு, சேறும். |
| 2. து, தும். | இறப்பும்,<br>எதிர்வும். | வந்து, வந்தும்.<br>வருது, வருதும். |
| 3. டு, டும். | இறப்பு. | உண்டு, உண்டும். |
| 4. கு, கும். | எதிர்வு. | உண்கு, உண்கும். |
| 5. மின். | எதிர்வு. | உண்மின். |
| 6. ஏவல்வினைமுற்று. | எதிர்வு. | உண்ணாய், உண். |
| 7. வியங்கோள்விகுதி. | எதிர்வு. | வாழ்க, வாழிய. |
| 8. இகரம். | எதிர்வு. | சேறி (செல்வாய்). |

| விகுதிகள். | காலம். | மேற்கோள். |
|---|---|---|
| 9. மார். | எதிர்வு. | உண்மார். |
| 10. பகரம். | இறப்பும், எதிர்வும். | உண்ப(உண்டார்) உண்ப(உண்பார்) |
| 11. செய்யும் என்னும் முற்றின் 'உம்'விகுதி. | நிகழ்வும், எதிர்வும். | உண்ணும். |
| 12. எதிர்மறை ஆகார விகுதி, | இறப்பும், நிகழ்வும், எதிர்வும். | உண்ணு. |

(145)

**'இடைநிலையாம் இவைசிலவில' — கோடிட்ட பகுதிக்கு உரைகாரர் கூறும் விளக்கம் :-**

வினைப்பகுபதங்கட்கு இடைநிலை கூறிய நன்னூலார், 'கூறப்பட்ட இடைநிலைகளிற்சில, முற்றுவினை, எச்சவினைகட்கு வாரா' எனக் கூறுகின்ருர். அவ்வாறு கூறவே, 'வினைச்சொற்களில் விகுதி, பகுதி, பிறஇடைநிலை என்பன காலத்தைக்காட்டும்' என்பது பெற்ரும். அவற்றுள்,

**1. விகுதி காலங்காட்டல் :-**

இதுபற்றி 79ஆம் பக்கத்திற் காண்க.

**2. பகுதி காலங்காட்டல் :-**

பகுதியொற்று இரட்டித்து இறந்தகாலங்காட்டும்.

| | | |
|---|---|---|
| புகு + ஆன் = புக்கான். | (க்) | பகுதியொற்றிரட்டித்து இறந்த காலங்காட்டியது. |
| தொடு + ஆன் = தொட்டான். | (ட்) | |
| பெறு + ஆன் = பெற்ருன். | (த்) | |

**3. பிறஇடைநிலை காலங்காட்டல் :**

இசின்—இறந்தகாலத்தையும், ம், மன் என்பன எதிர்காலத்தையுங் காட்டும்.

என் + இசின் + ஆர் = என்றிசினேர் — இறப்பு.

என் + ம் + அர் — என்மர் }
என் + மன் + ஆர் = என்மனர் } எதிர்வு.

பின்னைய இரண்டும் சிறுபான்மையாய் வரும். ஆதலின், அவற்றை விடுத்துக் காலங்காட்டும் விகுதிகளைமட்டும் நூற்பாவிற் கூறியுள்ளார் நன்னூலார். (144, 145)

## "றவ்வொடுகரம்"—என்ற நூற்பாவில், செய்யும் நிகழ்வெதிர்வும் என்ற இலக்கணம் முற்றிற்கா, எச்சத்திற்கா என்பதுபற்றி ஆய்வு :-

'செய்யும்' என்பது முற்ருகவும் எச்சமாகவும் வரும். முற்றில் இடைநிலையின்றி விகுதி நிகழ்வும் எதிர்வுமாகிய இருகாலங்களையும் காட்டுவதைப் போலவே, எச்சத்திலும் இடைநிலையின்றி விகுதி காலங்காட்டும். ஆயினும், அஃது எதிர்காலங்காட்டும் என, மேல் வினையியலில் 'செய்த, செய்கின்ற, செய்யும் என் பாட்டிற் காலமும்—தோன்றி' என்னும் பெயரெச்ச நூற்பாவில் (340) எடுத்துக் கூறுகின்ருர். ஆதலின், பதவியலில் 'செய்யும் நிகழ்வெதிர்வும்' என்ற இலக்கணம் முற்றிற்கே; எச்சத்திற்கன்று என்பது அறியப்படும். (145)

## கீழ்வருவனவற்றிற்குப் பகுபதவுறுப்பு முடித்துக் காட்டல்:-

நடந்தனன் — 68ஆம் பக்கத்திற் காண்க.

| | பகுதி. | | சந்தி. | | இடை. | | விகுதி. |
|---|---|---|---|---|---|---|---|
| கற்பிப்பான் — | கற்பி | + | ப் | + | ப் | + | ஆன் |
| | (கல் + பி). | | | | | | |

கல் என்னும் பகுதியும் 'பி' என்னும் பிரிவினை விகுதியும் பெற்றுக் 'கற்பி' என இரண்டும் ஒருபகுதியாய் நின்று, மேல்வரும் ஆன்விகுதியோடு புணர்ந்து, விகுதியைச்சார்ந்து பகர எதிர்காலவிடைநிலையும், அதற்குமுன் பகர எழுத்தும் (சந்தி) தோன்றி முடிந்தது.

**கரியன்:—** கருமை+அன் கருமை — பகுதி.
அன் — விகுதி.

முடிக்கும்வழியை 71ஆம் பக்......காண்க.

**தொட்டான்:—** 90ஆம் பக்......காண்க.

**சேறு:—** செல் + று. செல் — பகுதி.
று — விகுதி.

'செல்' என்னும் பகுதியும் 'று' என்னும் எதிர்காலங்காட்டும் விகுதியும் பெற்றுத் தொகுத்தல் விகாரத்தால் லகரம் மறைந்து நீட்டல் விகாரத்தால் பகுதி நீண்டு முடிந்தது.

**வருதும்:—** வா+ரு+தும். வா—பகுதி.
தும்—விகுதி.

வா என்னும் பகுதியும் தும் என்னும் எதிர்காலங்காட்டும் விகுதியும் கூடி, குறுக்கல் விகாரத்தால் பகுதி குறுகி, விரித்தல் விகாரத்தால் ரகர உயிர்மெய் விரிந்து முடிந்தது.

**உண்ப:—** (1) உண்+ப உண்—பகுதி.
ப—விகுதி.

(2) உண்+ப்+அ உண்—பகுதி.
ப்—எதிர்கால இடைநிலை.
அ—விகுதி.

(1) உண் என்னும் பகுதியும், பகர எதிர்காலங்காட்டும் விகுதியும்கூடி முடிந்தது.

(2) உண் என்னும் பகுதியும் அகரவிகுதியும் கூடி, பகர எதிர்காலங்காட்டும் இடைநிலையும் பெற்று முடிந்தது,

**பாணத்தி**— பகுதி. சாரியை. சந்தி. இடைநிலை. விகுதி.
பாண் + அ + த் + த் + இ

பாண் என்னும் பகுதியும் இகர (பெண்பால்) விகுதியும் அகரச்சாரியையும் தகரப் பெயரிடைநிலையும் கூடித் தகரமெய்ச் சந்தி மிகுந்து முடிந்தது.

**புக்கான்** — 80ஆம் பக்......காண்க.

**என்றிசினோர்**— 80ஆம் பக்......காண்க.

**வாழி**— வாழ் + இ.
வாழ் — பகுதி.
இ — விகுதி. இதுவே எதிர்காலங்காட்டியது.

**உண்கும்** —உண் + கும்.
உண்—பகுதி.
கும்—தன்மைப்பன்மை வினைமுற்று விகுதி. இதுவே எதிர்காலங்காட்டியது.

**சேறி**— செல் + (ற்) + இ
செல்—பகுதி.
இ—எதிர்காலங்காட்டும் விகுதி.
பகுதி விகாரப்பட்டுச் 'சேறி' என முடிந்தது.

**விகுதிபுணர்ந்து கெட்டுநிற்குஞ் சொற்களும், புணர்ந்து கெடுமாறும்:-**

1. **செய்யாய்** என்னும் வாய்பாட்டுச் சொற்கள். இவ்வாய்பாட்டில் வருவன நடவாய், வாராய் போன்ற இருபத்துமூன்று ஈற்றுச்சொற்களாம். இவைகளெல்லாம் நடவாய் என விகுதியோடு கூடிநின்று பொருளுணர்த்துவதோடன்றி, நட முதலிய பகுதியோடு ஆய்விகுதி புணர்ந்து,

கெட்டு, மறைந்து நின்றே தன்பொருளையுணர்த்தும். ஆகவே, ஆய் விகுதி கெட்டு நட, வா, உண் என வருவன விகுதி புணர்ந்து கெட்டு நிற்குஞ் சொற்களாம்.

### 2. எழுத்து = எழுது + ஐ.

எழுதப்படுவது என்பது பொருள். ஆதலின், ஈண்டுச் செயப்படுபொருள் உணர்த்தும் ஐகாரவிகுதி இருக்க வேண்டும். ஆதலின், 'எழுது' என்னும் பகுதிமுன்னர்ச் செயப்படுபொருளையுணர்த்தும் அவ் ஐகார விகுதி புணர்ந்து கெட, தகரம் இரட்டித்து 'எழுத்து' என முடிந்தது.

### 3. ஊண், தீன், கோள்—என்றாற்போல்வன.

இவைகள் உண்ணப்படுவது, தின்னப்படுவது, கொள்ளப்படுவது என்னும் பொருளில் வருவதால் செயப்படு பொருளையுணர்த்தும் ஐகாரவிகுதி உண் + ஐ; தின் + ஐ; கொள் + ஐ எனப் புணர்ந்து பிறகு கெட்டு முதலெழுத்து நீண்டு நின்றன.

### 4. திரை, நுரை, அலை, தளிர், பூ, காய், கனி —முதலியன,

திரைவது, நுரைவது, அலைவது, தளிர்ப்பது, பூப்பது, காய்ப்பது, கனிவது என்னும் பொருளில் வருவதால் அவ் வத்தொழிற்கு முதலாக (எழுவாயாக)வுள்ள ஒருபொருளை யுணர்த்தவேண்டும். ஆதலின் அவ்வாறு வினை முதற் பொருளையுணர்த்தும் இகரவிகுதி 'திரை + இ' என்றாற் போன்று புணர்ந்து கெட்டுநின்றன.

### 5. 'கெடு' என்றாற்போல்வன.

'கெடுவாக வையாது உலகம்'–என்புழிக் 'கெடு' என்னும் பகுதி 'கெடுதல்' என்னும் தொழிற்பெயரினது பொருளை

யுணர்த்துகின்றது. ஆதலின் அப்பொருளையுணர்த்தும் தல் விகுதி கெடு என்பதோடு புணர்ந்து கெட்டு நின்றது.

'கேடறியா.........தலை' என்புழிக் கேடு என்பது அவ்வாறே கெட்டு முதல் நீண்டு நின்றது.

இங்ஙனம் விகுதி கெட்டு முதனிலை (பகுதி) மட்டும்நிற்குஞ்சொற்களை முதனிலைத் தொழிற்பெயர் என்றும், முதனிலை திரிந்து நிற்பனவற்றை முதனிலை திரிந்த தொழிற்பெயர் என்றும் கூறுவர். (145)

## (1). ஆரியமொழிகள் தமிழில் திரிந்துவருதல்—திரிந்துவரும் எழுத்துக்கள் :-

ஆரிய மொழியுள் 'அச்சு' என வழங்கப்படும் உயிரெழுத்துக்கள்—16; அவற்றின் நடுவிலுள்ள ரு, ரூ, லு, லூ என்னும் நான்கு எழுத்துக்களும் இறுதியிலுள்ள அம், அஹ என்னும் இரண்டு எழுத்துக்களும் ஒழித்து, ஒழிந்த பத்து உயிரெழுத்துக்களும், ஆரியம், தமிழ் ஆகிய இருமொழிகட்கும் பொதுவெழுத்துக்களாகும்.

ஆரிய மொழியுள் 'அல்' என வழங்கப்படும் மெய்யெழுத்துக்கள்-37. அவற்றுள்,

க, ச, ட, த, ப என்னும் ஐந்து வருக்கங்களில் முதலிலுள்ள க, ச, ட, த, ப என்னும் ஐந்தும் இறுதியிலுள்ள ங, ஞ, ண, ந, ம என்னும் ஐந்தும், ய. ர, ல, வ என்னும் நான்கும், ளகரமும் ஆகிய பதினைந்து மெய்யெழுத்துக்களும் இருமொழிகட்கும் பொதுவெழுத்துக்களாகும். ஆக, ஆரிய மொழியிலுள்ள ஐம்பத்துமூன்றுஎழுத்துக்களில், இருமொழிகட்கும் பொதுவெழுத்துக்களாகவுள்ள இருபத்தைந்து எழுத்துக்கள் நீங்க, ஏனைய ஆரியமொழிக்கே சிறப்பாகவுரிய இருபத்தெட்டுஎழுத்துக்களும் தமிழில் தமக்கேற்ற பொதுவெழுத்துக்களாகத் திரிந்துவரும்.

ஆரியமொழியிலுள்ளவை உயிர் 16 } — 53
மெய் 37 }

| | | |
|---|---|---|
| பொதுவெழுத்துக்கள் | உயிர் 10<br>மெய் 15 | — 25 |
| ஆரியத்தின் சிறப்பெழுத்துக்கள் | உயிர் 6<br>மெய் 22 | 28 |
| | | (146) |

## (2) ஆரியவெழுத்துத் தமிழில் விகாரப்படுமாறு:-

| திரிபவை. | திரியுமாறு. | எ-டு. |
|---|---|---|
| 1. ஏழாமுயிர் (ரு). | இகரம்.<br>இரு. | ருஷபம்—இடபம்.<br>ருஷி—இருடி. |
| 2. ஐந்துவருக்கங்களில் இடையிலுள்ள மும்மூன்றும். | அவ்வவ் வருக்கத்தின் முதலெழுத்துக்கள். | |
| கவ்வருக்கம். | | நகம். நாகம், மேகம். |
| சவ்வருக்கம். | | சவி. விசயம், சடிதி. |
| டவ்வருக்கம். | | பீடம், சடம், திடம். |
| தவ்வருக்கம். | | தலம், தீனம், தரை. |
| பவ்வருக்கம். | | பலம், பந்தம், பாரம். |

3. எட்டாம் மெய் (ஜ) யகரமாம். பங்கஜம்—பங்கயம்.

4. முப்பதாம் மெய் முதற்கண் சகரமும் இடைக்கண் யகரமுமாம். சங்கரன், மயானம்.

5. முப்பத்தொன்றும் மெய் (ஷ) முதற்கண் சகரமும் இடைக்கண் டகரமுமாம்.

ஷண்முகம்—சண்முகம், ருஷபம்—இடபம்,

6. முப்பத்திரண்டாம் மெய் (ஸ) முதற்கண் சகரமும் இடைக்கண் தகரமுமாம்.

ஸபை—சபை, மாஸம்—மாதம்.

7. முப்பத்துமூன்ரும் மெய் (ஹ) முதற்கண் அகரமும் இடைக்கண் ககரமுமாம்.

ஹரன்—அரன், மோஹம்—மோகம்,

8. முப்பத்தைந்தாம் மெய் (க்ஷ) இரண்டு ககரமாம்.

தக்ஷிணம், தக்கிணம்.

9. பொதுவெழுத்துக்களுள் ஆகாரம் (இறுதி) ஐகாரமாம். சாலா—சாலை.

ஈகாரம் (இறுதி) இகரமாம். குமாரீ—குமாரி,

(147)

### (3) மேலும் திரியுமாறு:-

ஆரியமொழி தமிழில் வரும்பொழுது, ரகரத்தை முதலாகவுடைய மொழிக்கு அ, இ, உ என்னும் மூன்று குற்றெழுத்துக்களில் ஒன்றும்,

லகரத்தை முதலாகவுடைய மொழிக்கு இ, உ என்னும் இரண்டில் ஒன்றும்,

யகரத்தை முதலாகவுடைய மொழிக்கு இகரமொன்றும் மொழிக்கு முதலாகி, அம்மூன்று எழுத்துக்களுக்கு முன்னர் வரும்.

எ-டு :- ரகரம்—அரங்கம், இராமன், உரோமம்.
லகரம்— இலாபம், உலோபம்.
யகரம்— இயமன் (148)

ஆரியமொழியுள் இரண்டெழுத்து இணைந்து ஒரெழுத்தைப்போல நடக்கும்பொழுது,

பின்னின்ற யகர, ரகர, லகரங்கட்கு முன்னே இகரமும்,

பின்னின்ற மகர, வகரங்கட்கு முன்னே உகரமும்,

பின்னின்ற நகரத்திற்கு முன்னே அகரமும் வரும்.

எ-டு :-

| | | |
|---|---|---|
| காவ்யம் — காவியம். | யரலக்கு இகரம். | |
| வக்ரம் — வக்கிரம். | | |
| சுக்லம் — சுக்கிலம். | | |
| பத்மம் — பதுமம். | மவ்வக்கு உகரம். | |
| பக்வம் — பக்குவம். | | |
| ரத்னம் — அரத்னம். | — நகரத்திற்கு அகரம். | |
| அர்த்தம் — அருத்தம். | — ரவ்வழி உகரம். | |

(149)

## தமிழின் சிறப்பெழுத்துக்கள் :-

முதலும், சார்புமாகிய தமிழெழுத்து நாற்பதில் (30+10=40) ற, ன, ழ, எ, ஒ என்னும் ஐந்து முதலெழுத்துக்களும், உயிர்மெய்யும், உயிரளபெடையும், அல்லாத எட்டுச் சார்பெழுத்துக்களும் தமிழிற்கேயுரிய சிறப்பெழுத்துக்களாகும். (159)

## உயிரீற்றுப்புணரியல் பெயர்க்காரணம் :-

இவ்வியலுள் கூறப்படும் இலக்கணம்:-

1. புணர்ச்சி இன்னது என்பது.
2. உயிர், மெய் ஆகியவற்றின் பொதுப்புணர்ச்சி.
3. உயிரீற்றுப்பதம் புணரும் சிறப்புப்புணர்ச்சி என்பன. இவற்றுள் முன்னது-7 நூற்பாக்களாலும், அடுத்தது 4 நூற்பாக்களாலும், பின்னது 42 நூற்பாக்களாலும் விளக்கப்படுகின்றன.

வேம்பு முதலிய மரங்கள் இருந்தாலும் கமுக (பாக்கு) மரம் மிகுதியாயிருப்பதால்—'கமுகந்தோட்டம்' என (மிகுதி பற்றி) வழங்குவதைப்போல, ஏனையவிலக்கணம் இவ்வியலுள் கூறப்பட்டிருந்தாலும் உயிரீற்றின் சிறப்பிலக்கணமே மிகுதியாகக் கூறப்பட்டிருப்பதால் அம்மிகுதிப்பற்றி இவ்+யல் 'உயிரீற்றுப்புணரியல்' எனப்பட்டது.

## புணர்ச்சியிலக்கணத்தின் பொதுப்பண்புகள்.

1. நிலைமொழியும் வருமொழியும் ஒன்றேடொன்று பொருந்துவது.

2. 'பொன்மணி' என்ருற்போன்று இயல்பாயும், 'பொற்குடம்' என்ருற்போன்று விகாரமாயும் வருவது.

3. வேற்றுமைப்பொருளிலாவது, அல்வழிப்பொருளிலாவது வருவது.

4. பகாப்பதம், பகுபதமாகிய இரண்டு பதங்களும் தம்மொடு தாமும் பிறிதொடு பிறிதுமாய் வருவது.

5. நிலைமொழியீற்றிலும், வருமொழிமுதலிலும் வரும் மெய்யும், உயிரும் தன்னெடுதானும் பிறிதொடு பிறிதுமாய் வருவது.

6. விகாரப்புணர்ச்சி பெறுங்காலத்து ஒருபுணர்ச்சியில் ஒருவிகாரம் வருதலேயன்றி, இரண்டும், மூன்றும் வரப்பெறும். இவையே புணர்ச்சியிலக்கணத்தின் பொதுப்பண்புகளாகும். (151)

## 'மெய்யுயிர்' என்பதை, 'உயிர்மெய்' என்றும், 'அல்வழிவேற்றுமை' என்பதை, 'வேற்றுமையல்வழி' என்றும் மாற்றிக்கூறுவதால் வருங் குற்றம் :-

(அ) 'உயிர்மெய் முதலீரும்...' என்ருல், மெய் என்றும் உயிர் என்றும் இருவகையாகப்பிரிக்கப்படாமல் உயிர் மெய் என்னும் ஒரெழுத்தாகப் பொருள்படும்.

(ஆ) 'வேற்றுமையல்வழி' என்ருல் அல்வழி என்றும் வேற்றுமை என்றும் இருவகையாகப் பிரிக்கப்படாது, 'வேற்றுமையல்லாதவழி' என்னும் ஒருவகையாகப் பொருள் படும். எனவே இவ்விருதொடர்களையும் மாற்றிக் கூறுவதால் இவ்வாறு பொருள்பட்டு 'மயங்கவைத்தல்' என்னும் குற்றம் வரும். (151)

## வேற்றுமைப்புணர்ச்சி, அல்வழிப்புணர்ச்சி — விளக்கம்.

### வேற்றுமைப்புணர்ச்சி.

ஐ, ஆல், கு, இன், அது, கண் என்கின்ற ஆறு உருபுகளும் இடையில் மறைந்தாயினும், வெளிப்பட்டாயினும் வரப் பதங்கள் பொருந்துந்தொடர்ச்சியே 'வேற்றுமைப் புணர்ச்சி' எனப்படும். இவற்றுள், ஐ முதலிய ஆறு வேற்றுமையுருபுகள் இடையில் மறைந்துநிற்க, நிலைமொழி வருமொழியோடு புணர்வது 'வேற்றுமைத்தொகை' என்றும் அவ்வுருபுகள் வெளிப்பட்டுநிற்கப் புணர்வது வேற்றுமைத் தொகாநிலை (விரி) என்றும் கூறப்படும்.

| | வேற்றுமைத்தொகை. | வேற்றுமைவிரி |
|---|---|---|
| எ-டு:- | நீர்குடித்தான். | நீரைக்குடித்தான். |

### அல்வழிப்புணர்ச்சி.

வினை, பண்பு, உவமை, உம்மை, அன்மொழி என்னும் ஐந்துதொகைநிலையும், எழுவாய், விளி, பெயரெச்சம், வினையெச்சம், தெரிநிலைவினைமுற்று, குறிப்புவினைமுற்று, இடை, உரி, அடுக்கு என்னும் ஒன்பதுதொகாநிலையும் ஆகிய பதங்கள் பொருந்துந்தொடர்ச்சி பதினான்கும் 'அல்வழிப் புணர்ச்சி' எனப்படும். (152)

### அல்வழிப்புணர்ச்சிக்குரிய எடுத்துக்காட்டுகள்:-

### (அ) தொகைநிலை–5.

1. வினைத்தொகை — கொல்யானை.
2. பண்புத்தொகை — கருங்குதிரை.
3. உவமைத்தொகை — மதிமுகம்.
4. உம்மைத்தொகை — கபிலபரணர்.
5. அன்மொழித்தொகை — கருங்குழல் (வந்தாள்.)

(ஆ) தொகாநிலை—9.

1. எழுவாய்த்தொடர் — பொன்னன் வந்தான்.
2. விளித்தொடர் — பொன்னு வா.
3. பெயரெச்சத்தொடர் — வந்தமன்னன்.
4. வினையெச்சத்தொடர் — வந்து போனான்.
5. தெரிநிலைவினைமுற்றுத் தொடர் — வந்தான் பொன்னன்.
6. குறிப்புவினைமுற்றுத் தொடர் — குழையன் கொற்றன்.
7. இடைச்சொல்தொடர் — மற்றொன்று.
8. உரிச்சொல்தொடர் — நனிபேதை.
9. அடுக்குத்தொடர் — பாம்பு பாம்பு. (152)

## தழுவுதொடர், தழாத்தொடர்—விளக்கம்.

### தழுவுதொடர்.

நிலைமொழியானது வருமொழியோடு பொருட் பொருத்தமுறத் தழுவியதொடர்—'தழுவுதொடர்' எனப்படும். இத்தொடர் அல்வழி, வேற்றுமை ஆகிய இருவகைப்புணர்ச்சிகளிலும் உள்ளது.

அல்வழியில், 'பொன்னன்வந்தான்'என்னும்எழுவாய்த் தொடரிலும்,

வேற்றுமையில், 'பொன்னன்கை' என்னும் ஆறும் வேற்றுமைத்தொகையிலும் நிலைமொழி வருமொழியோடு பொருட்பொருத்தமுறத் தழுவி வந்துள்ளதை அறியலாம்.

### தழாத்தொடர்.

நிலைமொழி வருமொழியோடு பொருட்பொருத்தமுறத் தழுவாததொடர்—'தழாத்தொடர்' எனப்படும். இதுவும், அல்வழி, வேற்றுமை ஆகிய இருவகைப்புணர்ச்சிகளிலும் உள்ளது.

**அல்வழியில்**— 'சுரையாழ அம்மிமிதப்ப' என்புழிச் சுரைமிதப்ப, அம்மியாழ எனக் கூட்டப்படுதலால் சுரை என்பது ஆழ என்பதையும் அம்மி என்பது மிதப்ப என்பதை யும் பொருளால் தழுவாமல் தொடர்ந்து வந்துள்ளன. ஆத லின் இவை தழாத்தொடராகிய அல்வழிப் புணர்ச்சிகளாம்.

**வேற்றுமையில்**— 'நீர்க்குடம்' என்புழி நீரையுடைய குடம் என விரிதலால் நீர் என்பது உடைய என்பதைத் தழுவிக் குடம் என்பதைப் பொருளால் தழுவாமல் தொடர்ந் ததனுல் இது தழாத்தொடராகிய வேற்றுமைப்புணர்ச்சி. (இவ்வாறு தொக்கு வருவது 'உருபும் பயனுமுடன் றொக்க தொகை' எனப்படும்.) (152)

**'எட்டேவேற்றுமை' எனச் சொல்லதிகாரத்திற் கூறு பவர், எழுத்ததிகாரத்தில் 'வேற்றுமை ஐம்முதலாறு' என்றதற்குக் காரணம்:-**

'வேற்றுமை எட்டு' என்பவற்றுள் எழுத்ததிகாரத்தில் எழுவாயும், விளியும் ஆகிய இரண்டையும் ஒழித்து 'வேற் றுமை ஐம்முதலாறு' என்ருர். எழுவாயும், விளியுமுட்படக் கூறப்படும் எட்டும் பெயர்ப்பொருளை வேறுபடுத்துந்தன்மை யுடையன ஆதலின் சொல்லதிகாரத்தில் 'எட்டே வேற் றுமை' என்ருர். ஆனல் எழுவாய்க்குப் பெயரும், விளிக்குப் பெயரதுவிகாரமுமே உருபன்றித் தமக்கென வேறு உருபு இல்லை. ஆதலின் அவ்விரண்டினையும் எழுவாய்த்தொடர், விளித்தொடர் என அல்வழியிற்சேர்த்துத் தமக்கென வேறு உருபுடையன (ஐ முதலிய) இடைநின்ற ஆறு வேற் றுமையுமே யாதலின், அவற்றின் உருபுகள் ஆறும் மறைந் தும் விரிந்தும் இடைநிற்க, அவ்வாறனேடும் பதங்கள் பொருந்தும்புணர்ச்சியை வேற்றுமைப்புணர்ச்சி என்ருர். (152)

**புணர்ச்சிவிகாரத்திற்கும், செய்யுள்விகாரத்திற்கும் உள்ள வேறுபாடுகள் :-**

| புணர்ச்சிவிகாரம். | செய்யுள்விகாரம். |
|---|---|
| 1. நிலைமொழி, வருமொழிப் புணர்ச்சியில்மட்டும் வரும். தனிமொழியில் வாராது. | 1. தனிமொழி, தொடர் மொழி இரண்டற்கும் பொது. |
| 2. உலகவழக்கு, செய்யுள் வழக்கு என்ற இரண்டற்கும் பொது. | 2. செய்யுள் வழக்கிற்கே உரியது. |
| 3. அல்வழி, வேற்றுமைப் பொருள்நோக்கத்தால் வருவது. | 3. அடி, தொடை முதலிய யாப்பு அமைதி நோக்கி வருவது. |
| 4. தோன்றல், திரிதல், கெடுதல் என மூவகையாய் வருவது. | 4. வலித்தல், மெலித்தல், நீட்டல், குறுக்கல்,[1] விரித்தல், தொகுத்தல்[2] என ஆறுவகையாகவும், முதல், இடை, கடைக்குறை[3] எனமூன்று வகையாகவும் வருவது. (154, 155) |

**"ஒருபுணர்க் கிரண்டு மூன்றுமுறப் பெறும்"— விளக்கம்:-**

இஃது அல்வழி, வேற்றுமைப்புணர்ச்சிவிகாரத்தில் வரும் ஓர் ஐயத்தைப் போக்குகின்றது.

---

[1] மாத்திரை (ஓசை) குறுகுதலாகும்.

[2] பகுபதத்தினுள் எழுத்து மறைதலாகும்.

[3] பகாப்பதத்தினுள் எழுத்துமறைதலும் செய்யுட்கண் மரூஉவாய் வருவதுமாம்.

**ஐயமாவது,** ஒருபுணர்ச்சிக்கண் தோன்றல், திரிதல், கெடுதல் என்ற விகாரம் எத்தனை வரும் என்பது ஐயம்.

**அதற்குவிடை.** "ஒருபுணர்ச்சிக்கண் அம்மூன்று விகாரங்களுள் ஒன்றேயன்றி இரண்டும், மூன்றும் வரப்பெறும்" என்பது.

யானை + கோடு = யானைக்கோடு—தோன்றல் மட்டும் வந்துள்ளது.

நிலம் + பனை = நிலப்பனை—கெடுதல், தோன்றல் இரண்டும் வந்துள்ளன.

பனை + காய் = பனங்காய் — தோன்றல் முதலிய மூன்றும் வந்துள்ளன. (157)

**வாழைபழம், கீரைகறி—இவற்றை நன்னூலில் எடுத்தாளக் காரணம் :-**

இத்தொடர்கள் 'எண்மூவெழுத்தீற்று..........' எனத் தொடங்கும் நூற்பாவின்கீழ் எடுத்தாளப்படுகின்றன. அந்நூற்பா, எல்லா எழுத்துக்கட்குமுரிய பொதுப்புணர்ச்சிபற்றி விதி கூறுகின்றது.

இங்கு, 'நொ, து' என்னும் ஓரெழுத்தொருமொழிகட்கு முன் வரும்மெல்லினம் மிகுதலுமுண்டு என்று விதி கூறப்படுகின்றது.

நொ + ஞெள்ளா = நொஞ்ஞெள்ளா,

து + ஞெள்ளா = துஞ்ஞெள்ளா என வரும்.

மெலி மிகலுமாம் என்ற எச்சவும்மையால் இவற்றின்முன் வரும் இடையினம் மிகுதலுமுண்டு என விதிகூறி, அதற்கு நொய்யவளை, துய்யவளை என மேற்கோள் காட்டுகின்றார் உரைகாரர்.

ஈண்டு, இடையினம் மிகுதலை ஆசிரியர் தொல்காப்பியரும், 'மெல்லெழுத்தியற்கை உறழினும்வரையார்' என உம்மையால் தழுவியே விதிகூறியுள்ளதாக விருத்தியுரைகாரர் கூறுகின்ருர். ஆனல் அந்நூற்பாவிற்கு உரைகூறிய பிறரெல்லாம் 'உறழினும்' என்ற உம்மைக்கு இடையினம் மிகுதலை விதியாகக் கூருது மெல்லெழுத்து (உறழ்தலோடன்றி) மிக்கு வருதலுமுண்டு என வேறுவிதி கூறுகின்றனர்.

அதனை மறுக்கவந்த சிவஞான முனிவர். நொ, து முன் மெல்லினமும், **இடையினமும்** மிகவில்லையாயின், புணர்ச்சியின்றி (வருமொழியோடுதொடர்பின்றி) விட்டிசை (வேறுபட்டொலித்தல்) போன்று அமையும். அங்ஙனம், 'நொயவனு' என விட்டிசைத்தால் அத்தொடர்கள் வாழைபழம், கீரைகறி என்ருற்போன்று அமையும் எனக் கூறுகின்ருர். எனவே 'வாழைபழம், கீரைகறி' என வல்லினம் மிகாது வருவது எவ்வாறு பொருந்தாதோ அவ்வாறே 'நொயவனு' என இடையினம் மிகாது வருவதும் பொருந்தாது என்பதை விளக்கவே இவைகள் இங்கு எடுத்தாளப் பட்டுள்ளன. (158)

## இயல்பீறு, விதியீறு, உறழ்ச்சி—இவைபற்றிய விளக்கம்.

**இயல்பீறு:-** விகாரப்படாமல் இயல்பாக நின்ற சொல்லுக்கு இறுதியாய் நிற்பது. எ–டு:- விள, பலா, மலை போன்றன.

**விதியீறு:-** மொழிக்கு இறுதியில் இயல்பாக நின்ற உயிராவது, மெய்யாவது ஒருவிதிகாரணமாக நீங்கி, மற்ருேர் உயிரீருகநிற்பது. விதியெனினும், ஆக்கப்பாடெனினும் ஒக்கும்.

எ–டு:- ஒன்று—ஒற்றை; மரம்—மர எனவரும். ஈண்டு ஒன்று என்பதிலுள்ள உகரவுயிரீறும், மரம் என்பதிலுள்ள மெய்யீறும் வேறுவிதிகாரணமாக ஒற்றை என ஐகாரவுயிரீருகவும், மர என அகரவுயிரீருகவும் விகாரப்பட்டு

நிற்கின்றன. இவ்வாறு விகாரப்பட்டு நிற்கும் ஈற்றையே 'விதியீறு' என்பர்.

**உறழ்ச்சி :-** உறழ்ச்சி, விகற்பம், பொருதல் என்பன ஒருபொருட்சொற்கள். "நியதியின்மை" என்பது இதற்குப் பொருள். அஃதாவது ஒருபுணர்ச்சிக்கே ஒருகால் ஒரு வகையாகவும், மற்றொருகால் வேறுவகையாகவும் வருவது. எனவே ஒருபுணர்ச்சியிலேயே இயல்பும் மிகுதலும், இயல்பும் திரிதலும், இயல்பும் கெடுதலும் என்றுற்போன்று இவ்விரண்டாய் வரப்பெறும்.

எ—டு :- இயல்பும் மிகுதலுமாகிய உறழ்ச்சி.

நட கொற்று — இயல்பு.

நடக்கொற்று — மிகுதல். (161)

இயல்பும் திரிதலுமாகிய உறழ்ச்சி.

மீன்கண் — இயல்பு.

மீற்கண் — திரிதல். (213)

இயல்பும் கெடுதலுமாகிய உறழ்ச்சி.

தேன்மொழி — இயல்பு

தேமொழி — கெடுதல். (214)

வேறுவகை உறழ்ச்சி.

பாழ்க்கிணறு — வலிமிகுதல்.

பாழ்ங்கிணறு — மெலிமிகுதல். (224)

**"பொதுப்பெயர் உயர்திணைப்பெயர்கள் ஈற்றுமெய் வலிவரின் இயல்பாம், ஆவியரமுன் வன்மைமிகா"— விளக்கம்.**

**பொதுப்பெயராவது:-** உயர்திணைக்கும் அஃறிணைக்கும் பொதுவாக வருவதாம். எ—டு:- சாத்தன்.

பொதுப்பெயர், உயர்திணைப்பெயர்களின் ஈற்றிலுள்ள மெய்கள் வல்லெழுத்துமுதல்மொழிகள் வரின் இருவழியிலும் திரியாது இயல்பாம்.

| எ-டு. | அல்வழி. | வேற்றுமை. |
|---|---|---|
| பொது— | சாத்தன்குறிது, குறியன். | சாத்தன்கை. |
| உயர்திணை— | ஊரன்குறியன். | ஊரன்கை. |

உயிரையும், யகர ரகர மெய்களையும் ஈருகவுடைய அவ்விருவகைப்பெயர்கட்குமுன் வரும்வல்லெழுத்துக்கள் இருவழியிலும் மிகாது இயல்பாம்.

| எ-டு. | | அல்வழி. | வேற்றுமை. |
|---|---|---|---|
| பொது. | உயிரீறு | — சாத்திபெரிது, சாத்திபெரியள். | சாத்திகை. |
| ,, | யகரவீறு | — தாய்பெரிது, தாய்பெரியள். | தாய்கை. |
| உயர்திணை. | உயிரீறு | — நம்பிசிறியன். | நம்பிகை. |
| | யகரவீறு | — சேய்பெரியன். | சேய்கை. |
| | ரகரவீறு | — அவர்பெரியர். | அவர்தலை. |

(159)

## 'சிலவிகாரமாம் உயர்திணை' என்பதற்கு விளக்கம்.

மெய்யீறும் உயிரீறுமாகிய சிலஉயர்திணைப்பெயர்கள் வன்கணம்முதலிய நாற்கணங்களோடும்புணருமிடத்து நிலைமொழி வருமொழிகள் விகாரப்பட்டு வருதலும்உண்டு. அவை விகாரப்படுமாறு;-

1. கபிலபரணர், வடுகநாகன் அரசவள்ளல்-என்னும் அல்வழியில், கபிலன் + பரணன், வடுகன் + நாகன், அரசன் + வள்ளல் எனநின்றன, நிலைமொழியீறுகெட்டு முடிந்தமையைக் காணலாம். ('கபிலபரணர்' என்புழி, வருமொழியீற்றுத் திரிபு 'உயர்திணையும்மைத்தொகை பலரீறே' என்னும் சொல்லதிகாரநூற்பாவால் முடிந்தது.)

2. குமரகோட்டம், குமரக்கோட்டம் என்னும் வேற்றுமையில், 'குமரன் + கோட்டம்' என நின்றது, குமரகோட்டம், குமரக்கோட்டம் என இயல்பும் மிகுதலுமாகிய உறழ்ச்சிபெற்று முடிந்துள்ளமையைக் காணலாம். இவ்வாறு இருவழியிலும் உயர்திணைப்பெயர்களுள் சில தமக்கு ஏற்றபடி விகாரமாய் வருதலை இத்தொடர் விதிக்கின்றது. (159)

**முன்னிலைவினைமுற்றும், ஏவல்வினைமுற்றும் வல்லினம் வருங்கால் புணருமாறு :-**

உயிரையும், ய, ர, ழ என்னும் மூன்றுமெய்யையும் இறுதியாகவுடைய முன்னிலைவினைமுன்னும், ஏவல்வினைமுன்னும் வல்லினம்வருங்கால் அவை (வல்லினம்) இயல்புடனே விகற்பமுமாம். (ஒன்றுக்கே இயல்பும் மிகுதலுமாகிய இரண்டும் வரும்).

**முன்னிலைவினை.**

இயல்பாதல்:- — உண்டி கொற்று — உயிரீறு.
— உண்டாய் கொற்று—யகரமெய்யீறு.
— உண்டனீர் கொற்று—ரகரமெய்யீறு.
(ழகரவீறு—முன்னிலைவினை ஏலாது.)

விகற்பமாதல்:- 'இதற்கு உதாரணம் வந்தவழிக் கண்டுகொள்க' என்பர் உரைகாரர்.

**ஏவல்வினை.**

இயல்பாதல்:- எறிகொற்று—உயிரீறு.
ஆய்கொற்று—யகரமெய்யீறு,
சேர்கொற்று—ரகரமெய்யீறு.
தாழ்கொற்று—ழகரமெய்யீறு.

விகற்பமாதல்:- இயல்பு. மிகுதல்.
நடகொற்று, நடக்கொற்று —உயிரீறு.
எய்கொற்று, எய்க்கொற்று —யகரமெய்யீறு.
ஈர்கொற்று, ஈர்க்கொற்று —ரகரமெய்யீறு.
தாழ்கொற்று, தாழ்க்கொற்று —ழகரமெய்யீறு.
(161)

## முன்னிலைவினைக்கும், ஏவல்வினைக்கும் வேறுபாடு:-

| முன்னிலைவினை. | ஏவல்வினை. |
| --- | --- |
| 1. நடந்தாய், நடக்கின்றாய், நடப்பாய் என்றாற்போல மூன்று காலத்திலும் தனித் தனி வரும். | நடவாய், நடமின் என் றாற்போல எதிர்காலத்தில் மட்டும் வரும். |
| 2. தன்மை, படர்க்கை வினை கட்கு இனம். | இனமில்லாதது. |
| 3. முன்னிற்கும் பொருளினது தொழிலை யுணர்த்தி, ஏவற் பொருள்படாது வரும். | முன்னிற்கும்பொருளைக் கட்டளையிடும்முறையில் வரும். |

ஆகவே, 'ஏவலெல்லாம் முன்னிலைவினையாம். ஆனால், முன்னிலைவினையெல்லாம் ஏவலாகா' என்பது அறியப்படும். (161)

## உடம்படுமெய்—பெயர்க்காரணமும், வருமாறும்.

### பெயர்க்காரணம்:-

உடன்படல் என்பது உடம்படல் என மருவி வந்தது. 'உடம்பாடில்லாதவர் வாழ்க்கை' எனக் குறளில் வருதலைக் காணலாம். உயிர்முன் உயிர்வரின், உயிரோடு உயிர் கூடு தற்கு விதி இல்லை. ஆதலின், புணர்ச்சியின்றிப் பிரிந்து ஒலித்து நிற்கும். அதனால் உடம்படாத அவ்விரண்டும் (உயிர்கள்) உடம்படுதற்பொருட்டு இடையே வரும் மெய்யே 'உடம்படுமெய்' எனப்படும்.

இனி, உயிரோடு உயிர்க்கு மயக்கம் (கூட்டம்) இன்மை யின் வருமுயிர்க்கு உடம்பாக அடுக்கும் மெய்யாக இருப்ப தால், 'உடம்படுமெய்' எனப்பட்டது என்றும் கூறலாம்.

### வருமாறு:-

நிலைமொழியீற்றில் இகர, ஈகார, ஐகாரங்களுள் ஒன்று நிற்க, வருமொழி முதலில் பன்னீருயிரும் வர அவற்றி

னிடையே யகரமும், நிலைமொழியீற்றில் அ, ஆ, உ, ஊ, ஒ, ஓ, ஔ என்னும்இவ்வேழுயிர்களுள் ஒன்றுநிற்க, வருமொழிமுதலில் பன்னீருயிரும்வர அவற்றினிடையே வகரமும் உடம்படுமெய்யாகவரும். நிலைமொழியீற்று ஏகாரத்தின்முன் உயிர்முதல்மொழிவந்தால் அதனிடையே யகரமும் வகரமும் உடம்படுமெய்யாகவரும்.

இவ்விதிகள் அல்வழி, வேற்றுமை ஆகிய இருவழியிலும் வரும். எ-டு.

அல்வழியில்—மணி + அழகிது = மணி**ய**ழகிது.
விள + அழகிது = விள**வ**ழகிது.
ஏயே + இவள் = ஏயே**யி**வள்.
சே + அழகிது = சே**வ**ழகிது.

வேற்றுமையிலும் இவ்வாறே வரும். (103)

**'விண்வத்துக்கொட்கும்' என்பது மெய்யீற்றுடம்படுமெய்பெற்றதன்று என்பதற்கு உரைகாரர் கூறுங்காரணம்.**

விண் + அத்து + கொட்கும் என்பது விண்வத்துக்கொட்கும்என வந்துள்ளது. உயிர்முன் உயிர்வரின் அவ்விரண்டும்கூடுதற்கு விதியின்மையின் புணர்ச்சியின்றி விட்டிசைத்துநிற்கும்ஆதலின், உடம்படாத அவ்விரண்டும் உடம்படுதற்பொருட்டு இடையேவரும்மெய்யை உடம்படுமெய் என்பர். ஆதலின், வரும்உயிரேறி ஒற்றுமைப்பட்டுப் புணர்தற்குரிய மெய்யீற்றின்வழித்தோன்றும்மெய்யை (விண் + **வ்** + அத்து) உடம்படுமெய் என்பது பொருந்தாது. வகரமெய் தோன்றுதற்கு விதி 'எகரவினு முச்சுட்டின் முன்னர்......நெறியே' என்னும் நூற்பாவில், 'நெறியே' என்ற மிகையாற்கொள்ளப்படும். (162)

**'உயிர்வரின் உக்குறள்......' என்னும் நூற்பாவிற் கெடும் என்னாது 'ஓடும்' என்றதால் அறிவன :—**

'குற்றியலுகரவீற்றுச் சொற்களின்முன் உயிர்முதல் மொழிவந்தால், தனக்கு **ஆ**தாரமான மெய்நிற்க, குற்றிய

லுகரம் கெடும்' என்பதுநூற்பாவிதி. நாகு + அரிது என்புழி 'நாக்+அரிது' எனக்குற்றியலுகரங்கெட்டு, பிறகு 'நாகரிது' எனப்புணரும்.

இங்கு, குற்றியலுகரம் 'கெடும்' எனக்கூருது, 'ஓடும்' என்றதனுல், சிறுபான்மை குற்றியலுகரம் கெடாதுநிற்க அவ்விடத்து 'இஈஐவழி' என்னும் பொதுவிதிப்படி வகர வுடம்படுமெய்பெறுதலுமுண்டு.

'அழைப்பது + ஏ' என்புழிக் குற்றியலுகரங்கெட்டு 'அழைப்பதே' என முடியாமல், வகரவுடம்படுமெய்பெற்று 'அழைப்பதுவே' என முடிந்தமையை அறியலாம். (164)

## 'முற்றுமற்ருெரோவழி' என்புழி, 'அற்று' என்பதனுற் பெறப்படும் விதி :—

'உயிர்வரின் உக்குறள்.........' என்ற நூற்பா, குற்றிய லுகர, முற்றியலுகரங்கட்குப் புணர்ச்சிவிதி கூறுகின்றது. ''குற்றியலுகரம் உயிர்முதல்மொழிவரின் தான் (உகரம்) ஏறிய மெய்நிற்கக்கெடும். யகரமுதல் மொழிவரின் அவ்வுக ரம் இகரமாகத் திரியும். முற்றியலுகரமும் அவ்விரண்டு விதிகளையும் சிலவிடங்களில் பெறும்.

எடு:- கதவு + அழகிது = கதவழகிது,
கதவு + யாது = கதவியாது என வரும்.

எனவே, முற்றுகரம் கெட்டும் இகரமாகத் திரிந்தும் வரும் என்பதே 'அற்று' என்பதனுல் பெறப்படும் விதி யாகும். (164)

## 'இயல்பினும் விதியினும் நின்ற வுயிர்முன் கசதப மிகும் விதவாதன மன்னே'—விளக்கம்.

உயிரீற்றின்முன் வல்லினம் புணரும்முறையை இது விதிக்கின்றது.

'இயல்பினுலாவது, விதியினுலாவது மொழிக்கு ஈருக நின்ற உயிர்களின்முன் வருங் கசதபக்கள் பெரும்பாலும்

மிகும். அவ்வாறு மிகுவன, சிறப்புவிதியில் சொல்லப்பெருதவைகளாயிருக்கும்'' என்பது இங்குக் கூறப்படுங்கருத்து.

இயல்பீறு, விதியீறுபற்றி 59ஆம் பக்...... காண்க.

எ-டு. அல்வழி. வேற்றுமை.

ஆடச்சென்ருன்—வாழைப்பழம்—இயல்பு உயிரீறு மிக்கது.

நேற்றைப்பொழுது — மரக்கிளை — விதி உயிரீறு மிக்கது.

**விதவாதன** = விதந்து சொல்லப்படாதன.

விதத்தலாவது, இன்னது இன்னவிடத்து இன்னவாருகும் என எடுத்து விரித்தல்.

ஆகவே, '**சிறப்புவிதி**யிற் சொல்லாதன பெரும்பாலும் மிகும்' எனக்கூறவே, அவை சிறுபான்மை மிகாஎன்றும், சிறப்புவிதியில் மிகா எனச்சொன்னவை சிறுபான்மை மிகும் என்றும் கூறிஞராயிற்று. அவையாவன:-

1. ஏரிகரை—வேற்றுமை, நாட்டுபுகழ்—அல்வழி } சிறப்புவிதியிற்சொல்லாதவை இருவழியிலும் மிகாவாயின.

2. நொக்கொற்ரு, துக்கொற்ரு } 'ஏவல்முன் வல்லினம் இயல்பொடு விகற்பே'எனச் சொன்ன சிறப்புவிதி பெருமல் மிக்கேவந்தன. (165)

## ''நொ, து முன் மூவினமும்மிகும்'' என்பதுபற்றி விளக்கம்.

'இயல்பினும்......' என்னும் நூற்பாவில் விதவாதன பெரும்பாலும் மிகும்' என்றதனல் 'விதந்தன சிறுபான்மை மிகும்' என்பதுபெறப்படுகின்றதன்ரே? அதன்படிச் சிறப்பாக விதந்துகூறப்பட்ட நொ, து முன் வல்லினம்வர, நொக்கொற்ரு, துக்கொற்ரு என மிகுந்தன.

'எண்மூவெழுத்தீற்று......' என்னும் நூற்பாவிற்கூறப் பட்டுள்ள 'நொ.து முன் மெலி மிகலுமாம்' என்னும் விதிப் படி, நொ, து, முன் மெல்லினம் வர நொஞ்ஞெள்ளா, துஞ் ஞெள்ளா என மிகுந்தன. இங்கு, 'மெலி மிகலுமாம்' என்ற எதிரதுதழுவிய எச்சவும்மையால் நொ, து முன் இடை யினம் மிகலுமாம் எனக்கூறினாராயிற்று, அவ்விதிப்படி நொவ்வளவா, துவ்வளவா என இடையினம் மிகுந்தன.

இவ்வாறு நொ, து முன் மூவினமும் மிகும் எனக் கூறி னாராயிற்று. (158,165)

## இயல்பாகும் அகரவீற்றுச் சொற்களும், மேற் கோள்களும்.

1. 'செய்யிய' என்னும் வாய் பாட்டு வினையெச்சம் — **உண்ணிய** கொண்டான்.

2. பல்வகைப் பெயரெச்சம்.

(அ) இயல்பாகிய வினையடி யாகப் பிறக்கும் பெய ரெச்சம் — **உண்ட** குதிரை.

(ஆ) பெயரடியாகப் பிறக் கும் பெயரெச்சம் — **வெளுத்த** குதிரை.

(இ) இடையடியாகப் பிறக் கும் பெயரெச்சம் — **திண்ணென்ற** குதிரை.

(ஈ) உரியடியாகப் பிறக் கும் பெயரெச்சம் — **சான்ற** குதிரை.

இவை நான்கும் தெரிநிலைப்பெயரெச்சங்களாம்.

(அ) பெயரடியாகப் பிறக் கும் பெயரெச்சம் — **சிறிய** குதிரை.

(ஆ) இடையடியாகப் பிறக் கும் பெயரெச்சம் — **பொன்னன்ன** குதிரை.

(இ) உரியடியாகப் பிறக்
கும் பெயரெச்சம் — **கடிய** குதிரை.

இவை மூன்றும் குறிப்புப்பெயரெச்சங்களாம்.

(குறிப்புப்பெயரெச்சத்திற்கு வினையடி இல்லை)

3. பல்வகைமுற்று.

முற்றிற்கும் பொருள்வேறுபாடன்றிச் சொல்வேறுபாடில்லை. ஆதலின், மேற்காட்டியனவே இதற்குங் கொள்ளப்படும்.

வியங்கோள் வினைமுற்று—வாழ்கஞெற்று.

4. ஆறும் வேற்றுமை -அகரவுருபு-தனகைகள்.

5. அஃறிணைப்பன்மைப்பெயர்
அல்வழியில் — பலகுதிரை.
வேற்றுமையில் — பலகொடுத்தான்.

6. 'அம்ம' எனும் உரையசை
இடைச்சொல் — அம்மகொற்று.

(157)

## பல, சில—என்பவற்றிற்குப் புணர்ச்சிவிதி.

பல, சில என்னும் இவ்விருசொல்லும், தம்முன்தாம் வருமாயின், இயல்பும், மிகுதலும், அகரங்கெட லகரம் றகரமாதலும் உளவாம்.

எ-டு. 1. பலபல, சிலசில — இயல்பாயின.
2. பலப்பல, சிலச்சில — மிக்கன.
3. பற்பல, சிற்சில — அகரங்கெட லகரம் றகரமாயின.

இவற்றின்முன் பிறமொழிகளுள் யாதானும் ஒன்றுவரின், அகரம் விகற்பமாதலுமுண்டு.

விகற்பமாவது - அகரம் ஒருவழி நிற்றலும் ஒருவழி நில்லாமையும் ஆகிய இருநிலையுமாய் வருதலாம்.

எ-டு. பலகலை, பல்கலை.
பலநாள், பன்னாள்.
பலவளை, பல்வளை.
பலவணி, பல்லணி.
} பிறசொற்கள் வர, அகரம் விகற்பமாயின.

சில என்பதற்கும்இவ்வாறே கொள்ளப்படும். இனி, பிற என்ற மிகையானே,

பல்பல, சில்சில எனச் சிறுபான்மை அகரம் கெட லகரம் றகரமாகாது வருதலுங் கொள்ளப்படும். இவையாவும் அல்வழிப்புணர்ச்சிக்கேயுரியனவாம். (170)

## 'அல்வழியாமாமியா முற்றுமுன்மிகா' – விளக்கம்.

இஃது, ஆகாரவீற்றுள் சிலவற்றிற்குச் சிறப்பாகப் புணர்ச்சிவிதி கூறுகின்றது.

அல்வழிக்கண், ஆ, மா என்னும்இருபெயரும் மியா என்னும்முன்னிலையசையாகிய இடைச்சொல்லும், ஏகார வீற்று எதிர்மறைமுற்றுவினையுமாகிய இவற்றிற்குமுன்வரும் வல்லினம் மிகா. (இயல்பாம்).

எ–டு:– (1) ஆகுறிது, மாகுறிது–ஆ, மா முன்வலி இயல்பாயிற்று.

(2) கேண்மியாகொற்ரு–மியாமுன் வலி இயல்பாயிற்று.

(3) உண்ணுகுதிரைகள் — முற்றுமுன் வலி இயல்பாயிற்று.

## இனி, இரட்டுறமொழிதலாற்கொள்ளும் பொருள்.

'ஆமா' என்பதற்குக் காட்டுப்பசுஎன்பது பொருள்.ஆதலின், அதன் (ஆமா) முன்வரும் வல்லினமும் இயல்பாம் என்பது. எ–டு. 'ஆமாகுறிது' என்பது.

## இனி, அருத்தாபத்தியாற்கொள்ளும் பொருள்.

'முற்றுமுன் மிகா' என்றமையான், 'உண்ணுகுதிரைகள்' என அவ்வினையாலணையும்பெயர்முன்னும், 'உண்ணுகிடந்தன' என அவ்வினைமுற்று வினையெச்சமாயவற்றின் முன்னும் இயல்பாம் என்பது. 'உண்ணு' என்பது வினையாலணையும்பெயராயின், உண்ணுதனவாகிய உயிர்ப்பொருள்கள்

என்றும் வினைமுற்று வினையெச்சமாயின், 'உண்ணுதன வாய்' என்றும் பொருள்படும். [உண்ணு என்பது ஈறு கெட்ட எதிர்மறைப்பெயரெச்சமாயின் 'இயல்பினும்......' என்னும் பொதுநூற்பாவிதிப்படி 'உண்ணுக்குதிரைகள்' என்றும், அது, செய்யா என்னும் வாய்பாட்டு(உடன்பாட்டு) வினையெச்சமாயின் அப்பொதுவிதிப்படி உண்ணுக்கிடந் தன என்றும் மிக்கு வரும்.] (171)

## 'அல்வழி இஐம் முன்னராயின் இயல்பும்மிகலும் விகற்பமுமாகும்'—விளக்கம்.

அல்வழியில் இகர, ஐகாரஈற்று அஃறிணைப்பெயர்முன் வல்லினம் வருமாயின் இயல்பாதலும், மிகுதலும், விகற்பித் தலும் (மிகுதலும் மிகாமையும்) ஆகும்.

| | | | |
|---|---|---|---|
| எ-டு. | (1) | புலிசிறிது,<br>யானைபெரிது. | இ ஐமுன் அல்வழியில் வலி இயல்பாயின. |
| | (2) | மார்கழித்திங்கள்,<br>சாரைப்பாம்பு. | வலிமிக்கன. |
| | (3) | கிளிகுறிது, கிளிக்குறிது.<br>தினைகுறிது, தினைக்குறிது. | விகற்பித்தன. |

இந்நூற்பா, அஃறிணைப்பெயர்க்கேயுரியதுஎன்பது எத ஞல் பெற்றுமெனின், இவ்வீற்று உயர்திணைப் பொதுப்பெயர் கட்கு 'ஆவியரமுன்......மிகா', 'கசதபமிகும்' என்றும், வினை கட்கு 'இயல்பொடு விகற்பே', 'கசதபமிகும்' என்றும் வரும் பொதுநூற்பாக்களால் இம்மூன்றுவிதியும் அமைந்துகிடந்த மையின் இஃது, அஃறிணைப்பெயர்க்கேயுரியது என்பது பெற்றும். (176)

## நீ என்பதன்முன் வல்லினம் இயல்பாதலைப் 'பொதுப் பெயர்' என்ற நூற்பாவிதியில் அடக்காது வேறு கூறியதற்குக் காரணம்.

அல்வழிக்கண்ணும், வேற்றுமைக்கண்ணும் விகாரப் படாமல் உயிர், மெய் (ய், ர்) களின் ஓரீற்றதாய் நின்று

புணரும் பொதுப்பெயருக்கே 'வன்மைமிகா' எனப் 'பொதுப் பெயர்...............' எனத்தொடங்கும் பொதுநூற்பா இரு வழிக்கும் விதிகூறுகின்றது. ஆனல், அல்வழிக்கண் 'நீ' என உயிரீருயும், வேற்றுமைக்கண் 'நின்' என நெடில் குறுகி னகரவொற்றீருயும் விகாரப்பட்டுநிற்பது-'நீ'என்னும்பொதுப் பெயர். ஆதலின். இப்பொதுப்பெயர்க்குரியவிதி அப்பொது நூற்பாவில் அடங்காது. அதனுல் இதற்குப் 'பவ்வி நீமீ முன் னர் இயல்பாம்' எனவேறுவிதி கூறினுர்.

எனவே, இருவழியிலும் விகாரப்படாமல் இயல்பு உயி ரீருய் நிற்கும்பொதுப்பெயர்க்கே பொதுநூற்பாவில் விதி கூறப்பட்டுள்ளது என்பதும், 'நீ' என்பது அங்ஙனமின்றி 'நின்' என வேற்றுமைக்கண் விகாரப்படுமொழியாயிருப்ப தால். அதற்கு வேறுவிதி கூறப்பட்டுள்ளது என்பதும் பெறப் படும். (178)

## நெடிற்ருெடர்க்குற்றுகரம் வேற்றுமைக்கண்ணும் அல்வழிக்கண்ணும் புணருமாறு.

நெடிற்ருெடர்க்குற்றுகரம் அல்வழியில் இயல்பாம்.

விதி :- 'வன்ருெடரல்லன முன்மிகா அல்வழி.'

எ-டு :— நாகுகடிது, ஏருகால்.

இனி, வேற்றுமையிற் புணருங்கால் நெடிற்ருெடர்க் குற்றுகரம் இருவகையாகப் பிரிக்கப்படும். அவற்றுள்,

1. ஒற்று இடையே மிகா நெடிற்ருெடர்க் குற்றுகரம் என்பது ஒன்று.

க் ச் த் ப் என்னும் மெய்களின் மேல் ஏறிய உகரத்தை (கு, சு, து, பு) இறுதியிலுடைய நெடிற்ருெடர்க்குற்றுகரமே 'ஒற்று இடையே மிகா......குற்றுகரம்' எனப்படும்.

இந்நான்கீறுகளையுமுடைய நெடிற்ருெடர்க்குற்றுகரத் தின்முன்வரும் வல்லினம் வேற்றுமைக்கண் இயல்பாம்.

விதி:—"ஒற்றிடையின் மிகா நெடில் உயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை."

எ–டு:— 'நாகுகால்' போன்றன.

2. ஒற்று இடையே மிகும் நெடிற்ளுடர்க் குற்றுகரம் என்பது மற்ளுன்று.

டு, று என்னும் இரண்டனையும் ஈற்றிலேயுடைய குற்றுகரமே ஒற்று இடையேமிகும் நெடிற்ளுடர்க்குற்றுகரமாம்.

'நெடிலோ......குற்றுகரங்களுள் 'டற வொற்றிரட்டும்...' என்னும் விதிப்படி ஆடு—ஆட்டு எனவும், பாறு—பாற்று எனவும் டகர, றகரவொற்றுக்கள் இரட்டும். இதற்கு முன்னுள்ள நூற்பாவில் 'அவைமிகா' எனக்கூறவே, 'இவை மிகும்' என்பது பெறப்பட்டது.

அதனல் — 'ஆட்டுக்கால்', 'பாற்றுக்கால்' என வலி மிக்கன.

இவை, பெரும்பாலும் இரட்டும் எனக் கூறவே, சிறுபான்மை நாடுகிழவோன், காடகம் என வேற்றுமைக்கண் இரட்டாமலும், காட்டரண் என அல்வழிக்கண் இரட்டியும் வரும். (181—183)

## "திசையொடு திசையும்......பிற"–இதற்கு விளக்கம்.

திசைச்சொல்லோடு திசைச்சொல்லும் பிறசொற்களும் புணருமிடத்து, நிலைமொழியீற்றில் நின்ற (கு) உயிர்மெய்யும் அதன் அயலில் நின்ற ககரவொற்றும் கெடுதலும் ஆகும்; அன்றி, அதன் அயலில்நின்ற றகரவொற்று னகரவொற்ளு யும் லகரவொற்ளுயும் திரிதலும் ஆகும்.

| | | |
|---|---|---|
| எ-டு:- | வடகிழக்கு<br>வடமேற்கு<br>வடவேங்கடம் | உயிர்மெய்யும் ககரமெய் யுங்கெட்டுவந்தன. |

| | |
|---|---|
| தென்மேற்கு<br>தென்குமரி | உயிர்மெய்கெட றகரம்<br>னகரமாயிற்று. |
| மேல்காற்று<br>மேலூர் | உயிர்மெய்கெட றகரம்<br>லகரமாயிற்று. |

'பிற' என்றதனுல் கொள்ளப்படுவது, கிழக்கு என்புழி ழகரத்திணையூர்ந்த அகரங்கெட்டு முதல்நீண்டுவரும் என்பது. எ-டு. 'கீழ்காற்று', 'கீழ்நாடு'.

**ஏற்புழிக்கோடலாற் கொள்ளத்தக்கது.**

"நிலைமொழியீற்று உயிர்மெய் கவ்வொற்றுநீங்குதல் கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்பவற்றிற்கும், றகரம் னகரமாகத்திரிதல் தெற்கு என்பதற்கும், றலரம் லகரமாகத் திரிதல் 'மேற்கு' என்பதற்குங் கொள்க'' என்பது. (186)

**'ஒன்பானொடு பத்துநூறு மொன்றின் முன்னதின் ஏனைய முரணி'—சிவஞானமுனிவரது உரையும், பிறருரையும், மறுப்பும்.**

**சிவஞானமுனிவரதுரை.**

ஒன்பஃது என்னும் எண்ணுப்பெயரொடு பத்து என்பதும், நூறு என்பதும் வந்து புணருமாயின், அந்நிலைமொழி வருமொழிகளுள், முன்னர்த்தாகிய நிலைமொழியினின்றும், ஏனைவருமொழியாகிய பத்தையும் நூற்றையும் முறையானே திரித்துப்புணர்க்க'' என்பது. அஃதாவது,

ஒன்பஃது+பத்து என்பதை, ஒன்பஃது+நூறு எனவும்,

ஒன்பஃது+நூறு என்பதை, ஒன்பஃது+ஆயிரம்எனவும் திரித்துப் புணர்க்கவேண்டுமென்பது இவர்கொள்கை.

**பிறருரை.**

'முன்னதின் ஏனைய முரணி' என்பதற்கு, "நிலைமொழி வருமொழிகளாகிய இவ்விருமொழிகளுள் முன்னதாகிய ஒன்

பஃது என்பதால், வருமொழியாகிய பத்தையும் நூற்றையும் பெருக்கிப் புணர்க்க'' என்று பொருள்கூறுவர் பிறர்.

அஃதாவது, ஒன்பஃதாலே பத்தையும், நூற்றையும் பெருக்கித் தொண்ணூறு, தொள்ளாயிரம் எனப் புணர்க்க என்பது அவர் கொள்கை.

**மறுப்பு.**

1. முரணி என்பதற்குத் திரித்து என்பது பொருளே யன்றி, பெருக்கி என்பது பொருளன்று.

2. அது பொருளாக அமைந்தாலும். அப்பொருளால் வருமொழி இவ்வாறு திரிந்தன எனத் தோன்றவில்லை.

3. தோன்றின், ''ஒவ்வொடு பகரம்நிரீஇப்பஃது அகற்றி, னவ்வை நிரலே ணளவாத்திரிப்பது'' என நிலைமொழிக்கு விகாரம்கூற வேண்டுவதில்லை. இவற்றால் அது பொருந் தாது. (194)

**'முன்னதினேனைய முரணி' என்பதற்குப் பிறிதோ ருரை.**

முன்னதின் ஏனைய முரணி என்பதற்கு நிலைமொழியா கிய 'ஒன்பது' என்பதுபோல் வருமொழியாகிய 'பத்து' என் பதனையும், 'நூறு' என்பதனையுந்திரித்து என்று பொருள் கூறினும் அமையும்.

நிலைமொழியாகிய 'ஒன்பது' என்பது எட்டின்மேல் **ஒன்று** — ஒன்**பஃது** எனப் பஃதென்னும் ஈற்றதாகித் திரிந்துநின்றது. அதன்கண் '**ஒன்று**' என்பது, அதன் பதிற்றுமடங்காகியஎண்ணுகத்திரிந்து, 'பஃது' எனநின்றது. அஃதேபோல், '**தொண்ணூறு**' என்புழி 'எண்பதின்மேல் **பத்து** = 'தொண்**ணூறு**' என வருமொழி பத்தென்பது அதன் பதிற்றுமடங்காகிய நூறுஎன்னும் எண்ணுகத்திரியும்.

'தொள்ளாயிரம்' என்புழி, "எண்ணூற்றின்மேல் நூறு = தொள்ளாயிரம்" என, வருமொழியாகிய நூறு என்பது அதன் பதிற்றுமடங்காகிய 'ஆயிரம்' என்னும் எண்ணைகத் திரியும்.

இங்கு, வருமொழித்திரிபிற்கு நிலைமொழித்திரிதலை ஒப்புக்கூறியது, நிலைமொழியிலுள்ள 'ஒன்று' என்னும் 'வருமொழி தன்பதின்மடங்கு எண்ணைகத் திரிதல்போல, தொண்ணூறு, தொள்ளாயிரம் என்புழியும் வருமொழிகளாகிய பத்து, நூறு என்பன தன்பதின்மடங்காகிய எண்களாக முறையே நூறு, ஆயிரம் எனத்திரியும் என்பது கருதியேயாகும். (194)

**'ஒன்பானொடு பத்து......' என்ற நூற்பாவிற்குப் பதசாரம்.**

**ஒன்பானொடு**— 'ஒன்பஃது' என்பது நின்றுபுணர்ந்தாலும், 'ஒன்பது' என்பது நின்றுபுணர்ந்தாலும் தொண்ணூறு, தொள்ளாயிரம் என்று முடியும்முடிபே கொள்ளப்படும் என்று அறிவிக்கவேண்டிப் 'பஃதகற்றி' என்று விதி கூறியிருப்பதற்குப் பொருந்துமாறு 'ஒன்பஃதொடு' எனக் கூருது, 'ஒன்பானொடு' எனக் கூறினர்.

**ஒவ்வொடு**— 'ஒவ்வொடு தகரம்நிறீஇ' என்புழித் தகரமெய்யை ஒகரத்தையடுத்து நிறுத்தாது, ஒகரவுயிர்க்கு உடம்பாக (த்+ஒ=தொ என) நிறுத்துக என்று அறிவித்தற்பொருட்டு 'ஒகரத்தொடு' என்னது 'ஒவ்வொடு' என்ருர்.

**திரிப்பது**— இந்நூற்பாவில்வரும் புணர்மொழிகள் ஒகரவுயிர் ஒன்றொழிய ஏனையவெல்லாம் விகாரப்பட்டுக் கிடந்தமையின் குறிப்புப்பொருளின்றிமுடியும் மரூஉமுடிபு எனக்கொள்ளற்க என்றறிவித்தற்பொருட்டுத் 'திரிவது' எனத் தன்வினையாற் கூருது, 'திரிப்பது' எனப் பிறவினையாற் கூறினர்.

**நெறியே**— ஒன்பஃது+பத்து என்பதும், ஒன்பஃது+நூறு என்பதும் திரிந்து முறையேதொண்ணூறுஎனவும்தொள்

ளாயிரம் எனவும் முடியுமிவற்றை இலக்கணமுடிபாகப் பழையநூலாசிரியர் முடித்தபடியே முடித்தாம் என்றறிவித் தற்பொருட்டு 'நெறியே' என்ருர். (194)

## செய்யுட்கேயுரிய புணர்ச்சிவிதிகள்.

உயிரீற்றுப்புணரியலுள், செய்யுட்கேயுரியனவாக நான் கிடங்களில் புணர்ச்சிவிதிகள் கூறப்படுகின்றன. அவை வருமாறு:-

1. "எகரவினு முச்சுட்டின்......தூக்கிற்சுட்டு
நீளின் யகரமும் தோன்றுதல் நெறியே" (163)

செய்யுட்கண் சுட்டுநீண்டுஒலித்தவழி யகரமெய் தோன்றுதல் முறையாம் என்பது கருத்து.

எ-டு. அ + இடை = ஆயிடை.

2, "குறியதன்கீழ் ஆக்குறுகலும் அதனோடு
உகரமேற்றலும் இயல்புமாம் தூக்கின்" (172)

குற்றெழுத்தின்கீழ் நின்ற ஆகாரம் குறுகுதலும், அக் குறுகலுடனே உகரம்பெறுதலும், அவ்விரண்டுமின்றித் தன்னியல்பில் நிற்றலுமாகிய மூன்றுவிதியும்பெறும் செய்யுட் கண் என்பது கருத்து.

எ-டு. (1) **நில**விரிகானல்—ஆகாரம் குறுகிற்று.

(2) என்செய்யுமே **நிலவு** —ஆகாரம் குறுகி, உகரம் பெற்றது.

(3) நெடிய கழியும் **இரா** —இரண்டுமின்றித் தன்னியல்பில் நின்றது.

3. அன்றி யின்றியென் வினையெஞ் சிகரம்
தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே. (173)

அன்றி, இன்றி என்னும் வினையெச்சச்சொற்களினது ஈற்று இகரம் செய்யுட்கண் உகரமாய்வருமாயின், அவற்றின் முன்வரும் வல்லினம் இயல்பாம் என்பது விதி.

எ-டு:- 'நாளன்று போகி', 'உப்பின்று புற்கையுண்க' எனவரும்.

4. அதுமுன் வரும் அன்றுஉன்றுந் தூக்கின். (180)

"அது என்னும் சுட்டுப்பெயர்முன்வரும் அன்று என்னும் குறிப்புவினைமுற்றுச்சொல் முதல்நீளும் செய்யுட்கண்" என்பது விதி.

எ.டு:— அது + அன்று = அதான்று.

**புணர்ச்சிவிதிகள்.**

**விளநீண்டது.** விள + நீண்டது.

"எண்மூவெழுத்தீற் றெவ்வகை மொழிக்கும்
முன்வரு **ஞநம**யவக்கள் இயல்பும்" என்பது நூற்பா.

"இருபத்துநான்கு எழுத்துக்களையும் ஈருகவுடைய எல்லாவகைமொழிகட்கும்முன்னர் ஞநம என்னும் மெல்லினத்தையும், யவ என்னும் இடையினத்தையும் முதலாகவுடைய மொழிகள்வரின், அல்வழி, வேற்றுமையாகிய இருவழியிலும் இயல்பாகும்" என்பது இங்குக்கூறப்படும் விதி. இவ்விதிப்படி, விள என்னும் உயிரீற்றின்முன் நீண்டது என்னும் மெல்லெழுத்தைமுதலாகவுடைய மொழிவர, '**விளநீண்டது**' என அல்வழியில் இயல்பாயிற்று. இஃது எழுவாய்த்தொடராதலின் அல்வழியாம். (158)

**கபிலபரணர்.** கபிலன்+பரணன்.

"பொதுப்பெயர் உயர்திணைப்பெயர்" எனத்தொடங்கும் நூற்பாவில், "சில விகாரமாமுயர்திணை" எனக்கூறுகின்றார் ஆசிரியர்.

"மெய்யீற்றுயர்திணைப்பெயர்களும், உயிரீற்றுயர்திணைப்பெயர்களும் வன்கணம்முதலியநாற்கணங்களோடும் புணருமிடத்து நிலைமொழி வருமொழிகள் விகாரப்படுவனவுமுள" என்பது விதி. இதன்படி, கபிலன், பரணன் என்னும் உயர்திணைப்பெயர்கள் தம்முள் சேருமிடத்துக் கபிலன்

என்பதன் ஈறுகெட்டது. ''உயர்திணையும்மைத்தொகை பலரீறே'' (சொல் 372) என்னும் நூற்பாவின் விதிப்படிப் பரணன் என்பதன் ஈறுகெட, பலர்பால் விகுதியைப்பெற்றுக் **கபிலபரணர்** எனமுடிந்தது. (159)

**அரசவள்ளல்.** அரசன் + வள்ளல்.

இதுவும், ''சிலவிகாரமாம் உயர்திணை'' என்னும் விதிப்படி நிலைமொழி யீறுகெட **அரசவள்ளல்** என முடிந்தது.

**நாகரிது.** நாகு + அரிது.

''உயிர்வரின் உக்குறள் மெய்விட்டு ஓடும்'' என்பது நூற்பா. குற்றியலுகரத்தின்முன் உயிரெழுத்தை முதலாகவுடைய மொழிவரின், அக்குற்றுகரம் தனக்காதாரமான மெய்நிற்கத் தான் கெடும்'' என்பது இங்குக் கூறப்படும்விதி. எனவே, நாகு என்னும் நெடிற்றொடர்க்குற்றுகரத்தின்முன் அரிது என்னும் உயிர்முதல்மொழிவர, அக்குற்றுகரங் கெட்டு நாக் + அரிது என நின்றது.

பிறகு, 'உடல்மேல் உயிர்வந்தொன்றுவதியல்பே' என்னும் விதிப்படி மெய்யின்மேல் அகரவுயிரேறி **நாகரிது** என முடிந்தது. (164)

**விளக்குறிது.** விள +குறிது.

''இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
கசதப மிகும் விதவாதன மன்னே''—என்பது நூற்பா.

'இயல்பீருகவும் விதியீருகவும் நின்ற உயிரெழுத்துக்களின்முன் வல்லினம்வரின், இருவழியிலும் மிகும்' என்பது இங்குக் கூறப்படும் விதி. இவ்விதி பெரும்பாலும் தனிப்படச் சிறப்பித்துச் சொல்லப்படாத சொற்களுக்கேயுரியது. இதன்படி, விள என்னும் உயிரீற்றின்முன் குறிது என்னும் வல்லெழுத்தை முதலாகவுடைய மொழிவர, **'விளக்குறிது'** என வல்லெழுத்து மிக்குப் புணர்ந்தது. இஃது எழுவாய்த்தொடராதலின் அல்வழிப்புணர்ச்சியாம். (165)

**விளங்காய், களங்கனி.**

விள + காய்; கள + கனி.

"மரப்பெயர் முன்னர் இனமெல்லெழுத்து
வரப்பெறுனவும்உள வேற்றுமைவழியே" என்பது
நூற்பா. உயிரீற்று மரப்பெயர்கள்முன் வல்லினம்வரின், வேற்றுமையில் வல்லெழுத்திற்கு இனமான மெல்லெழுத்து மிகுதலும் உண்டு என்பது இங்குக்கூறப்படும் விதி. இதன் படி, விள, கள என்னும் மரப்பெயர்கள்முன் காய், கனி என்னும் வல்லெழுத்தை முதலாகவுடைய மொழிகள்வர, அவ் வல்லெழுத்திற்கு இனமான மெல்லெழுத்து மிக்கு, **விளங் காய், களங்கனி** என முடிந்தது. விளவினதுகாய், களவி னதுகனி எனப் பொருள்தருதலின் இவைகள் வேற்றுமைப் புணர்ச்சிகளாம். (166)

**சாக்குத்தினன்.** சாவ + குத்தினன்.

'சாவவென் மொழியீற்றுயிர்மெய் சாதலும்விதி' என்பது நூற்பா.

'சாவ என்னும் (செயவென்னும்) எச்சத்தின் ஈற்றுயிர் மெய் கெட்டுப் புணர்தலும் விதி' என்னும் இந்நூற்பாவின் விதிப்படிச் சாவ என்பதன் ஈற்றுயிர்மெய் கெட்டது. பிறகு, "இயல்பினும் **விதியினும்நின்ற உயிர்முன் கசதப மிகும்"** என்ற நூற்பா விதிப்படி விதியீருகிய சா என்பதன் முன் குத்தினன் என்பதுவர, வல்லெழுத்துமிக்குச் **சாக்குத் தினன்** என்ருயிற்று. (169)

**நாடுரி.** நாழி + உரி.

"உரிவரின் நாழியின் ஈற்றுயிர்மெய்கெட
மருவும் டகரம்" என்பது நூற்பா.

'நாழி என்பதன்முன்னர் 'உரி' என்பதுவரின், நாழியின் ஈற்றுயிர்மெய் (ழி) கெட, அவற்றினிடையில் டகரமெய் தோன்றும்' என்பது விதி. அவ்விதிப்படி நா + உரி என

நிலைமொழியீற்றுயிர்மெய்கெட்டு, இடையே டகரமெய் தோன்ற, நாட் + உரி என நின்றது.

பிறகு, 'உடல்மேல் உயிர்வந்தொன்றுவதியல்பே' என்னும் விதிப்படி '**நாடுரி**' என முடிந்தது. (174)

**புளிங்கறி**. புளி + கறி.

'சுவைப்புளிமுன் இனமென்மையுந் தோன்றும்' என்பது நூற்பா. 'புளியென்னும் மரமும் பழமுமல்லாமல், அறுசுவையுள் ஒன்றை (பண்பு) உணர்த்தும்பெயர்முன் வரும்வல்லினத்திற்கு இனமாகிய மெல்லினமும் ஒரோவழிமிகும்' என்பது இங்குக்கூறப்படும் விதி.

இதன்படி, புளியென்னுஞ்சுவைப்பெயர்முன் கறியென்னும் வல்லெழுத்தைமுதலாகவுடைய மொழிவர, அதற்கு இனமாகிய மெல்லெழுத்துமிக்குப் **புளிங்கறி** எனமுடிந்தது. (174)

**எஃகுகடுமை**. எஃகு + கடுமை.

"இடைத்தொடர் ஆய்தத்தொடர் ஒற்றிடையின்
மிகாநெடில் உயிர்த்தொடர்முன் மிகா வேற்றுமை"

என்பது நூற்பா. இதனுள், "ஆய்தத்தொடர்முன் வரும்வல்லினம் வேற்றுமைக்கண் மிகா" என விதி கூறப்பட்டுள்ளது. இவ்விதிப்படி, எஃகு என்னும் ஆய்தத்தொடர்முன் கடுமை என்பது வர, **எஃகுகடுமை** என மிகாது இயல்பாயிற்று. எஃகினதுகடுமை என வேற்றுமைப்பொருள் தருதலைக் காணலாம். (182)

**நாடுகிழவோன்**. நாடு+கிழவோன்.

"நெடிலோடு உயிர்த்தொடர்க் குற்றுகரங்களுட்டற
ஒற்றிரட்டும் வேற்றுமைமிகவே" — என்னும் நூற்பாவில், நெடில், உயிர்த்தொடர்க்குற்றுகரங்களுள், டகர றகரமாகிய இரண்டொற்றும் வேற்றுமைக்கண் பெரும்பாலும் இரட்டும் என்று விதிகூறுகின்றார். இவ்விரண்டொற்றும் பெரும்பாலும் வேற்றுமையில் இரட்டுமெனவே, சிறுபான்மை வேற்றுமைக்கண் இரட்டா என்பது பெறப்படும். அதன்படி

**நாடுகிழவோன்** என்னுமிடத்து நாட்டையுடைய கிழவோன் எனப் பொருள்தருதலின் வேற்றுமைக்கண் ஒற்று இரட்டாதாயிற்று. பிறகு, 'ஒற்றிடையில்மிகாநெடில்...... முன் மிகா' என்ற விதிப்படி, வருமொழி வலிமிகாது இயல்பாயிற்று. (199)

**காட்டரண்.** காடு + அரண்.

"நெடிலோடு......" எனத்தொடங்கும் நூற்பாவில், நெடிற்றொடர்க்குற்றுகரமொழிகளுள், டகரவொற்றுப் பெரும்பாலும் வேற்றுமைக்கண் இரட்டுமென்று கூறினர்.

அவ்வாறுகூறவே, 'சிறுபான்மை அல்வழிக்கண் இரட்டுதலுமுண்டு' என்பது பெறப்படும். அதன்படி, காடாகிய அரண் எனப் பொருள்தருதலின் அல்வழியில் (பண்புத்தொகையில்) 'காடு—காட்டு' என டகரவொற்று இரட்டித்தது. பிறகு, "உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும்" என்னும் விதிப்படி உகரங்கெட, நின்றமெய்யின்மேல் உயிரேறிக் '**காட்டரண்**'என முடிந்தது. (183)

**மருத்துப்பை, கற்ரு.** மருந்து+பை, கன்று+ஆ.

"மென்றொடர் மொழியுட்சில வேற்றுமையில்
தம்மின வன்றொடராகா மன்னே" என்பது நூற்பா.

மென்றொடர்க்குற்றுகரமொழிகளுட்சில வேற்றுமைக்கண் பெரும்பாலும் தமக்குஇனமாகிய வன்றொடராகா எனக்கூறவே, 'சிறுபான்மை வன்றொடராகும்' என்பது பெறப்படும். அவ்விதிப்படி, மருந்து, கன்று என்பவைகள் மருத்து, கற்று என வன்றொடராயின. இவற்றுள், முன்னது, "இயல்பினும் விதியினும்" எனத்தொடங்கும் நூற்பாவில், விதியீருகிய உயிர்களின்முன் வருங்கசதபக்கள் மிகும்' எனக்கூறியவிதிப்படி, வல்லெழுத்துமிக்கு '**மருத்துப்பை**' எனமுடிந்தது. பின்னது, 'உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும்' என்ற விதிப்படி உகரங்கெட்டுக் 'கற்ரு' என முடிந்தது.

**இற்றைநாள்.** இன்று + நாள்.

"ஐயீற்றுடைக் குற்றுகரமுமுளவே"—என்பது நூற்பா. ஐகாரச்சாரியையினை ஈற்றிலே பெற்றுவரும் மென்றொடர்க்

குற்றுகரமொழிகளுஞ் சிலவுள என்பது இங்குக் கூறப்படும் விதி.

இதற்குமுன்னர் வந்துள்ள 'மென்றொடர்மொழியுள்' என்ற நூற்பாவில், "மென்றொடர்க்குற்றுகரம் சிறுபான்மை வன்றொடராகத்திரியும்" என்னும்விதி பெறப்படுகின்றது. அவ்விதிப்படி, 'இன்று' என்பது 'இற்று' எனத்திரிய, இந்நூற்பாவின்விதிப்படி, ஐகாரச்சாரியையிணைப்பெற்று, இற்று+ ஐ + நாள் எனநின்றது. பிறகு, 'உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும்' என்னும் விதிப்படி உகரங்கெட்டு, '**இற்றைநாள்**' என முடிந்தது. (185)

**தேங்காய்.** தெங்கு + காய்.

'தெங்குநீண்டு ஈற்றுயிர்மெய் கெடும் காய்வரின்" என்பது நூற்பா. காய் என்னுஞ்சொல்வருமாயின், தெங்கு என்னும் நிலைமொழிமுதல்நீண்டு ஈற்றுயிர்மெய் கெடும் என்னும் இந்நூற்பாவிதிப்படித் தெங்கு என்பது தேங்கு என நீண்டும், ஈற்றுயிர்மெய் (கு) கெட்டும் **தேங்காய்** எனமுடிந்தது. (178)

**ஏழுகடல்.** ஏழு+கடல்.

"எண்ணிறையளவும் பிறவும்" எனத்தொடங்கும் நூற்பாவில், "எண்முதலிய அளவுப்பெயரேயன்றி, பிறபெயரும் வருமொழியாகவரின், நிலைமொழியிலுள்ள ஏழு என்பதன் நெடில் குறுகும்" என்று விதி கூறுகின்றார். அதன்படி ஏழு என்பது 'எழு' எனக்குறுகி எழுகடல் என முடிந்தது. ஈண்டு, வருமொழிமுதலில் மெய்வருமிடத்து நெடில்குறுகும் என்பதும் உயிர்வருமிடத்துக் குறுகாது என்பதும் 'ஏற்புழி' யென்ற மிகையாற் கொள்ளப்படும். (188)

**நாழி.** நான்கு + நாழி.

'எண்ணிறையளவும்......' எனத் தொடங்கும் நூற்பாவில், "ஆறேழல்லவற்றின் **ஈற்றுயிர்மெய்யும்**............. ஏகும்" எனக் கூறப்பட்டுள்ள விதிப்படி,

நான்கு என்பதன் ஈற்றுயிர்மெய் (கு) கெட்டு நான் + நாழி என நின்றது.

பிறகு, ''நான்கன்மெய்யே லறவா குமே'' என்ற சிறப்பு நூற்பாவிதிப்படி நிலைமொழி னகரம் லகரமாகவும், றகரமாகவும் திரியவேண்டும். ஆனல், ஏற்புழி என்றதனுல், மெல்லினம் ஒழிந்த ஏனையவைவருங்கால், னகரம் திரியும்என்றும் மெல்லினம்வருங்கால் னகரவீற்றுப்புணர்ச்சிபோல முடியும் என்றும் கொள்ளப்படும். எனவே,

''குறிலணைவில்லா ணனக்கள் வந்த
நகரம் திரிந்துழி நண்ணும் கேடே''—என்ற நூற்பாவிதிப்படி வருமொழியாகிய நாழி என்பதன் நகரம் திரிந்து, 'ணுழி' என்ருக, நிலைமொழியாகிய 'நான்' என்பதன் ஈற்று னகரமெய் கெட்டு '**நாணுழி**' என முடிந்தது. (188, 191)

## தொண்ணூறு, தொள்ளாயிரம்.

ஒன்பஃது + பத்து; ஒன்பஃது + நூறு.
'ஒன்பானொடுபத்தும் நூறும் ஒன்றின்
முன்னதின் ஏனைய முரணி' என்னும் விதிப்படி,

ஒன்பஃது என்னும் எண்ணுப்பெயருடன் பத்தும் நூறும் புணர, அவ்வருமொழியாகிய பத்தை நூருகவும், நூற்றை ஆயிரமாகவுந் திரித்து,

ஒன்பஃது + நூறு எனவும்,
ஒன்பஃது + ஆயிரம் எனவுங்கொள்ளப்படும்.
'ஒவ்வொடு தகரம் நிறீஇ' என்னும் விதிப்படி,
தொன்பஃது + நூறு,

தொன்பஃது + ஆயிரம் என, தகரமெய்யை நிலைமொழி முதலெழுத்தோடு சேர்த்து முடிக்கப்படும்.

'பஃது அகற்றி'—என்னும் விதிப்படி, நிலைமொழியிறுதிக் கண்ணுள்ள பஃது என்பதனைக் கெடுத்து,

தொன் + நூறு, தொன் + ஆயிரம் என நிறுத்தப்படும்.

'னவ்வை நிரலே (முறையாய்) ணளவாத்திரிப்பதுநெறி' என்னும் விதிப்படி, நிலைமொழியிலுள்ள னகரமெய்யை முறையே ணகரமாகவும், ளகரமாகவுந்திரித்து,

தொண் + நூறு, தொள் + ஆயிரம் என நிறுத்தப்படும். பிறகு, 'னலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகும் தநக்கள் ...........' (237) என்னும் நூற்பா விதிப்படி, நூறு என்னும் வருமொழிமுதலிலுள்ள நகரமெய் ணகரமெய்யாகத்திரிய, தொண்ணூறு என முடியும். •

'தனிக்குறில் முன்னொற்று உயிர்வரின் இரட்டும்' என்னும் நூற்பாவிதிப்படி,

'தொள்' என்னும் நிலைமொழியிலுள்ள ளகரமெய் இரட்டித்து, தொள்ள் + ஆயிரம் என்றாகும்.

'உடல்மேல் உயிர்வந்தொன்றுவதியல்பே' என்னும் விதிப்படி, இரட்டித்த ளகரமெய்யின்மேல் உயிரேறித் தொள்ளாயிரம் என முடியும். (194)

**பன்னிரண்டு.** பத்து + இரண்டு.
''இரண்டு முன்வரின் பத்தின் ஈற்றுயிர்மெய்
கரந்திட (கெட) ஒற்று னவ்வாகும் என்ப''—என்ற நூற்பாவிதிப்படி, பத்து என்னும் நிலைமொழியினது ஈற்று

---

''தொண்ணூறு, தொள்ளாயிரம் என்பவற்றில் பழமையைக் குறிக்கும் 'தொல்' என்பதே நிலைமொழியாம். லகரம் னகரமாகத் திரிய, பிறகு அந்த னகரம் ணகரமாகத்திரிந்து 'தொண்ணூறு' எனவும், லகரம் ளகரமாகத் திரிந்து 'தொள்ளாயிரம்' எனவும் வரும். 'தொலிவாரமு' என்னும் (தெலுங்குச்) சொல்லிற்கு 'வாரத்திற்கு முதல்நாள்' எனப் பொருள்படுவதுபோல, 'நூற்றுக்கு முந்தியது தொண்ணூறு; ஆயிரத்துக்கு முந்தியது தொள்ளாயிரம்' எனப்பொருள்படும்'' என்பர் டாக்டர் மு. வரதராசனார்.

உயிர்மெய்கெடத், தகரமெய் னகரமெய்யாகத் திரிந்து 'பன் + இரண்டு' என நின்றது.

பிறகு, 'தனிக்குறில்முன்னொற்றுயிர்வரின் இரட்டும்' என்ற விதிப்படி, தனிக்குறிலையடுத்துள்ள னகரமெய் இரட்டித்துப் பன்ன்+இரண்டு எனநிற்க, இரட்டியமெய்யின்மேல் உயிரேறிப் பன்னிரண்டு என முடிந்தது. (198)

**வழுதுணங்காய்.** வழுதுணை + அம் + காய்.

"வேற்றுமையாயின் ஐகான் இறுமொழி
ஈற்று அழிவோடு அம் ஏற்பவு முளவே" என்பது
நூற்பா.

"ஐகாரவீற்றுச்சொல் வேற்றுமைக்கண் வருமாயின் ஐகாரங்கெட்டு 'அம்' என்னும் சாரியையைப்பெற்று முடிவதுமுண்டு" என்பது இங்குக் கூறப்படும் விதி. அதன்படி, வழுதுணையினதுகாய் எனப்பொருள்தருதலின் வேற்றுமைக்கண் ஐகாரங்கெட அம்முச்சாரியைதோன்றி வழுதுணம் என முடியும்.

பிறகு, "காய் என்பதனோடு புணருங்காலத்து, நிலைமொழியீற்று மகரமெய் (சாரியைமெய்) வருமொழிவல்லெழுத்திற்கு இனமாய்த்திரியும்" எனக்கூறும் (மவ்வீறு219) நூற்பாவின்படி வழுதுணம் என்பதன் மகரம் திரிந்து, வழுதுணங்காய் என முடிந்தது. (902)

**பனங்காய்.** பனை + அம் + காய்.

'பனைமுன்.........வலிவரின்ஐபோய் அம்மும்.........வேற்றுமை' என்பது நூற்பா.

"பனைமுன் வல்லினம்வரின் வேற்றுமையில் ஐகாரங் கெட்டு 'அம்' என்னும் சாரியைபெறும்" என்பதுஇங்குக் கூறப்படும்விதி. இதன்படி, பனை + காய் என்புழி ஐகாரங் கெட்டுப் பன் + காய் எனநிற்க, அவற்றினிடையே அம்முச்சாரியைதோன்றி, பனம் + காய் என்றாகும். பிறகு,

'மவ்வீறு' எனத்தொடங்கும் நூற்பாவிற்கூறப்பட்டுள்ள 'வன்மைக்கினமாகத்திரிபவும்' என்ற விதிப்படி நிலைமொழி யீற்று மகரமெய் வருமொழி வல்லெழுத்திற்கு இனமாகிய நகரமாகத்திரிந்து **பனங்காய்** என முடிந்தது. (203)

**பனாட்டு.** பனை + அட்டு,

"பனைமுன் கொடிவரின்" எனத்தொடங்கும் நூற்பாவில் 'அட்டு உறின் ஐ கெட்டு அ நீள்வுமாம் வேற்றுமை' என விதிகூறுகின்றார்.

அஃதாவது, பனைமுன் அட்டு என்னும்பெயர் வருமாயின், ஐகாரங்கெட, அகரம் ஆகாரமாய்த் திரியும் என்பது இதன் கருத்து. இதன்படிப் பனை என்பதன் ஐகாரங்கெட, 'பன்' எனவரும். வருமொழி அட்டு என்பதன் அகரம் ஆகாரமாய்த் திரிய 'ஆட்டு' என வரும்.

பிறகு, 'உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவதியல்பே' என்னும் விதிப்படிப் பனாட்டு என முடியும். ஈண்டு, பனையினது அட்டு எனப் பொருள்தருதலின் இது வேற்றுமை யாயிற்று. (203)

## முதனிலைத்தொழிற்கும், ஏவற்குமுரிய புணர்ச்சி விதிகள்.

### முதனிலைத்தொழிற்பெயராவது,

தொழிற்பெயர்விகுதி குன்றி (மறைந்து) முதனிலை (பகுதி) மட்டும் நின்று தொழிற்பெயர்ப்பொருளைத் தருவதாம்.

ஞணநமலவளன என்னும் எட்டுமெய்களையும் இறுதியாகவுடைய முதனிலைத்தொழிற்பெயரும், ஏவல்வினையும் யகரமொழிந்த மெய்கள்வருமாயின், பெரும்பாலும் உகரச் சாரியை இறுதிக்கண்வரும். சில ஏவல்வினைகள் அவ்வுகரச் சாரியையினைப் பெருதுவரும்.

எ-டு. உரிஞ் + கடிது என்புழி உகரச்சாரியையோடு வருமொழி வல்லெழுத்துமிக்கு உரிஞுக்கடிது என முடியும்.

உண் + கொற்று என்புழி உகரச்சாரியையொடு நிலை மொழி ஒற்றிரட்டித்து உண்ணுகொற்று என முடியும். 'உண் கொற்று' எனச்சாரியைபெருதும் வரும். (207)

## 'மவ்வீறெற்றழிந்து உயிரீறெப்பவும்'—'ஒப்பவும்' என்ற மாட்டேற்ருற் கொள்ளும் விதி.

இது, மகரவீற்றுச்சொற்கள் புணரும்முறையைக் கூறுகின்றது. "மகரவீற்றுச்சொற்கள், இறுதிமகரங்கெட விதியீருய் நின்று. இயல்பு உயிரீறுபோல, உயிர்வரின் உடம்படு மெய் தோன்றவும்பெறும்" என்பது இங்குக்கூறப்படும்விதி.

| எ–டு. | அல்வழி. | வேற்றுமை. |
| --- | --- | --- |
| | வட்டவாழி. | மரவடி. |

ஈண்டு வட்டம், மரம் என்னும் மகரவீற்றுச்சொற்கள், வட்ட, மர என இறுதிமகரங்கெட்டு விதியுயிரீருய் நின்றது. பிறகு, அவ்வுயிரீற்றின்முன் ஆழி, அடி என்னும் உயிர்முதல் மொழிவர, அவற்றினிடையே "ஏனையுயிர்வழி வவ்வும்" என்ற விதிப்படி வகரவுடம்படுமெய்பெற்று 'வட்டவாழி' 'மரவடி' என முடிந்தன. ஆகவே, மகரவீற்றுச்சொற்கள் இவ்வாறு உடம்படுமெய் பெற்றுவரும் என்பதே 'ஒப்பவும்' என்ற மாட்டேற்ருற் கொள்ளும் விதியாகும். (219)

## இல்லைப்பொருள், இல்லாப்பொருள் என்புழிவரும் ஐகார ஆகாரங்களைப்பற்றிய தடைவிடைகள்.

இவ்விரண்டும் சாரியைகளா, விகுதிகளா என்பதே இங்கெழுந்தடை.

### அதற்குவிடை.

இவ்விரண்டும் விகுதிகள் அல்ல; சாரியைகளே என்பதற்கு எட்டுக்காரணங்கள் கூறுகின்ருர் முனிவர். அவை யாவன,

1. 'இல்' என்பதற்குரிய புணர்ச்சிவிதியை மெய்யீற்றுப்புணரியலில் கூறியுள்ளார். ஆதலின், நிலைமொழியீறு

'இல்' என மெய்யீருக இருக்கவேண்டுமேயன்றி விகுதி யோடு கூடி 'இல்லே' என உயிரீருக இருக்க முடியாது.

2. லகரவீற்றிற்குப் பொதுவிதி கூறிச் சிறப்புவிதி கூறு மிடத்து, இன்மைப்பொருளேயுணர்த்தும் இல்' என்று மெய்யீற்றுச்சொல்லாகச் சிறப்பித்துக்கூறியுள்ளாரேயன்றி 'இல்லே' என உயிரீற்றுச் சொல்லாகச் சிறப்பித்துக் கூற வில்லே.

3. இவையிரண்டும் விகுதிகளாயிருப்பின், விகுதிசேர் தலேப்பற்றிப் பதவியலிற் கூறவேண்டுவதில்லே.

4. இந்நூற்பாவில், 'ஆகாரத்தொடு வன்மையாகலும்' என வல்லினப்பேற்ருேடு ஆகாரத்தையும் உடன்சேர்த் துக்கூறியுள்ளார். புணரியலுள் மிகுதல்புணர்ச்சிபற்றி விதி கூறுங்கால், எழுத்துமிகுதல், சாரியைமிகுதல் என்னும் இரண்டையுங் கூறவேண்டுமேயன்றி விகுதிமுதலிய வேறு எதனேயுங்கூறக்கூடாது என்பது பொதுவிதி. இங்கு, வல் லெழுத்துமிகும் எனக் கூறியதோடு ஐகாரமும் ஆகாரமும் மிகும்எனக் கூறியுள்ளார்.

5, இவற்றைப்பற்றிய புணர்ச்சிவிதிநூற்பாவில், 'இல்' என்னும் மெய்யீற்றுச்சொல்லேக்கருதியே ஐகாரமும் ஆகா ரமும் பெருமல் இயல்புமாகும் எனக் கூறியுள்ளார். அவை விகுதிகளாக இருப்பின் 'இல்' இயல்பாகப் புணரும் எனக் கூருர்.

6. எதிர்மறைப்பொருளே 'இல்' என்னும் பகுதியே யன்றி ஆகாரம் தரவேண்டுவதில்லே. ஆதலின், ஆகா ரத்தை விகுதியாகக்கொண்டு 'இல்லா' எனக் கூறவேண்டு வதில்லே.

7. அவ்வாகாரம் எதிர்மறைப்பொருள் தருமாயின் அஃது இன்மைக்கு மாருய உண்மைப்பொருளேத் தரவேண் டும். ஆனல், அஃது உண்மைப்பொருளேத் தாராது.

8. விகுதி - எல்லா வினைகளோடும் வரவேண்டும் ஆதலின், ஆகார எதிர்மறைவிகுதி தெரிநிலைவினைக்கு வருமேயன்றிக் குறிப்புவினைக்கு வாராது.

இத்தகைய காரணங்களால் ஈண்டுவரும் ஐகார, ஆகாரங்கள் சாரியைகளேயன்றி, முற்றுவிகுதியுமல்ல; எச்ச விகுதியுமல்ல. (233)

## "உருபின் முடிபவையொக்கும் அப்பொருளினும்"—இதுபற்றிய விளக்கம்.

இந்நூற்பா மெய்யீற்றுப்புணரியலுள் வருகின்றது. இவ்வியலையடுத்துள்ள உருபியலிற் கூறப்படும் உருபுபுணர்ச்சிக்கண் முடியும்முடிபுகள் பொருட்புணர்ச்சிக்கண்ணும் ஒக்கும் என்பது இதன்பொருள்.

'தான்' என்பது 'ஐ' முதலிய உருபுகளோடு புணரும் முறையைப்பற்றிக் கூறினால், அஃது உருபுபுணர்ச்சி எனப்படும். தான் என்பது கை, செவிமுதலிய பொருள்களை யுணர்த்தும் சொற்களோடுபுணரும் முறையைப்பற்றிக் கூறினால், அது பொருட்புணர்ச்சி எனப்படும். ஈண்டு, உருபு புணர்ச்சிக்கண் முடியும் முடிபுகள் பொருட்புணர்ச்சிக்கண்ணும் பொருந்தும் என மாட்டேற்றிப் பொருட்புணர்ச்சிக்கு விதி கூறியுள்ளார்.

## பொருந்தும்முறைக்கு எடுத்துக்காட்டு.

'தான்' என்னும்பெயர் உருபுகளோடுபுணருங்கால் (தன் என) நெடுமுதல் குறுகும் என்ற விதி —தான் தாம் நாம் நெடுமுதல் குறுகும்' என்ற நூற்பாவில் (247) கூறப்பட்டுள்ளது. ஆகவே, ஒற்றிரட்டித்துத் தன்னை என முடியும். அதுபோலவே, தான் என்னும்பெயர் கை முதலிய பெயர்களோடு புணருங்காலத்து முதல் குறுகித் 'தன்கை' என முடியும். (238)

## எல்லாம், எல்லாரும் என்னும் பெயர்கள் வேற்றுமையுருபேற்குங்கால் புணரும் முறை.

**எல்லாம்.**

எல்லாம் என்பது இருதிணைக்கும் பொதுவாய்வரும் பெயர். அஃது அஃறிணைக்கண் வருங்கால், அதனோடு ஐ முதலிய ஆறு உருபுகளும் புணரின், இடையே அற்றுச்சாரியையும் உருபின்மேல் முற்றும்மையையும் பெறும்.

'மவ்வீறொற்றழிந்து' என்ற நூற்பாவிதிப்படி எல்லாம் என்பதன் மகரங்கெட்டு எல்லா + அற்று + ஐ + உம் என வரும். "இஈஐவழியவ்வும் ஏனையுயிர்வழியவ்வும்" என்ற விதிப்படி வகரவுடம்படுமெய்யும் உருபின்மேல் யகரவுடம்படுமெய்யும் பெற்று எல்லாவற்று+ஐயும் என வரும். "உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும்" என்ற விதிப்படி அற்றுச்சாரியையின் ஈற்று உகரங்கெட, நின்றமெய்யின்மேல் உருபு உயிரேறி **எல்லாவற்றையும்** என முடியும்.

எல்லாம் என்பது உயர்திணையாயின், இடையே நம்முச்சாரியையும், உருபின்மேல் முற்றும்மையும் பெறும். இதுவும் முன்பு கூறிய விதிகளின்படிப்புணர்ந்து **எல்லா நம்மையும்** எனமுடியும்.

**எல்லாரும்.**

எல்லாரும் என்னும் உயர்திணைப்பெயரோடு ஆறு உருபுகளும் புணருமிடத்து, எல்லாரும் என்பதிலுள்ள முற்றும்மை கெட்டு 'எல்லார்+ஐ' என்றாகும். உம்மை கெட்டவிடத்துத் 'தம்' என்னும் சாரியையும் உருபின்மேல் முற்றும்மையும் பெற்று எல்லார்தம் + ஐ + உம் எனவரும். தம்முச்சாரியையின் ஒற்றிரட்டித்து எல்லார்தம்மை+ஐ+உம் என்று வரும். உருபின்மேல் யகரவுடம்படுமெய் பெற்று, **'எல்லார்தம்மையும்'** எனமுடியும். எல்லார் + ஐ + உம் எனநிற்க, தம்முச்சாரியை பெறுமல் உருபின்மேல் யகரவுடம்படுமெய் மட்டும் பெற்று, **'எல்லாரையும்'** என்றும் முடியப்பெறும்.

(246)

## தன்மை, முன்னிலைப்பெயர்கள் வேற்றுமையுருபேற்கும்போது விகாரப்படும் முறை.

### தன்மை.

'யான்' என்பது 'என்' என்றும்,

'யாம்' என்பது 'எம்' என்றும்,

'நாம்' என்பது 'நம்' என்றும் விகாரப்பட்டு வரும்.

### முன்னிலை.

நீ என்பது நின் என்றும்,
நீர் என்பது நும் என்றும் விகாரப்பட்டு வரும்.

என்னை, எம்மை, நம்மை, நின்னை, நும்மை என ஒற்றிரட்டித்து உருபுகளோடு புணரும். நான்கு, ஆறுஆகிய இரண்டு உருபுகளோடு புணரும்போதுமட்டும் இவைகள் ஒற்றிரட்டாமல் 'எனக்கு' எனது என்பனபோன்று முடியும். (247)

## 'விகுதி பதஞ்சாரியை......கொளலே'—இதற்குப் பொருந்துமுரையும், பொருந்தாவுரையும்.

இது விகுதி, பதம், சாரியை, உருபு ஆகிய நான்கு புணர்ச்சிக்கும் புறனடையுணர்த்தும் நூற்பாவாகும்.

### பொருந்துமுரை.

விகுதி முதலிய நான்குபுணர்ச்சிக்கண்ணும் தனித்தனியே விதிகள் பொதுப்படக் கூறப்பட்டனவேனும், அவ்விதிகளுள் இவ்விதி இதற்குப் பொருந்தும்; இவ்விதி இதற்குப் பொருந்தாது என உய்த்துணர்ந்து எவ்விதி எதற்குப் பொருந்துமோ அவ்விதியை அதற்குக் கொள்க என்பர் முனிவர்.

எ-டு. விகுதிப்புணர்ச்சியுள் (பதவியலில்) காலங்காட்டும் விகுதிகளைப்பற்றிக் கூறுகின்றார். அவ்விடத்து று, றும் என்னும் விகுதிகள் இரண்டும் இறப்பு, எதிர்வு ஆகிய இரண்டுகாலங்களையும் காட்டும் எனப்பொதுப்படக் கூறி

யுள்ளாராயினும், விதியுள்ளது எனக்கருதி, இவ்விகுதி வருமிடமெல்லாம் இவ்விருகாலமும் பொருந்துமெனக் கொள்ளற்க.

சென்று—என்புழி இறந்தகாலமும்,

சேறு—என்புழி எதிர்காலமும் பொருந்தும் என்று கொள்க. இவ்வாறே ஏனைய புணர்ச்சிகட்கும் உரைகூறப்படும்.

### பொருந்தாவுரை.

'இந்நால்வகைப்புணர்ச்சிகளுள், ஒன்றற்குக் கூறிய விதியை, மற்ருென்றற்கும் கொள்க என்று கூறுவர் பிறர்.

### அவ்வுரை பொருந்தாமைக்குக் காரணம்.

1. 'விகுதி......அனைத்தினும் உரைத்தவிதியின்ஓர்ந்து ஒப்பனகொளல்' என்னுந் தொடரில் பிறருடைய உரைக்கு அமைந்த சொல்லொன்றும் இல்லை.

2. ஒன்றற்குக் கூறியுள்ளவிதியை மற்ருென்றற்கும் கொள்ளுதல் எழுத்ததிகாரத்தினுள் வேறுபலவிடங்களிலுங் கூறப்பட்டுள்ளது,

பதவியலுள்—'ஈறுபோதல்' என்னும் நூற்பாவில், ஈறு கெடுதல் முதலிய விகாரம் விகுதிப்புணர்ச்சிக்கு மட்டுமின்றிப் பதப்புணர்ச்சிக்கும் வரும் என்பதுதோன்றப் 'பண்பிற்கியல்பே' என்றும் கூறியுள்ளார். இவ்வாறே, 131, 151, 238, 242 ஆகிய நூற்பாக்களிலும் ஒன்றற்குக்கூறிய விதி ஏனையவற்றுக்கும் பொருந்துமாறு கூறியுள்ளார்.

ஆதலின், அதனை அதிகாரப்புறனடையிற் கூறவேண்டுவதில்லை.

இவ்விரண்டு காரணங்களால் பிறருரை பொருந்தாது. (254)

### புணர்ச்சிவிதிகள்.

**மண்ணகம்.** மண் + அகம்.

"தனிக்குறில் முன்ஒற்று உயிர்வரின் இரட்டும்"—என்பது நூற்பா.

தனிக்குறிலையடுத்து ஓரொற்றைப்பெற்றுள்ள மொழிகள் நிலைமொழிகளாய் நிற்க, வருமொழியில் உயிரெழுத்தை முதலாகவுடைய மொழிகள் வந்தால் நிலைமொழியொற்று இருவழியிலும் இரட்டிக்கும் என்பது ஈண்டுக் கூறப்படும் விதி. இதன்படி மண் என்னும் தனிக்குறிலையடுத்துள்ள ஒற்றின்முன் அகம் என்னும் உயிர்முதல்மொழிவர, மண்ண் + அகம் என இரட்டித்தது.

பிறகு, 'உடல்மேல் உயிர்வந்தொன்றுவதியல்பே' என்றவிதிப்படி இரட்டித்த ணகரமெய்யின்மேல் அகரவுயிரேறி '**மண்ணகம்**' என முடிந்தது. (203)

***சிறுகட்களிறு.*** சிறுமை + கண் + களிறு.

'ஈறுபோதல்.........பண்பிற்கியல்பே' என்ற (பதவியல் 136) நூற்பாவிதிப்படிச் சிறுமையென்ற பண்புச்சொல்லின் மை விகுதிகெட்டுச் 'சிறுகண்' என்ருயிற்று. பிறகு,

'ணன வல்லினம்வரட்டறவும்' – என்ற விதிப்படிச் 'சிறுகண்' என்னும் ணகார ஈற்றுச் சொல்முன் 'களிறு' என்னும் வல்லெழுத்தை முதலாகவுடைய மொழிவர, ணகரம் டகரமாய்த்திரிந்து 'சிறுகட்களிறு' என முடிந்தது. சிறு கண்களையுடையகளிறு எனப்பொருள் தருதலின் இது வேற்றுமைப்புணர்ச்சியாம்.

***மண்ணீட்சி.*** மண் + நீட்சி.

'ணன வல்லினம் வரட்டறவும், **பிறவரின்**

**இயல்புமாகும்** வேற்றுமைக்கு'—என்பதுநூற்பா.

'ணகர னகரங்கள் வேற்றுமைக்கண் வல்லினமொழிந்த பிறவினங்கள்வரின், இயல்பாகும்' என்ற இந்நூற்பா விதிப்படி 'மண்' என்னும் நிலைமொழியீறு இயல்பாய்நின்றது.

'னலமுன் றனவும் ணளமுன் டணவும் ஆகுந் தநக்கள் ...' என்ற நூற்பாவிதிப்படி, ணகரவீற்றின்முன் நகரமுதல்மொழி

யாகிய 'நீட்சி' என்பது வர, அந்நகரமெய் ணகரமெய்யாகத் திரிந்து **'மண்ணீட்சி'** என முடிந்தது.

**பசுமணன்மை.** பசுமண் + நன்மை.

"குறிலணைவில்லா ணனக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே"—என்பது நூற்பா.

'தனிக்குறில் ஒன்றணையுமொழித்து ஒழிந்த ஒருமொழி தொடர்மொழிகளைச் சார்ந்த ணகர னகரங்கள், வருமொழிக்கு முதலாக வந்த நகரம் மயக்கவிதியின்மையின் திரிந்தவிடத்து, இயல்பாகாது கெடும்' என்பது இங்குக் கூறப்படும் விதி.

"ணளமுன் டணவும்......" என்ற நூற்பாவின் விதிப்படி வருமொழி நகரம் ணகரமாய்த் திரிந்து பசுமண்+நன்மை என்ருயிற்று. பிறகு, 'குறிலணை...'என்னும் இந்நூற்பாவின் விதிப்படி நிலைமொழியீற்று ணகரமெய்கெட்டு, **'பசுமணன்மை'** என முடிந்தது.

பசுமண்ணினது நன்மை என்று பொருள் தருதலின் இது வேற்றுமைப்புணர்ச்சியாம் என்பதும், பசுமண் என்பது பசுமை+மண் என இருசொற்கள் கூடிய தொடர்மொழியாதலின், பண்புச்சொல்லின் ஈறு (மை) கெட்டுப் 'பசுமண்' என முடிந்த தொடர்மொழி என்பதும் அறியப்படும். (210)

**சாட்கோல்.** சாண்+கோல்.

'சாதிகுழூஉப்பரண்...' எனத் தொடங்கும் நூற்பாவில், 'உணவு எண்சாண் பிற டவ்வாகலுமாம் அல்வழியும்மே' எனக்கூறுகின்ருர் ஆசிரியர்.

ஈண்டு, 'சாண் என்னும் நீட்டலளவைப்பெயர்முன் வல்லெழுத்துக்கள்வரின் அல்வழியில் ணகரம் டகரமாய்த் திரியும் எனவிதி கூறப்படுகின்றது. இதன்படி, சாண் +

கோல் என்பது சாணுகியகோல் எனப் பண்புத்தொகைப் பொருள்தருதலின் அல்வழித்தொடராயமைந்து **'சாட் கோல்'** எனத் திரிந்து முடிந்தது. (211)

**எயினச்சிறுவன்.** எயின் + சிறுவன்.

'னஃகான் கிளைப்பெயர் இயல்பும் அஃகான்
அடைவும் ஆகும் வேற்றுமைப் பொருட்கே' என்பது நூற்பா.

"னகரவீற்றுச் சாதிப்பெயர்முன் வல்லினம்வர, ஈறு திரியாது இயல்பாதலும், அகரச்சாரியை பெறுதலுமுள வேற்றுமைக்கண்" என்பது இங்குக் கூறப்படும் விதி. இவ்விதிப்படி எயின் என்னும் னகரவீற்றுச் சாதிப்பெயர்முன் சிறுவன் என்னும் வல்லின முதல்மொழிவர, அகரச்சாரியை தோன்றி, (நிலைமொழியீற்று) னகரமெய்யின்மேல் சாரியை அகரம்ஏறி 'எயின + சிறுவன்' என நின்றது. பிறகு,

'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதபமிகும்' என்ற நூற்பா விதிப்படி விதியீருக நின்ற எயின என்பதன் முன்னர்வரும் வல்லினம் மிக்கு, **'எயினச்சிறுவன்'** என முடிந்தது. எயினச்சாதியினுடைய சிறுவன் எனப் பொருள் தருதலின் இது வேற்றுமைப்புணர்ச்சியாம். (212)

**தேக்குடம்.** தேன் + குடம்.

'தேன்மொழி மெய்வரின்...' எனத்தொடங்கும் நூற்பாவில், 'வலிவரின் ஈறுபோய் வலிமெலி மிகலுமாம் இருவழி' என விதிகூறுகின்ருர் ஆசிரியர். இதனுள், "தேன் என்பதன் முன்னர் வல்லினம் வரின், நிலைமொழியீற்றுமெய்கெட, வல்லினமாதல், அதற்கு இனமாதல் மிகுதலுமுள இருவழிக்கண்ணும்" என்று விதி கூறப்படுகின்றது. இதன்படி, தேன் என்னும் மொழியின்ஈற்று னகரமெய் கெட்டு, தே + குடம் என நின்றது.

பிறகு, வருமொழி வல்லினம்மிக்குத் '**தேக்குடம்**' என முடிந்தது. தேனையுடைய குடம் எனப் பொருள் தருதலின் இது வேற்றுமைப்புணர்ச்சியாம். (214)

**தேமொழி.** தேன் + மொழி.

"தேன்மொழி.........மென்மைமேவின் இறுதியழிவும்" என்ற நூற்பாவிதிப்படி, தேன் என்பதன்முன்னர் மொழி என்னும் மெல்லெழுத்தை முதலாகவுடைய சொல்வர, நிலைமொழியீற்று னகரமெய் கெட்டுத் தேமொழி என முடிந்தது. தேன்போலும் மொழி என உவமத்தொகைப்பொருள் தருதலின் இஃது அல்வழிப்புணர்ச்சியாம். (214)

**மரவடி.** மரம் + அடி.

"மவ்வீறொற்றழிந்துயிரீறு ஒப்பவும்........." என்பது நூற்பா. 'மகரவீற்றுச்சொற்கள், இறுதி மகரங்கெட, விதியுயிரீறாய் நின்று, இயல்பு உயிரீறுபோல உயிர்வரின் உடம்படுமெய் தோன்றவும் பெறும்' என இங்கு விதி கூறப்படுகின்றது. இதன்படி மரம் என்னும் நிலைமொழியீற்று மகரமெய்கெட்டு மர என விதியுயிரீறாய் நின்றது. பிறகு, அடி என்னும் உயிர்முதல்மொழி வருமொழியாய்வர, "இ ஈ ஐ ஒழிந்த ஏனையுயிர்வழி வவ்வும்' என்ற விதிப்படி, வகர உடம்படுமெய் பெற்று '**மரவடி**' என முடிந்தது. இது மரத்தினது அடி எனப் பொருள் தருதலின் வேற்றுமைப்புணர்ச்சியாம். (219)

**நந்நூல்.** நம் + நூல்.

"நுந்தம், எம் நம் ஈறும் மவ்வரு ஞநவே" என்பது நூற்பா.

இதனுள் வரும் நம் என்னும் மொழி நாம் என்பதன் விகாரமொழியாம். 'தான் தாம் நாம் முதல் குறுகும்...' என்ற (உருபியல்-247) நூற்பாவிதிப்படி நாம் என்பது குறுகி நம் என்றாயிற்று. 'இவ்விகாரமொழியின் ஈற்றுமகரம், வருமொழி முதலிலுள்ள ஞநக்களாகத் திரியும்' என்ற விதிப்படி, 'நம்+நூல்' என்புழி நிலைமொழியீற்று மகரம் வரு

மொழியின் முதலிலுள்ள நகரத்தோடொப்ப, நகரமாகத் திரிந்து **நந்நூல்** என முடிந்தது. 'நமதுநூல்' எனப் பொருள் தருதலின் இது வேற்றுமைப்புணர்ச்சியாம். (221)

**அஞ்செவி, அங்கை.** அகம் + செவி ; அகம் + கை.

'அகமுனர்ச் செவிகைவரின் இடையன கெடும்' என்பது நூற்பா. "அகம் என்னும் இடப்பெயர்முன்னர்ச் செவி, கை என்னும் சினைப்பெயர்வரின், நிலைமொழியிறுதி மகரம் வன்மைக்கினமாகத் திரிதலேயன்றி, அதன் நடுவில் நின்ற ககரமெய்யும், அதன்மேல் ஏறிய அகரவுயிருங்கெடும்" என்பது இங்குக்கூறப்படும் விதி. இவ்விதிப்படி, அகம் என்பதன்முன் செவி என்பது வர, நிலைமொழியீற்று மகரம் வருமொழி வல்லினத்திற்கு இனமாகத் திரிந்து 'அகஞ்செவி' என்ருகி, நிலைமொழியின் இடையில் நின்ற ககரவுயிர்மெய் கெட்டு, 'அஞ்செவி' என முடிந்தது. செவியினது அகம் என்னும் பொருளைத்தந்துநிற்கும் 'செவியகம்' என்னும் ஆரும்வேற்றுமைச்சொல் முன்பின்னுகமாறி இலக்கணப் போலியாய் நின்று, 'அகமாகியசெவி' எனப் பொருள் தருதலின் அல்வழிப்புணர்ச்சியாம். '**அங்கை**' என்பதும் இவ்வாறே முடிந்தது. (222)

**தாழக்கோல்.** தாழ்+கோல்.

'தமிழ் அவ்வுறவும் பெறும் வேற்றுமைக்கே
தாழும் கோல்வந் துறுமேல் அற்றே" என்பது நூற்பா.

"தமிழ் என்பதன்முன் நாற்கணமும் வரின், வேற்று மைக்கண் அகரச்சாரியை பொருந்தப் பெறும். அது போலவே தாழ் என்னுஞ்சொல்லும் கோல் என்னுஞ்சொல் லும் பொருந்துமாயின் அகரச்சாரியைபெறும்" என்பது இங்குக் கூறப்படும் விதி. இவ்விதிப்படி, அகரச்சாரியை பெற்றுத் 'தாழ+கோல்' என நின்றது. பிறகு "இயல் பினும் விதியினும் நின்றவுயிர்முன் கசதபமிகும்" என்ற நூற்பாவிதிப்படி விதியுயிரீருய் நின்ற 'தாழ' என்பதன்முன் கோல் என்பது வர, வருமொழி வல்லினம் மிக்குத் '**தாழக்கோல்**' என முடிந்தது.

'தாழைத் திறக்குங் கோல்' எனவிரிதலின் வேற்றுமைப் புணர்ச்சியாம். இனி, தாழாகியகோல் என ஒரு பொருட்கு இரு பெயராக்கினுல் இருபெயரொட்டுப்பண்புத்தொகையாய் அல்வழிப்புணர்ச்சியுமாம். (225)

**கஃறீது.** கல்+தீது.

"குறில்வழிலளத் தவ்வணையின் ஆய்தம் ஆகவும் பெறூஉம் அல்வழியானே" என்பது நூற்பா. "தனிக் குறிலின்பின் நின்ற லகர ளகரங்கள் அல்வழிக்கண்ணே தகரம் வருமாயின், றகர, டகரங்களாகத் திரிதலேயன்றி ஆய்தமாகத் திரிதலையும் பொருந்தும்" என்பது இங்குக் கூறப்படும் விதி. இவ்விதிப்படி, கல் என்னும் தனிக் குறிலையடுத்துள்ள லகரமெய்யின்முன் தீது என்னும் தகர முதல்மொழிவர, கஃ+தீது என லகரம் ஆய்தமாகத் திரிந்தது. பிறகு,

"னல முன்றனவும்.........ஆகும் தநக்கள்......" என்ற நூற்பாவிதிப்படி வருமொழி முதலிலுள்ள தகரம் றகரமாகத் திரிந்து, '**கஃறீது**' என்று முடிந்தது. இஃது எழுவாய்த் தொடராதலின் அல்வழிப்புணர்ச்சியாம். (228)

**கொல்களிறு.** கொல்+களிறு.

"குறில்செறியா லள......" எனத் தொடங்கும் நூற்பாவிற் கூறப்பட்டுள்ள 'பிற' என்ற மிகையானே, 'கொல்களிறு என்பதுபோன்று வரும் வினைத்தொகை இயல்பாதல் கொள்ளப்படும். எனவே இந்நூற்பாவின் மிகையாலே, இதற்குப் புணர்ச்சிவிதி கூறப்பட்டுள்ளது என்பதும், இது வினைத் தொகைப்பொருள் தருதலின் அல்வழிப்புணர்ச்சியாம் என்பதும் அறியப்படும். (229)

**இல்லாப்பொருள்.** இல் + பொருள்.

'இல்லென்னும்' எனத் தொடங்கும் நூற்பாவில் "ஆகாரத்தொடு வன்மையாகலும்......ஆகும்" என விதி கூறப்பட்டுள்ளது. 'இல்' என்பது இடத்தையுணர்த்தாது இன்மைப் (இல்லாமை) பண்பையுணர்த்துங்காலத்து, ஆகாரச்

சாரியை பொருந்த அவ்விடத்து வல்லினம் மிகுதலும் பொருந்தும்'' என்பது இதற்குக் கூறப்படும் பலவிதிகளுள் ஒன்று. அதன்படி, 'இல்' என்பதனோடு ஆகாரச்சாரியை பொருந்த நிலைமொழியொற்று இரட்டித்து 'இல்லா' என நின்றது. பிறகு, வருமொழி வல்லினம்மிக்கு **'இல்லாப் பொருள்'** என முடிந்தது. 'இல்லாமையாகிய பொருள்' என விரியின் பண்புத்தொகையாகவும், இல்லாதபொருள் என விரியின் பெயரெச்சத்தொடராகவும் வருதலின் இஃது அல்வழிப்புணர்ச்சியாம். (233)

**அஞ்ஞானம்.** அ+ஞானம் என்றும் அவ்+ஞானம் என்றும் இருவகையாகப் பிரிக்கப்படும். அவற்றுள்,

**அ+ஞானம்.**

''எகரவினா முச்சுட்டின் முன்னர்......பிறவரின் அவையும்......தோன்றுதல் நெறியே'' என்பது நூற்பா. சுட்டு இடைச்சொல்முன் வருமொழியில் உயிரும் யகரமும் ஒழிந்த ஏனைய மெய்கள் வந்தால் வந்த அம்மெய்யே மிகுதல் முறை' என இங்கு விதி கூறப்பட்டுள்ளது. அதன்படி, அ என்னுஞ் சுட்டின்முன் ஞானம் என்னும் மெல்லினமுதல்மொழி வர, வருமொழியின் முதலில்வந்த அந்த ஞகரமெய்யே மிக்கு **'அஞ்ஞானம்'** என முடிந்தது.

'சுட்டுவகரம் மூவினமுற முறையே
ஆய்தமும் மென்மையும் இயல்புமாகும்' என்பது நூற்பா. ''அவ் முதலிய அஃறிணைப்பண்புச் சுட்டுப்பெயரீற்று வகரம் வல்லினம் வர ஆய்தமாகவும், மெல்லினம் வர வந்த அம் மெய்யாகவும், இடையினம் வர இயல்பாகவும் புணரும்'' என்பது இங்குக்கூறப்படும் விதி. அதன்படி, அவ் என்பதன் முன் ஞானம் என்னும் மெல்லினமுதல்மொழி வர, நிலைமொழியீற்று வகரம் வருமொழி முதலில் வரும் ஞகரமாகத் திரிந்து 'அஞ்ஞானம்' என முடிந்தது. (235)

**தெவ்வுக்கடிது.** தெவ்+கடிது.

''தெவ்வென் மொழியே தொழிற்பெயரற்றே'' என்பது நூற்பா.

"தெவ்வென்னுஞ்சொல் யகரமெய்யல்லாத ஏனைய மெய்களோடு புணருமிடத்துத் தொழிற்பெயருக்குரிய புணர்ச்சிவிதியைப் பெற்றுவரும்" என விதி கூறப்படு கின்றது.

தொழிற்பெயருக்குரிய புணர்ச்சியாவது, உகரச் சாரியை பெறுதலாகும். (நூற்பா 207) அவ்வாறே தெவ் என்னும் பண்புப்பெயரும் உகரச்சாரியையினைப் பெற்றுத் 'தெவ்+உ' என நின்றது. பிறகு, "தனிக்குறில்முன் ஒற்று உயிர்வரின் இரட்டும்" என்ற விதிப்படி ஒற்று இரட்டித்துத் 'தெவ்வு' என்றாயிற்று. பிறகு, "இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதபமிகும்" என்ற விதிப்படி வருமொழி வல்லினம் மிக்குத் **'தெவ்வுக்கடிது'** என முடிந்தது. இஃது அல்வழிப்புணர்ச்சியாம். (236)

**தெம்முனை.** தெவ்+முனை.

'தெவ்வென் மொழி' என்ற நூற்பாவில், 'மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்' என விதி கூறப்பட்டுள்ளது. "தெவ்வென் மொழி உகரச்சாரியை பெறுதலேயன்றி சிறு பான்மை அதன் ஈற்று வகரம் மகரமாகத்திரியவும் பெறும்" என்பது இங்குக்கூறப்படும் விதி. இவ்விதிப்படித் தெவ் என் பதன்முன் முனை என்னும் மகரத்தை முதலாகவுடையமொழி வர, நிலைமொழியீற்று வகரம் மகரமாகத்திரிந்து, **'தெம்முனை'** என முடிந்தது. இது தெவ்வின்துமுனை எனப் பொருள் தருதலின் வேற்றுமைப்புணர்ச்சியாம். (236)

**முன்றில்.** முன்+இல்.

'இடையுரி...' எனத் தொடங்கும் புறனடை நூற்பாவில், "போலியும் மரூஉவும் பொருந்திய ஆற்றிற்கு இயையப்புணர்த்தல் யாவர்க்கும் நெறியே" என விதி கூறுகின்றார் ஆசிரியர்.

"இலக்கணப்போலிமொழிகளும் மரூஉமொழிகளும் இரு வகைவழக்கினும் நடக்கும்முறையறிந்து அதற்குப்

பொருந்துமாறு புணர்த்தல் அறிஞரது கடமை'' என்றுர் ஆதலின், 'இல்முன்' என நிற்க வேண்டியது 'முன் இல்' என இலக்கணப்போலியாய்ச் சொல் நிலைமாறி நின்றது. பிறகு, அவ்விடத்திற்கு இயைந்த றகரமெய் தோன்றி 'முன்றில்' எனது முடிந்தது. (239)

**அவற்றை.** அவ் + அற்று + ஐ.

''வவ்விறு சுட்டிற்கு அற்றுறல் வழியே'' என்ற விதிப் படி அவ் என்ற சுட்டுப்பெயர்முன் ஐ என்னும் உருபு வர, இடையே அற்றுச்சாரியை வந்தது.

'வழியே' என்ற மிகையால், தனிக்குறில் முன்ஞெற்று (உயிர்வரின்) இரட்டாது, வகரமெய்யின்மேல் அகர உயி ரேறி, 'அவற்று + ஐ' எனநின்றது. ''உயிர்வரின் உக்குறள் ...ஓடும்'' என்ற விதிப்படி 'அவற்று' என்பதன் உகரங் கெட்டு ''அவற்றை'' என முடிந்தது. (250)

**அதனை.** அஃது + அன் + ஐ (அல்லது) அது+ அன் + ஐ.

''சுட்டின்முன் ஆய்தம் அன்வரின் கெடுமே'' என்ற விதிப்படி, அஃது என்பதிலுள்ள ஆய்தம்கெட நிலைமொழி யீற்றுகரங்கெட்டு 'அதனை' என முடிந்தது.

ஆய்தமில்லாச் சுட்டுப்பெயராகிய அது என்பதன்முன் உருபுவரினும் இவ்விதிப்படியே அன்சாரியை பெற்று ''அதனை'' என முடியும். (251)

**மகத்துக்கை.** மக + அத்து + கை.

''அத்தின் அகரம் அகரமுனை இல்லை'' என்ற விதிப்படி மக என்பதன்முன் வந்துள்ள அத்துச்சாரியையின் அகரங் கெட்டு 'மகத்து+கை' என நின்றது. பிறகு ''இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும்'' என்ற விதிப்படி வல்லெழுத்துமிக்கு 'மகத்துக்கை' என முடிந்தது. (252)

### தம்மினுகிய தொழில்மொழி—விளக்கம்.

"புள்ளியும் உயிரும் ஆயிறு சொல்முன்
தம்மி ஞகிய தொழின்மொழி வரினே
வல்லினம் விகற்பமும் இயல்புமாகும்" என்பது நூற்பா.

ஈண்டுத் 'தம்' என்பது மூன்ரும்வேற்றுமையைச் சுட்டும். ஆதலின், 'தம்மினுகிய தொழில்மொழி' என்பதற்கு 'மூன்ரும்வேற்றுமைக்கருத்தாவால் (நிலேமொழிப்பொருளால்) ஆகிய தொழிற்சொற்கள்' என்பது பொருள். அத்தொழிற் சொற்கள் கோட்பட்டான், பிடிக்கப்பட்டான் என்பன போன்று செயப்பாட்டுவினைகளாய் வரும்.

ஆகவே, "மூன்ரும் வேற்றுமைத்தொகையில், மெய்யும் உயிரும் இறுதியாகிநின்ற சொற்களின்முன் அவ்வேற்று மைப்பொருளாலாகிய தொழிற்சொற்கள் (வருமொழியாக) வரின், அவ்விடத்து வரும் வல்லினம் வேற்றுமைப்பொது முடிபு (165ஆம் நூற்பா விதி) ஏலாது, விகற்பமும், இயல்பு மாகும்' என்பது இங்குக் கூறப்படும் விதி.

எ—டு. மெய்யீறு. உயிரீறு.

| | | |
|---|---|---|
| பேய்கோட்பட்டான், | புலிகோட்பட்டான், | விகற் |
| பேய்க்கோட்பட்டான். | புலிக்கோட்பட்டான். | பம். |
| பேய் பிடிக்கப்பட்டான். | புலி பிடிக்கப்பட்டான். | இயல்பு. |

(256)

### அருத்தாபத்தி, அவாய்நிலே, பாரிசேடம், அனுவாதம்—இவற்றிற்கு விளக்கம்.

**அருத்தாபத்தி.** இஃது ஆறு அளவைகளுள் ஒன்று.

அருத்தம்=பொருள். ஆபத்தி=பெறுதல், எனவே, ஒருபொருளேக் கூறிய அளவில், அதன்குறிப்பைக்கொண்டு மற்ருெருபொருளேயறிதலே அருத்தாபத்தியாகும்.

மகரவீற்றுச்சொற்களுக்குப் புணர்ச்சிவிதி கூறவந்த ஆசிரியர், 'மவ்வீறு ஒற்றழிந்து வன்மைக்கு இனமாத்திரிபவும் ஆகும்' எனக்கூறியுள்ளார். அஃதாவது, ''மகரவீற்றுச் சொற்கள், வல்லினம்வரின் இறுதிமகரங்கெடாது அவற்றிற்கு இனமாகிய மெல்லினமாகத் திரிதலுமுண்டு'' என்பது இங்குக் கூறப்படுகின்றது.

நாம் + கடியம் = நாங்கடியம்.

நாம் + சிறியம் = நாஞ்சிறியம்.

நாம் + தீயம் = நாந்தீயம் என நிலைமொழியீற்று மகரமெய், வருமொழி முதலிலுள்ள வல்லினத்திற்கு இனமாகிய மெல்லினமாய்த் திரிதலைக் காணலாம். இங்ஙனம், க ச த ப - க்களுக்கு இனமாகிய ங ஞ ந ம - க்களாய்த் திரியும் எனக் கூறவே, 'நாம் + பெரியம்' என்புழி, பகரத்திற்கு இனமாகிய மகரமாய்த்திரியவேண்டாமையின், பகரம் வரும்வழித் திரியாது என்பது அருத்தாபத்தியாற் கொள்ளப்படும். (210)

**அவாய் நிலை.** அவாய்நிலையாவது, ஒருசொல் மற்றொருசொல்லை வேண்டிநிற்றல்.

வடமொழியெழுத்துக்கட்குத் திரிபுகூறவந்த ஆசிரியர், ''ஆவீறையும் ஈயிறிகரமும்'' எனக்கூறி நூற்பாவை முடித்துள்ளார். ஈண்டு ''இகரமுமாகும்'' எனப் பயனிலை கொடுத்து முடித்திருக்கவேண்டும். ஆனல் 'ஆகும்' என்ற பயனிலையைக் கொடுக்காமல் 'இகரமும்' என முடித்துள்ளார். இங்ஙனம் பயனிலையின்றிக் கூறிய இவ்விடத்து 'இகரமும் ஆகும்' என அவாய்நிலையால் முடிக்கப்படும். நூற்பாவில், 'பயின்றுவரும் வடமொழிச் சொற்களுக்குமட்டுமே திரிபு கூறப்பட்டுள்ளது; ஏனைய வந்தவழிக் காண்க'' என்பதனை வலியுறுத்தவேண்டி, ஈண்டுப் பயனிலை தாராது 'இகரமும்' என அவாய்நிலையாக முடித்தார். இவ்வாறு ஒருசொல் மற்றொரு சொல்லை விரும்பி நிற்றலையே 'அவாய் நிலை' என்பர்.

**பாரிசேடம்.** பாரிசேடம் + ஒழிந்து நின்றதால் உணரப்படுவது. பகுபதவுறுப்புக்கள் அறுவகைப்படும். அவை ஒவ்வொன்றும் பகாப்பதங்களேயாம். ஆயினும், விகுதி முதலிய உறுப்புக்களைத் தனித்தனிச் சிறப்பித்து வேறுபெயர் கொடுத்து இலக்கணம் கூறுகின்றார் ஆதலின், பதவியலில் "தத்தம் பகாப்பதங்கள்" என்று கூறியது ஒவ்வொரு பகுபதத்திலும் முதலில் நிற்பதாகிய பகுதிகளையே குறிக்கும் என்பது பாரிசேடத்தால் அறியப்படும். ஏனைய உறுப்புக்களை விதந்துகூறவே, முதனிலைமட்டும் ஒழிந்து நின்றதாகும். அவ்வாறு ஒழிந்து நின்றதால் முதனிலைச் சொல்லிற்கே ஈண்டு இலக்கணங் கூறினார் என்பது பெறப்படுகின்றது. அதனால் இது பாரிசேடமாயிற்று. (134)

**அனுவாதம்.**

அனுவதித்தல் என்பதற்கு வழிமொழிதல் என்பது பொருள். அஃதாவது, முற்கூறியதனை வேறுகாரணம் பற்றிப் பின்னரும் எடுத்தாளுதலே 'அனுவாதம்' எனப்படும். காரணமின்றிப் பின்னரும் எடுத்தாளின் கூறியதுகூறல் என்னுங் குற்றமாய்விடும் என்பது இங்கு அறியப்படும்.

ஈண்டு, 'ணனமுன்னும் வஃகான் மிசையும் **மக் குறுகும்**' என்ற நூற்பாவில் (96) மகரம் தன் அரை மாத்திரையிற்குறுகும் எனக்கூறியுள்ளார் ஆசிரியர். பிறகு, செய்யுளில் ஈரொற்று வரும்வழியைப் பற்றிக் கூறவந்தவர்,

'லளமெய் திரிந்த னணமுன் **மகாரம்**
**நைந்து** ஈரொற்றும் செய்யுளுள்ளே' எனக் கூறுகின்றார். இங்கு, மகரம் நைந்து என்பதற்கு மகரங்குறுகி என்பது பொருள். இவ்வாறு முன்னர்க் கூறியதனையே பின்னரும் எடுத்தாளுதற்குக் காரணம் என்னவென்றால், மகரங் குறுகுதற்குத் தொடரும் ணகர னகரங்கள் இயல்பானவையல்ல; லகர ளகரங்களாயிருந்து பிறகு திரிந்து வந்தவையே என்பதனையும், இவ்வாறு வரும் மகரக் குறுக்கம் உலகவழக்கிற்குரியதன்று; செய்யுள்வழக்கிற்கே

யுரியது என்பதனையும் உய்த்துணரவேண்டும் என்பதே யாகும். (121)

## பிறிதொடு படாஅன் தன்மதங்கொளல்—விளக்கம்.

இஃது எழுவகை மதங்களுள் ஒன்று, பிறர்கொள் கைக்கு உடன்படாது தன்கொள்கையை நிலைநாட்டுதல் என்பது இதன் பொருள். இக்கொள்கை அமையுமாறு ஆசிரியர் விதி செய்துள்ளார். அதனை 27 ஆம் பக்கத்திற் காண்க.

## சிவஞானமுனிவர் வடமொழிப்புலமை நிறைந்தவர் என்பதற்குச் சான்றுகள்.

கீழ்வருவன சிவஞானமுனிவர் வடமொழிப்புலமை நிறைந்தவர் என்பதை வலியுறுத்துஞ் சான்றுகள். இவை பற்றிய விளக்கங்களைக் கீழே குறிக்கப்படும் பக்கங்களிற் காண்க.

1. ஆனந்தரியம், சம்பந்தம் — 5 (பக்கம்)
2. கேட்போர், யாப்பு — 9 ,,
3. அதிகாரம் —25 ,,
4. எழுத்துக்களின் முறை வைப்பில் சந்தியக்கரம் — 38 ,,
5. எழுத்துக்கள் பதமாதல் — 59 ,,

## தொல்காப்பியர் கருத்தொடு நன்னூலார் கருத்து ஒத்தது என்பதற்கு விருத்தியுரைகாரர் வலிந்து பொருத்திக்காட்டும் இடங்கள்:-

1. முதற்கண், உயிரெழுத்துக்களின் முறைவைப் பினைக் கூறுங்காலத்து 'எ, ஒ, ஐ, ஔ என்னும் எழுத் துக்கள் கூட்டொலிகளாகும்' என்பதை வலியுறுத்தற்குப் பல சான்றுகளைக் காட்டுகின்றார். இங்குத் தொல்காப்பியர்

ஐ, ஔ பற்றிக் கூறிய நூற்பாக்களையும் எடுத்துக்காட்டித் தங்கருத்தை வலியுறுத்துகின்றார்.

அகர இகரம் ஐகாரமாகும்

அகர உகரம் ஔகாரமாகும் என்பன தொல்காப்பியத்துள் எழுத்துப்போலிபற்றிக் கூறும் நூற்பாக்களாகும். ஆனால் விருத்தியுரைகாரர் அவற்றைப் போலியாகக் கொள்ளாது அவை கூட்டொலி (சந்தியக்கரம்) பற்றிக் கூறும் நூற்பாக்களேயாகும் எனக்கூறித் தொல்காப்பியர் கருத்தொடு நன்னூலார் கருத்து ஒத்துள்ளது என்று வலிந்து பொருத்திக் காட்டுகின்றார்.

2. இனி, 'எழுத்தே தனிந்துந் தொடர்ந்தும்...' என்புழி எழுத்துக்கள் தொடர்ந்து மொழியாகும் முறைபற்றி விளக்கும்போது இவ்வாறே பொருத்திக்காட்டுகின்றார். இதுபற்றிய விளக்கத்தை 59ஆம் பக்கம் காண்க.

(79, 118)

## சிவஞானமுனிவர் எடுத்தாளும் உவமைகள்.

1 மரத்தினது பராரையினின்றும், கவடு, கோடு... எனப்பலவாய் ஒன்றேடொன்று தொடர்பட்டு எழுந்து நிற்றல் போல.

2 ஒருவர்க்கு மைந்தனுயினுன் மற்றெருவர்க்குத் தந்தையாயினுற் போல. ( 7)

3 வேந்தன் இருந்துழியிருந்து தன்னிலமுழுதும் தன்னுணையின் நடப்பச்செய்வது போல.

4 சென்று நடாத்துந் தண்டத்தலைவர் போல.

5 சிதலது நீர்வாய்ச்சிறுதுகளாற் பெரும்புற்றுருவமைந்த பெற்றிய தென்ன.

6 நரமடங்கல் போல. ( 58)

7 நீரும்நீரும் சேர்ந்தாற்போல. ( 73)

8 இருசிறகெழுப்ப எழும் உடலது போல. ( 92)

9 முடவன் கோலூன்றிவந்தாற்போல. (106)

10 அப்பொடு பெய்த உப்பேபோல. (109)

11 அரிசனம் முதலியவற்ருல் சமைத்த சுண்ணம் போலாது, மலராற் சமைத்த மாலே போல. (127,128)

12 தன்னியல்பில் நிற்கும் ஒருவனுடைய உள்ளத்தை ஆடை அணி முதலியவற்ருேடு ஒருத்தி முன்னின்று தன்னிடத்து அவாவ விகாரப்படுத்தல் போல. (133)

13 மெய்யினியக்கம் அகரமொடு சிவணும் என்ருற் போல. (135)

14 மெய்யினியக்கம் அகரமொடு சிவணும் என்ற அகரம் பன்னீருயிரும் மெய்யொடு புணரவருங் காலத்து நீங்கினுற்போல. (136)

15 தந்தையைக்குறிக்க மகனெனப்பட்டான் ஒருவன், தன்மகனைக்குறிக்கத் தந்தையாயினுற் போல. (139)

16 'மா' முதலியன பராரைமுதலிய சினேயொடு நின்றன, எனக்கண்டது கூறுவார்போல. (141)

17 கமுகந்தோட்டம் என்ருற்போல. (151)

18 தாய்மலடி என்ருற்போலும். (152)

19 வாழை பழம், கீரைகறி என்ருற்போலும். (158)

20 யாக்கையும் உயிரும்போல; இரட்டையிலே போல. (204)

21 தெய்வம் என்ருற்போல. (211)

22 எழுந்திருந்து என்பதற்கு இருந்து என்பதனை அசைநிலேயாக்கி எழுந்து என ஒருபொருள் கோடல் போல. (255)

---

14,15-இவ்விரண்டும் இலக்கணத்திற்கு இலக்கணத்தையே உவமையாகக் கூறியுள்ளதற்குச்சான்றுகளாகும்.

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | | திருத்தம் |
|---|---|---|---|---|
| 16 | 30 | என்ருர்போலும் | — | என்ருற்போலும் |
| 25 | 27 | 257 | — | 202 |
| 37 | 12 | இ-மேற்பல் | — | வ்-மேற்பல் |
| 59 | 26 | தொடர்ந்தும் | — | தொடர்ந்தும் |
| 69 | 15 | அகாரம்என | — | ஆகாரம்என |
| 80 | 23 | பெற்ருன்(த்) | — | பெற்ருன்(ற்) |
| 88 | 27 | இவ் + யல் | — | இவ்வியல் |

# சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் முதனிலைத் தேர்வு வினுக்கள்.

## எழுத்ததிகாரம்

**பாயிரம்** பக்கம்

1. நன்னூல் ஐந்திலக்கணமுமுணர்த்தும் நூலாக இருந்தது என்பதற்கு ஆதாரங்கள் என்ன? (1955) 2

2. ஆக்கியோன்பெயர் முதலிய எட்டனையும் முன்னர் உணர்த்தற்கு விருத்தியுரைகாரர் கூறுங் காரணத்தை எழுதுக. (1961) 4

3. பயனுக்குப் பயனுவது இன்னதுஎன்று குறித்து, நன்னூலார் இயற்றமிழ் ஒன்றற்குமட்டும் இலக்கணங் கூறிய காரணத்தை எழுதுக. (1961) 7

4. பொதுவெனவும் சிறப்பெனவும் பாயிரம் இரு பகுதிப்பட்டதன் காரணத்தை விளக்குக. (1959) 8

5. 'முனைவன்கண்டது முதனூலாகும்' என ஒருமை யாற் கூறியவர் 'முன்னோர் நூல்' எனப்பன்மை யாற் கூறியது ஏன்? (1958) 12

6. மதம் ஏழனுள்ளும் அழகுபத்தனுள்ளும் வருவன சில உத்திவகையுள்ளும் காணப்படுவதற்கு விருத்தியுரைகாரர் கூறுங் காரணம் யாது? (1958) 14

7. நேரினமணியை நிரல்பட வைத்தாங்கு ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது—இதனுல் விளக்கப் படுவது யாது? (1956) 15

8. 'பிண்டந்தொகை......' என்ற நூற்பாவில் குறி, செய்கை என்பதற்கு உரைகாரர் தரும் பொருளை எழுதுக. (1962) 16

9. எல்லாச்சூத்திரங்களும் பிண்டம், தொகை, வகை, புறனடை என்னும் நான்கனுள் அடங்கு

வதாக இருக்க, குறியிணையும் செய்கையிணையும் வேறுபாடு யாது? (1961) 17

10. நூல்களை எவ்வாறு கற்றல் வேண்டும்? (1957) 22

11. நூற்குப்பெயரெய்தும் முறையை எடுத்துக்காட்டால் விளக்குக. (1963) 24

12. பாயிரம் நூல்களுக்கு இன்றியமையாதது என்பதனைச் சூத்திரங்கொண்டு நிறுவுக. (1957) 25

**எழுத்தியல்.**

1. அதிகாரம் என்பதற்குக் கூறப்படும் விசேடப் பொருளை எழுதுக. (1962) 25

2. எழுத்திலக்கணத்தின் பன்னிருபகுப்புக்கள் யாவை? அவை எவ்வாறு முறைப்படுத்தி வைக்கப் பெற்றுள்ளன? (1956) 26

3. 'மொழிமுதற் காரணமா மணுத்திரளொலி' இதன் விசேடவுரையை எழுதுக. (1964)
(அல்லது)
'இவ்வாசிரியர்க்கு மாயை உடன்பாடன்று' என விருத்தியுரைகாரர் உணர்த்துமிடத்தைக் காரணத்துடன் புலப்படுத்துக. (1958) 27

4. தொல்காப்பியர் சார்பெழுத்து மூன்று என்று கூறியிருக்க நன்னூலார் பத்து எனல் பொருந்துமா? ஆய்க. (1962) 29

5. 'இடுகுறி காரணப்பெயர் பொதுச்சிறப்பின' இதனை எழுத்தியலிற் கூறக் காரணமென்ன? (1960) 32

6. சிறப்பினும் இனத்தினும் செறிந்தீண் டம்முதல் நடத்தல் தானே முறையாகும்மே—விளக்கவுரை தருக. (1958,59) 34

7, உயிரளபெடை இருபத்தொன்றாதல் எவ்வாறு? (1956) 40

8. ஒற்றளபெடையாவது யாது? அது நாற்பத்தி ரண்டாதல் எவ்வாறு? (1955) 43,44

9. குற்றியலுகரம் முப்பத்தாறு எனப் பவணந்தியார் கூறுவது எம்முறைபற்றி? வேறுவகையாற் கொள்ளுங்கால் நேருங் குறைபாடு யாது? விளக்குக. (1963) 45,47

10. 'ணனமுன்னும் வஃகான் மிசையுமக்குறுகும்' இஃது உய்த்துணரவைப் பென்னும் உத்தி என்பர்—விளக்குக. (1961,64) 50

11. 'நின்றநெறியே உயிர்மெய் முதலீறே'— இது சிங்கநோக்காவது எவ்வாறு? இதற்குப் பொருந்தாவுரை எது? ஏன்? (1959,61) 51

12. உயிர்மெய்யினை ஓரெழுத்தாக எண்ணியவர், 'நின்றநெறியே உயிர்மெய்முதலீறே' என்று கூறுதல் பொருந்துமா? ஆய்க. (1962) 52

13. 'அம்முனிகரம் யகரம்...'என்ற நூற்பாவிற்குக் கூறப்படும் இருவகைப் பொருள்களையும் எழுதுக. (1964) 57

**பதவியல்.**

1. 'எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள் தரின்'–கோடிட்ட இடத்திற்கு விசேடப் பொருள் தருக. (1962) 61

2. வினைக்குறிப்புப்பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் வேற்றுமை யாது? (1958) 64

3. பொருளாதியாறனடியாகப் பிறந்த பகுபதம் எவ்வாறு பெயராகவும் வினையாகவும் வரும்? (1955) 65

4. பகுதி, விகுதி, சாரியை, சந்தி என்பவை காரணப் பெயர்கள்—விருத்தியுரை கொண்டு விளக்குக. (1960) 65

5. எழுத்தியலிற் கூறப்படும் சாரியைக்கும் பதவிய லிற் கூறப்படும் சாரியைக்குமுள்ள வேறுபாடு என்ன? (1956) 69

6. பதவியலில் 'ஆறினும் ஏற்பவை முன்னிப் புணர்ப்ப முடியும் எப்பதங்களும்' என்று கூறிய ஆசிரியர் அவ்வியலில் பகுதி விகுதி இடைநிலை என்னும் மூன்றைமட்டும் கூறியதேன்? (1955) 70

7. ஈறுபோதல்........பண்பிற்கியல்பே'— இச்சூத்தி ரத்தை எடுத்துக்காட்டுடன் விளக்குக. (1957) 71

8. 'ஈறுபோதல்—' என்ற நூற்பாவில் கெடுதல் என்னுது 'போதல்' என்றும் 'இனையவும்' என் றும் கூறியதற்கு விருத்தியுரைகாரர் தரும் விளக் கம் யாது? (1960) 72

9, 'எய்திய இருபான் மூன்றுமீற்றவும்......பதமே'-- இதில் இருபான் மூன்றுமீற்றது என்றது எவற்றை? ஈற்றில்வரும் எழுத்துக்களுள் ஒழிக் கப்பட்ட எழுத்து எது? ஏன்? (1956) 73

10. 'றவ்வொடுகரம்—' என்ற நூற்பாவில் 'செய்யு நிகழ்பெதிர்வும்' என்ற இலக்கணம் எச்சத் திற்கா? முற்றிற்கா? ஆய்க. (1962) 81

11. புக்கான், என்றிசினோர், நடவாநின்றான், வாழி, உண்கும், சேறி-எவையேனும் ஆறனுக்குப் பகு பதவுறுப்புத்தந்து முடித்துக்காட்டுக. (1953) 83

12. 'எட்டேயவ்வும் முப்பதுசயவும், மேலொன்று சடவும் இரண்டு சதவும்'—பொருள் கூறி இரண் டற்கு உதாரணம் தருக. (1961) 86

13. பத்மம், ரத்நம், சுக்ரன், வனிதா என்ற வடமொழிச்சொற்களைத் தமிழில் எவ்வாறு எழுதவேண்டும்? விதியுங்கூறுக. (1963) 88

**புணரியல்கள்.**

1. 'மெய்யுயிர் முதலீரும்...' என்பதை 'உயிர்மெய் முதலீரும்—' என்றும் 'அல்வழி வேற்றுமைப் பொருளில்' என்பதை வேற்றுமையல்வழிப் பொருளில்' என்றும் மாற்றிக் கூறுவதால் வருங் குற்றமென்ன? (1955) 89

2. வேற்றுமைப்புணர்ச்சி, அல்வழிப்புணர்ச்சி— இவற்றை விளக்கி அல்வழிப்புணர்ச்சிக்குரிய எடுத்துக்காட்டுக்களைத் தருக. (1960) 90

3. உயிரீற்றுப்புணரியலிற் கூறப்படும் புணர்ச்சி விகாரத்திற்கும், செய்யுள்விகாரத்திற்கும் உள்ள வேறுபாடு என்ன? (1955) 93

4. 'ஒருபுணர்க் கிரண்டும் மூன்றும் உறப்பெறும்' என்னும் விதியை எடுத்துக்காட்டுடன் விளக்குக. (1956) 93

5. வாழைபழம், கீரைகறி என்ற எடுத்துக்காட்டுக்கள் யாண்டுவந்துள்ளன? விளக்குக. (1962) 94

6. முன்னிலைவினைமுற்றும் ஏவல்வினைமுற்றும் வல்லினம் வருங்கால் எவ்வாறு புணரும்? (1956) 98

7. 'முற்றுமற்றொரோவழி', 'மவ்வீறொற்றழிந்து உயிரீறொப்பவும்' என்பவற்றுள் 'அற்று' என்றும், 'ஒப்பவும்' என்றும் கூறிய மாட்டேற்றுற் கொள்ளும்விதிகள் என்ன? (1955) 101

8. 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும் விதவாதனமன்னே''—எடுத்துக்காட்டு டன் விளக்குக. (1955) 101

9. 'அல்வழி யாமா மியாமுற்று முன்மிகா'— விளக்குக. (1959) 105

10. 'அல்வழி இஐ முன்னராயின் இயல்பும் மிகலும் விகற்பமுமாகும்' உரைகூறி விளக்குக. (1956) 107

11. ''பவ்வீ நீமீ முன்னர் அல்வழி இயல்பாம்''-என்ற விதி 'பொதுப்பெயர் உயர்திணைப்பெயர்கள்'' என்ற சூத்திரவிதியுள் அடங்காதோ? வேறு கூறியது என்னை? (1961,62) 106

12. நெடிற்றொடர்க்குற்றுகரம் வேற்றுமைக்கண்ணும் அல்வழிக்கண்ணும் எவ்வாறாகும்? எடுத்துக் காட்டுத் தருக. (1959) 106

13. "திசையொடு திசையும் பிறவும்சேரின்...பிற" இவ்விதியை விளக்குக. ஏற்புழிக் கோடல் என்ற உத்தியால் கொள்ளத்தக்கது யாது? (1956) 108

14. 'உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்' இதன்பொருளை எடுத்துக்காட்டுடன் விளக்குக. (1957) 125

15. 'விகுதிபதஞ்சாரியை......கொளலே'— இதற்குப் பொருந்துமுரை பொருந்தாவுரைகள் எவை? (1959) 127

16. மருத்துப்பை, தெம்முனை, இற்றைநாள், தேக்குடம், காட்டரண்–எவையேனும் மூன்றற்குப் புணர்ச்சிவிதி கூறுக. (1960)

17. கூப்புகரம், ஆட்டுக்கால், பனந்திரள்-இவற்றிற்குப் புணர்ச்சிவிதி தருக. (1964)

18. பாரிசேடம் என்றால் என்ன? உதாரணத்துடன் விளக்குக. (1964) 138

19. 'பிறிதொடுபடாஅன் தன்மதங்கொளல்' என்ற மதத்திற்கு ஓர் உதாரணந்தந்து விளக்குக. (1962) 141

20. அருத்தாபத்தியாற் கொள்ளும் இலக்கணத்திற்கு ஓர் உதாரணந்தந்து விளக்குக. (1962) 138

21. சிவஞானமுனிவர், வடமொழிப்புலமையும் நிரம்பியவர். ஆதாரந்தருக. (1961) 141

22. தொல்காப்பியர்கருத்தொடு நன்னூலார் கருத்து ஒத்தது என்பதற்கு விருத்தியுரைகாரர் வலிந்து பொருத்திக்காட்டும் இடங்களில் இரண்டினைக் குறிக்க. (1961) 141



அச்சிட்டோர்: திருவருள் அச்சகம், தேரிப்பாளையம், மதுரை–2,

## ஆசிரியரின் பிறநூல்கள்!

| | | |
|---|---|---|
| 1. | தொல்காப்பிய வழிகாட்டி (சேனாவரையம்) | 3-00. |
| 2. | நன்னூல் உரைத்தெளிவு (சொல்லதிகாரம்) | அச்சில் |